ஸ்ரீ

ஸ்ரீ ஆண்டாள் அருளிச்செய்த

# திருப்பாவை தெளிவுரை




உரையாசிரியர் – சொல்லின் செல்வர்

அருளிச்செயல் அரும்பணிச் செம்மல்

டாக்டர். இரா. வ. கமலக்கண்ணன்

எம்.ஏ., பி.எச்.டி., பி.எட்.,



திருவேங்கடவன் பதிப்பகம்,

காஞ்சிபுரம்.

ஸ்ரீ:

ஸ்ரீ ஆண்டாள் அருளிச்செய்த

# திருப்பாவை தெளிவுரை

உரையாசிரியர்-சொல்லின் செல்வர்,

அருளிச்செயல் அரும்பணிச் செம்மல்,

டாக்டர். **இரா. வ. கமலக்கண்ணன்,**

எம்.ஏ., பி.எச்.டி, பி.எட்.,

திருவேங்கடவன் பதிப்பகம்,

காஞ்சிபுரம்.

ஸ்ரீ:

# திருப்பாவை-தெளிவுரை


| | | |
|---|---|---|
| 1. நூலாசிரியர் | : | டாக்டர்.இரா.வ.கமலக்கண்ணன் |
| 2. முதல் பதிப்பு | : | ஏப்ரல் 2007 |
| 3. பதிப்புரிமை | : | ஆசிரியருக்கு |
| 4. நூலின் அளவு | : | 1/8 அளவு |
| 5. தாளின் தன்மை | : | 14.2 டபுள் டிம்மி அளவு |
| 6. அச்செழுத்து அளவு | : | 10 புள்ளிகள் |
| 7. நூல் கட்டுமானம் | : | பகுதித் தையல், சாதாரண அட்டை பைண்டிங் |
| 8. மொத்த பக்கங்கள் | : | 224 பக்கங்கள் |
| 9. ஒளி அச்சு | : | சரவணா கிராபிக்ஸ் |
| 10.மேலட்டை வடிவமைப்பு | : | வி.சிவா, வி.ரமேஷ் |
| 12.அச்சிட்டோர் | : | சரவணா கிராபிக்ஸ்,<br>நெ.4-ஏ விளக்கடி கோயில் தெரு,<br>காஞ்சிபுரம்-631 502. |
| 13. வெளியீடு-மற்றும் நூல் கிடைக்குமிடம் | : | திருவேங்கடவன் பதிப்பகம்<br>8,கக்கன்சாலை, அழகானந்தம் நகர்,<br>செவிலிமேடு அஞ்சல், காஞ்சிபுரம்.<br>அ.கு.எண்.631 502.<br>தொ.பே.சி.எண்.044-67272932 |
| 14. படிகள் | : | 1000 |
| 15. விலை | : | ரூ.80 (எண்பது) |

**This book is Published with the Financial Assistance of Thirumalai -Thiruppathi-Devasthanam under their scheme "Aid to Publish Religious Books".**


## DECLARATION:



காணிக்கை: பரம பாகவதர்களின் திருவடிகளுக்கு

பேராசிரியர்.அ.பாண்டுரங்கன்,
தமிழியல் துறைத் தலைவர் (ஓய்வு)
புதுவைப் பல்கலைக் கழகம்,
புதுச்சேரி–605 014.

ஸ்ரீ அன்னை
30–19 ஆவது குறுக்குத்தெரு,
அவ்வை நகர்,
புதுவை–605 008.

## அணிந்துரை

ஆழ்வார்கள் பன்னிருவருள் கோதை நாச்சியார் தனிச்சிறப்பு மிக்கவர். நம்மாழ்வார், திருமங்கையாழ்வார் ஆகியோர் பகவானிடம் தாம் கொண்ட காதலைத் துல்லியமாக விளக்கும் பொருட்டுப் பெண்மையைத் தம்மேல் ஏற்றிக் கொண்டு, பராங்குச நாயகியாகவும் பரகால நாயகியாகவும் பெண்ணுடை தரித்துப் பாடுவர். ஆணாகத் தோன்றிய அவ் ஆழ்வார்கள் பெண் இயல்புகளில் எவ்வளவோ இழிந்தும், அவர்களுடைய நாயக நாயகி பாவப் பாசுரங்கள் மேட்டுமடையாகவே திகழ்கின்றன என்று பூர்வாசாரியர்கள் மதிப்பிடுவர். ஆனால், அவர்களுக்கு மாறாகப் பெண்ணாகப் பிறந்த கோதையார் பகவானின் பல்வேறு அவதாரங்களில்–சிறப்பாகக் கிருஷ்ணாவதாரத்தில் தம்மையே இழந்து பாடியருளியுள்ள பாசுரங்கள் மானுடப் பெண் பகவானின் மீது பாடியுள்ள காதல் பாசுரங்களுக்கு எல்லை நிலமாகின்றன. நாச்சியாரின் பாசுரங்களைப் பூர்வாசாரியர்கள் பள்ளமடை என்று போற்றிப் பாராட்டுவர்.

கோதை நாச்சியாரால் பாடப் பெற்று நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் முதலாயிரத்தில் அடைவு செய்யப்பட்டுள்ள நாச்சியார் திருமொழியினும், முப்பதே முப்பது பாசுரங்களால் முற்றுப் பெறுகின்ற திருப்பாவையே அன்றிலிருந்து இன்று வரை எல்லாராலும் போற்றிப் புகழ்ந்து பாராட்டப்பட்டு வருகின்றது. மாதங்களில் சிறந்ததான மார்கழியில் பண்டைக் காலம் தொட்டே தமிழ்நாட்டுப் பெண்கள் புலர் விடியலில் எழுந்து, நீராடித் திருக்கோவில்களுக்குச் சென்று தத்தம் தெய்வங்களைப் பாடல்களால் பாடிப் பரவிப் பரவசம் பெற்றுவந்துள்ளனர். அவ்வகையில் வைணவர்களால் மார்கழித் திங்களில் திருக்கோவில்களிலும் இல்லங்களிலும் திருப்பாவை தவறாது சேவிக்கப்பட்டு வருகின்றது. அத்தகு பெருமை மிக்க

திருப்பாவைக்குப் பேராசிரியர் முனைவர்.இரா.வ.கமலக்கண்ணன் அவர்கள் பூர்வாசாரியர்களின் உரைகளைத் தழுவியும் தமிழ் இலக்கண இலக்கிய மரபுகளோடு ஒப்பிட்டும் உறழ்ந்தும் ஓர் அரிய உரையை – பழகு தமிழில் புத்துரையாக எழுதிக் கொடுத்து நமக்கெல்லாம் பேருதவி செய்துள்ளார்கள்.

முப்பதே பாசுரங்களைக் கொண்ட திருப்பாவை வேதத்தின் வித்தாகக் கருதப்பட்டு வருகின்றது. இப்பிரபந்தத்துக்கு பெரியவாச்சான் பிள்ளை தொடங்கிப் பூர்வாசாரியர்கள் பலரும் உரை வரைந்துள்ளனர். இவ்வுரைகள் ஈராயிரப்படி, நாலாயிரப்படி, ஆறாயிரப்படி என அதில் இடம் பெற்றுள்ள கிரந்தங்களின் அளவினைக் கொண்டு பெயரிடப்பட்டுள்ளன. தற்காலத்திலும் அமரர்.வை.மு.கோபாலகிருஷ்ணமாசாரியார் தொடங்கிப் பல்வேறு மகநீயர்கள் திருப்பாவைக்கு விளக்கவுரைகள் எழுதி உபகரித்துள்ளனர். பேரா.இரா.வ.கமலக்கண்ணனின் இந்நூல் அத்தகு ஏற்றமிகு உரைகளின் சாரமாக, பிழிவாக–நமக்குக் கிடைத்துள்ளது. தலைமுறை தலைமுறையாக எம்பெருமானுக்கென்றே ஆட்பட்ட சீரிய குடும்பத்தில் தோன்றிய நம் ஆசிரியர், தாம் இளமை தொட்டுப் பயின்று வந்த நூல்களிலிருந்து தேடித் தொகுத்து வைத்துள்ள குறிப்புகளின் துணை கொண்டு இந்நூலைத் திட்பமும் நுட்பமும் மிக்க நூலாக ஆக்கித் தந்துள்ளார். அன்னாரின் சாத்திரப் பயிற்சியும் இயற்றமிழ் நூல் புலமையும் உரையை வளம் பெறச் செய்துள்ளன.

இப்புத்துரைக்கு மகுடமாக ஆசிரியரின் அரிய ஆராய்ச்சி முன்னுரை திகழ்கின்றது. முப்பது பக்கங்களாக நீண்டுள்ள இம்முன்னுரையில் பாவை நோன்பின் தோற்றம், பாகவத புராணம் கூறும் காத்யாயினி நோன்புக்கும் திருப்பாவை கூறும் பாவை நோன்புக்கும் உள்ள தொடர்பு விளக்கப்படுகின்றது. சைவ சமயச் சார்பான திருவெம்பாவையுடன் திருப்பாவை ஒப்பிடப்பெறும் பகுதி சிறப்பாக அமைந்துள்ளது. இவ்விரண்டும் இருவேறு சமயச் சார்புடையன; எனினும் அவை ஒரு பொதுக் குறிக்கோளுடன் பாடப்பட்டுள்ளன என்று ஆசிரியர் ஆராய்ந்து கூறியிருப்பது அவருடைய புலமைக்குச் சான்றாக அமைகின்றது.

பண்டைத் தமிழகத்தில் கொண்டாடப்பட்ட தைந்நீராடலுக்கும் பாவை நோன்பு குறிக்கும் நீராடலுக்கும் உள்ள தொடர்பும் ஆராயப்பட்டுள்ளது. நீராட்டம் என்பது இடக்கரடக்கலாகக் கலவியையே குறிக்கின்றது என்பதனைச் சங்க இலக்கியங்களிலிருந்தும் சீவக சிந்தாமணி, வில்லிபாரதம் போன்ற பழந்தமிழ் இலக்கியங்களிலிருந்தும் எடுத்துக்காட்டுகள் தந்து ஆசிரியர் நிறுவியிருப்பது இவருடைய பரந்துப்பட்ட இலக்கியப் பயிற்சிக்குக் கட்டியம் கூறுகின்றது.

நாச்சியாரின் காதல் உள்ளத்தை மிகப் பொருத்தமாக மகான் ஸ்ரீ அரவிந்தரின் சாவித்திரி நூலிலிருந்து மேற்கோள் காட்டியிருப்பதும் இவருடைய விரிந்த பார்வைக்குச் சான்றாக அமைகின்றது. கோதையின் திருப்பாவை வேதம் அனைத்துக்கும் வித்து என்பதனை வெறும் மேற்கோளாக் காட்டாமல், எப்படித் திருப்பாவை வேதத்தின் வித்தாகப் பொலிகின்றது என்பதனை ஏழுபக்கங்களில் விரிவாக ஆசிரியர் விளக்கியுள்ளார். இவ்விளக்க உரை பேராசிரியரின் வைணவ சாத்திரப் புலமைக்குக்குன்றின் மேலிட்ட விளக்காக ஒளிருகின்றது.

கோதை நாச்சியார் பற்றிய வேதாந்த தேசிகரின் கோதாஸ்துதி என்னும் வடமொழித் தோத்திர நூலும், ஆண்டாள் சந்திரகலாமாலை என்னும் தமிழ் நூலும் கூறும் செய்திகளும் ஆராய்ச்சி முன்னுரையில் சுருக்கமாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன. சுருக்கமாகக் கூறுவதாயின், இம்முன்னுரை இந்நூலுக்கு மணி மகுடமாக விளங்குகிறது.

கோதை நாச்சியாரின் வரலாறும் திருப்பாவைத் தனியன்களின் பொருளும் தெளிவாக விளக்கப்பட்டுள்ளன. இவ்வாறு ஓர் அருமையான பின்புலத்தை நமக்குச் சுட்டிவிட்டு ஆசிரியர் நூலுக்குள் புகுகின்றார்.

ஒவ்வொரு பாசுரமும் முதலில் வைக்கப்பட்டு அதன் கீழ் அதன் பொதுப் பொருள் தரப்படுகின்றது. அதனைத் தொடர்ந்து அப்பாசுரத்தின் சிறப்புப் பொருள் விளக்கப்படுகின்றது. சிறப்பு விளக்கம் கூறும் பொழுது அப்பாசுரத்தில் இடம் பெற்றுள்ள சொல்லும் பொருளும் ஒத்து வருகின்ற ஏனைய ஆழ்வார் பாசுரங்களும் தமிழ் இலக்கியப் பகுதிகளும் ஒப்புமையாக எடுத்துக்

காட்டி விளக்கப்படுகின்றன. அதனை அடுத்து, அப்பாசுரத்தில் இடம் பெற்றுள்ள வைணவ சமயச் சாத்திரக் கருத்துகள் சுருக்கமாக எடுத்துக் காட்டப்படுகின்றன. பாசுரங்களின் யாப்புப் பற்றியும் சொல்லின் அமைப்புக் குறித்தும் வேண்டிய இடங்களில் விளக்கி உரைக்கப்பட்டுள்ளன. திருப்பாவை முழுவதும் பெரும்பாலும் வெண்டளையால் வந்த எட்டு அடி நான்குசீர் ஒருவிகற்பக் கொச்சகக் கலிப்பா என்னும் யாப்பியல் நுட்பம் புலப்படுத்தப்பட்டுள்ளது. ஒவ்வொரு பாடலிலும் வரும் “ஏலோர் எம்பாவாய்” என்பது அடி நிறைக்க வந்த சொற்றொடர் என்று ஆசிரியர் கூறியிருப்பது ஆராய்வதற்குரியது.

“ஓங்கி உலகளந்த........” எனத் தொடங்கும் மூன்றாம் பாசுரத்தில் இடம் பெற்றுள்ள “திங்கள் மும்மாரி பெய்து.........நீங்காத செல்வம் நிறைந்து...” என்னும் சொற்கள் பற்றி இவர் ஆராய்கின்றார். இச்சொற்கள் ‘பெய்ய’, ‘நிறைய’, என்னும் பொருள் தரும் சொற்கள் என்று விளக்கி அவற்றை எச்சத்தின் திரிபுகளாக விளக்குவது ஆசிரியரின் இலக்கணப் புலமைக்குச் சான்றாக அமைகின்றது.

பாடல்களின் பொருளை விளக்கும்போது சில சமயங்களில் அடிகள் இடம் பெயர்ந்து நிற்கும் ; அவற்றைக் கொண்டுகூட்டிப் பொருளை விளக்குதல் வேண்டும். இதனை ‘அந்வயப்படுத்தல்’ என்பர். இவ்வுரை நூலில் ‘மாயனை மன்னு வடமதுரை மைந்தனை’.... எனத் தொடங்கும் பாசுரம் இவ்வாறு அந்வயம் செய்யப்பட்டுள்ளது. ‘தூயோமாய் வந்து நாம் தூமலர் தூவித் தொழுது வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்க, போய பிழையும் புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசாகும் (ஆதலால்) மாயனை.....தாமோதரனைச் செப்பு’ என்று ஆசிரியர் அந்வயப்படுத்தியிருப்பது பாராட்டும்படியாக உள்ளது.

எட்டாம் பாசுரத்தில் இடம் பெற்றுள்ள, “எருமை சிறு வீடு மேய்வான் பரந்தன காண்” –என்னும் அடியில் இடம் பெற்றுள்ள “எருமை சிறு வீடு மேய்தல்” –என்றால் என்ன என்பது மிக அருமையாக விளக்கப்பட்டுள்ளது.

பத்தாம் பாசுரத்தின் முதலடியில் இடம் பெற்றுள்ள ‘அம்மனாய்’ என்னும் விளித்தொடர் முன்னிலைக்கு உரியது

ஆனால், அடுத்த அடி 'மாற்றமும் தாராரோ வாசல் திறவாதார்' எனப் படர்க்கைப் பன்மையில் தொடர் முடிகின்றது. இவ்வாறு முரண்பட வருதல் பொருந்துமா என்னும் வினாவை எழுப்பிக் கொண்டு பொருத்தமான விடை கூறியிருப்பது ஆசிரியரின் ஆய்வுப் புலமைக்குச் சான்றாக அமைகின்றது.

பதினைந்தாம் பாசுரத்தில் இடம் பெற்றுள்ள 'போதர்கின்றேன்' என்னும் சொல்லின் ஆட்சி ஆழ்வார் பாசுரங்களில் எடுத்துக் காட்டப்பட்டு அது சரியான வடிவமே என்று நிறுவப்படுகின்றது. 'போதருகின்றேன்' என்று திருத்தி ஓதினால் வெண்டளை பிறழும் என்னும் நுட்பம் ஆசிரியரால் சுட்டிக் காட்டப்படுகின்றது.

ஆழ்வார் பாசுரங்களில் கண்ணனின் காதலியாகப் பேசப்பெறும் நப்பின்னைப் பிராட்டி பற்றிய விளக்கமும் ஆசிரியரால் தரப்பட்டுள்ளது. 21 ஆம் பாசுரத்தில் இடம் பெற்றுள்ள, 'அடிபணியுமாபோல' என்னும் தொடரில் உள்ள 'பணியுமா' என்னும் சொல் 'பணியுமாறு' என்னும் சொல்லின் குறுக்கம் என்று விளக்கப்பட்டுள்ளது.

ஆழ்வார் பாசுரங்கள் வழிபாட்டில் இருப்பதால், சேவிப்போர் சில சமயங்களில் பாடல்களைப் பிழையாகச் சேவிப்பதும் உண்டு. திருப்பாவையும் இதற்கு விதிவிலக்கு அன்று. 'மாரி மலை முழைஞ்சில்' எனத் தொடங்கும் 23ஆம் பாசுரம் சேவிக்கப்படும் பொழுது 'கோயில் நின்றும் இங்கனே' என்றும் 'சீரிய சிங்காசனத்திலிருந்து' என்றும் சில இடங்களில் தவறாகச் சேவிக்கப்படுகின்றன. இவ்வாறு சேவித்தால் பாடலின் வெண்டளை பிறழ்கின்றது என்பதனைச் சுட்டிக் காட்டும் உரையாசிரியர், 'கோயில் நின்றிங்கனே', 'சீரிய சிங்காசனத்திருந்து' என்னும் தொடர்களே பொருத்தமான பாடங்கள் என்று சுட்டிக்காட்டி இருப்பது ஆசிரியரின் கூர்த்த மதிக்குச் சான்றாகும். இவ்உரையில் கோவிந்த நாமத்தின் பெருமையையும் உரையாசிரியர் மிகத் தெளிவாக விளக்கியுள்ளார். நாராயண நாமம் மேன்மையைக் குறிக்கும் ; கோவிந்த நாமமோ அவனுடைய எளிமையைக் குறிக்கும் என்று ஆசிரியர் விளக்குகின்றார். இவ்வாறு இந்நூல் அரிய பொருள்களைக் கொண்ட கருவூலமாகத் திகழ்கின்றது.

திருப்பாவைக்கு நூற்றுக் கணக்கில் உரைகள் வரையப்பட்டுள்ளன; புதிதாக உரைகள் வந்து கொண்டே இருக்கின்றன. அவ்வுரைகளில் இதுவும் ஒன்று என்று விலக்க ஒண்ணாதபடி என்றும் நின்று நிலைக்கக் கூடிய உரையாக இந்நூல் திகழ்கின்றது.

முனைவர் இரா.வ.கமலக்கண்ணன் என் கெழுதகை நண்பர்; பல்லாண்டுகளாக அடியேனுக்கு அவரோடு நெருங்கிய தொடர்பு. மறந்தும் புறந்தொழா மாண்புடைய குடியில் தோன்றிய பெருமகன் அவர். எத்தனையோ தொல்லைகள் வந்த போதும், சோதனைகள் நேர்ந்தபோதும் அவை எல்லாவற்றையும் எம்பெருமான் திருவடிகளில் ஒப்புவித்துவிட்டு அவன் உகக்கும் காரியங்களையே என்றும் செய்து வருபவர் அவர். அன்னாருடைய நூலுக்கு அடியேன் அணிந்துரை ஓர் உபசார வழக்கே அன்றி வேறில்லை.

எம்பெருமான் புலவர் பெருமானுக்கு எல்லா நலன்களையும் அருள்வானாக என்று விண்ணப்பிக்கும்,

அடியேன்,
**அ. பாண்டுரங்கன்.**

---

**"அத்தியூரான் புள்ளை ஊர்வான் அணிமணியின்**
**துத்திசேர் நாகத்தின் மேல் துயில்வான் முத்தீ**
**மறையாவான் மாகடல்நஞ் சுண்டான் தனக்கும்**
**இறையாவான் எங்கள் பிரான்."**

**– இரண்.திருவந்தாதி –96**

## திருப்பாவைச்செல்வத்திற்கு புது வரவு

பக்தியோகத்தின் உயிரோட்டத்தைக் கண்டு பிடித்தவர்கள் ஆழ்வார்கள். மகிழ்ச்சியிலும் துயரத்திலும் மனம் சிதறாமல், பகவானின் சௌம்யமான, மங்களகரமான உருவத்தைத் தியானித்து, இதயகமலத்தில் அவனைக்கண்டு, களித்து, சரணடைந்து வாழ்வை நடத்தும் வகையை மக்களுக்கு இனிய பாசுரங்கள் மூலம் கற்பித்தனர். சம்சார தாபத்தைத் தீர்க்கும் அதீதமான குளுமை இப்பாசுரங்களில் இருப்பதால் இவை ஒரு 'இன்பமாரி'. சம்சாரிகளின் தாபமென்ன, சாக்ஷாத் சர்வேசுவரனின் தாபத்தையே இப்பாசுரங்கள் தணித்துவிடுவதாக விஜயநகர சாம்ராஜ்யாதிபதியான ஸ்ரீ கிருஷ்ண தேவராயர் தமது ஆமுக்த மால்யத மகாகாவியத்தில் கூறுகிறார்:

"அலபந்தித்தரு ஸூருலந்துனு
ஸமுத்யல்லீலகா வுன்ன வெ
க்கல புந்தாபமும் பாபநாந்
நிஜ மன கஞ்சாத ஸஞ்சாத புஷ்கல
மாத்வீக ஜரின் முராரி ஸொகிபங்கான்
ஜொக்கி தன்யாத்முலௌ
இல பந்நித்தரு ஸூருலம் தலந்து
மோக்ஷேச்சாத்மனின் திவ்புலன்."

(துவாதச ஆதித்யர்களின் மத்தியில் சூரிய நாராயண மூர்த்தியாக வசிக்கும் பகவான் அந்தச் சூடு பொறுக்காமல், ஆழ்வார்கள் மனத்தில் தானாக மலர்ந்த தாமரைகளில் பொங்கும் பக்தியெனும் புஷ்கலமான மகரந்தத்தில் திளைத்துக் கொண்டு சுகமாக இருக்கிறான்.)

இப்படிப்பட்ட தண் தமிழ்ப்பாசுரங்களில், ஆண்டாளது திருப்பாவை தரும் முப்பது பாசுரங்களது இனிமையும், ஆழமும், உயிர்ப்பும், சுகானுபவமும் அழகும் படிக்கப் படிக்க, பாடப்பாட, அதிகரிப்பதாக இருக்கிறது. பாசுரங்களை நமக்கருளிய ஆண்டாளின் சரிதமே ஓர் இனிய கவிதையாக இருக்கிறது. அவளை நினைத்தாலே நமது துயரங்கள் தீயினில் தூசாகி விடுகின்றன. வியாக்கியான சக்கரவர்த்தி பெரியவாச்சான் பிள்ளையின் மூவாயிரப்படியில் தொடங்கி இன்றுவரை வெளிவந்துள்ள கோதைநாயகி திருப்பாவை பற்றிய ஒவ்வொரு நூலும் நமது

வாழ்க்கை வழிக்கே துணையாக அமைந்திருப்பது உண்மை. இந்தத் திருப்பாவை நூலகத்துக்கு டாக்டர் இரா.வ.கமலக்கண்ணன் அவர்களது ஸ்ரீ ஆண்டாள் அருளிச்செய்த திருப்பாவை தெளிவுரை கனிவான புதுவரவு.

தோரணவாயிலாக ஓர் 'ஆராய்ச்சி முன்னுரை'. மார்கழி நோன்புக்கு வேத விதி கிடையாது. நம் முன்னோர் செய்தபடி இன்றுவரை நடைபெறுகிறது என்றபின், சங்ககால இலக்கியமான பரிபாடலில் உள்ள தைந்நீராடலையும், வேறுபல சங்க இலக்கியச் செய்திகளையும் ஆசிரியர் முன் வைக்கிறார். ஆண்டாள் சரித்திரம், திருவெம்பாவையுடன் உள்ள ஒற்றுமை, வேற்றுமைகளும் குறிக்கப்பெறுகின்றன. திருப்பாவையின் உரையாசிரியர்கள், வேதாந்த தேசிகரின் கோதாஸ்துதி மற்றும் ஆண்டாள் சந்திரகலாமாலை பற்றிய குறிப்புகள் படிப்போருக்கு உதவியாக அமைந்துள்ளன. சம்பிரதாயத்தை ஒட்டி தனது உரையை ஆசிரியர் நடத்திச்செல்வது மிகவும் இரம்மியமாக இருக்கிறது. மேலும் ஆசிரியர், தமிழிலக்கியத்தைக் கற்றுணர்ந்து, அதில் தோய்ந்த எண்ணங்கள் மூலம் ஆங்காங்கே ஒரு புதுமையான கீற்றையும் வரைகிறார். பன்னிரண்டாம் பாசுரம் பற்றி உரையிடும்போது 'பால்சோர நனைத்து இல்லம் சேறாக்கும்' என்ற சொற்றொடர் கம்பனை நினைவூட்டுகிறதாம்:

**"சேலுண்ட ஒண்கணாரில் திரிகின்ற செங்காலன்னம்
மாலுண்ட நளினப் பள்ளி வளர்த்திய மழலைப்பிள்ளை
காலுண்ட சேற்றுமேதிக் கன்றுள்ளிக் கனைப்பச் சோர்ந்த
பாலுண்டு துயிலப் பச்சைத் தேரை தாலாட்டும் பண்ணை"**

இப்படிப் பல இடங்களில் திருப்பாவை கம்பனைச் சிறப்பாகப் பாதித்திருக்கிறது என்பதை அறியும்போது, தமிழிலக்கிய பரம்பரையின் தெள்ளிய நீரோட்டம் நமக்குப் புலனாகிறது. சிலப்பதிகாரம், திருவள்ளுவமாலை முதலிய நூல்களும் எட்டிப்பார்க்கின்றன. அது மட்டுமா? ஆங்கிலத்தில் ஸ்ரீ அரவிந்தர் அருளிய சாவித்திரி மகாகாவியம் கூட பொருத்தமான இடத்தில் அமர்ந்திருக்கிறது. ஒவ்வொரு பாசுரத்திற்கும் பொறுமையாக பொருள், சிறப்புப் பொருள் மற்றும் உள்ளுறை வழங்கப்படுகிறது. இவையனைத்தையும் ஒருங்கிணைந்து காணும்போது, ஒரு

முழுமையான நூல் தோன்றியுள்ளது கண்டு மகிழ்ச்சியாக இருக்கிறது.

திருப்பாவை பற்றி இன்னுமொரு நூலா? என்று மலையவேண்டாம். திருப்பாவை விளக்கங்களுக்கு அந்நூலில் காணும் ஓங்கு பெருஞ்செந்நெல் போல் வரம்பு கிடையாது. 'ஆகாசத்தை வெளியடைப்பது காணும்! ஆகாசத்திலே வரம்பில்லையே. திருவுலகளந்து அருளினவனைப்போலே' என்று ஆறாயிரப்படி கூறும். இந்நூல்கள் ஒட்டுமொத்தமாக நமக்கு ஜீவாதாரமான பக்தி ஸம்ருத்தியை அளிக்கவல்லவை. மணிப்பிரவாள உரைகளில் வந்துள்ள 'உழக்கிலே பதக்கிட்டாப்போலே திருவாய்ப்பாடியிலே ஐச்வர்யம் பெருத்தபடி' போன்ற சகஜமான தமிழை இவ்வுரையில் மீண்டும் படிக்கும்போது ஆனந்தமாக இருக்கிறது. டாக்டர்.கமலக்கண்ணன் ஆசிரியப்பணியில் இருந்தவராகையால் எளிமையான சொற்கள் மூலம் திருப்பாவைப்பாடம் நடத்திவிடுகிறார்.

திருப்பாவைப்பயிர் ஓங்கி வளரும் பயிர். வாடாத பயிர். நம் வாழ்வினை வளப்படுத்தும் பயிர். அதற்கு ஒரு பசுமையான, புதிய கதிரினைத் தந்துள்ள டாக்டர். கமலக்கண்ணன் அவர்களை மனமாரப்பாராட்டுகிறேன். கோதைநாயகியின் அருளாசி அவரை அரவணைத்து, அவர் வாழ்வில் நீங்காத செல்வம் நிறைந்து இருக்கவேணுமென ஆண்டாளைப் பிரார்த்திக்கிறேன். இச்சீரிய உரை நூலில் எனக்குமொரு இடம் அளித்ததற்கு என் நெஞ்சார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

டாக்டர். **பிரேமா நந்தகுமார்,**

முதல் திருமாளிகை,
91, தெற்குச் சித்திரை வீதி,
ஸ்ரீரங்கம்–620006.

---

**“ அற்றது பற்றெனில் உற்றது வீடுயிர்**
**செற்றது மன்னுறில் அற்றிறை பற்றே”**

**– திருவாய்மொழி 1 : 2:5**

# ஆராய்ச்சி முன்னுரை

மார்கழி நோன்பு:

நம் நாட்டில் வாழும் நன் மக்கள் யாவரும், அவரவர் நிலைக்கேற்பக் கருமங்களை நடத்தி வருகின்றனர். இச்செயல்களால் வினை மாசு தீர்ந்து அந்தக் கரணங்கள் (மனம், வாக்கு, காயம்) தூய்மையாகும். இவ்விரதங்கள் அவரவர்க்கு உரிய தெய்வத்தைப் பற்றியனவாய்ப் பெரும்பாலும் இம்மைப் பயன்கருதி நிகழ்த்தப்படுகின்றன. இவற்றுள் முன்னோர் பழமையாக மேற்கொண்டுவரும் முறையைப் பின்பற்றி நடைபெறும் நோன்புகள் சில உண்டு. பங்குனி மாதப் பௌர்ணமிக்குப் பின் நடைபெறும் காமன் நோன்பும் இத்தகையதே.

இவ்வாறு இல்லறத்தார், நிகழ்த்தி வந்த விரதங்களிலே 'மார்கழி நோன்பு' என்பதும் ஒன்று. இது பண்டைக் காலத்தில் சிறப்புற்று இருந்தது என்பதைத் திருப்பாவையாலும், மாணிக்கவாசகர் அருளிய திருவெம்பாவையாலும் அறிய முடியும். திருப்பாவை விரிவுரையின் தொடக்கத்தே ஸ்ரீபெரியவாச்சான் பிள்ளை என்ற பெரியார் இந்நோன்பு பற்றிக் குறிக்கும் இடத்து "இதற்கு மூலம் என்னெனில், மீமாம்சையிலே ஹோளாதிகரண ந்யாயத்தாலே' சிஷ்டாசாரஸித்தம். 'மேலையார் செய்வனகள்"என்று ஸ்ரீ ஆண்டாள் தானும் அருளிச் செய்தாள்" என்று எழுதுவதால் மார்கழி நோன்புக்கு வேதவிதி இல்லை என்பதும், ஆன்றோர் அனுஷ்டானமே அதற்கு மூலம் என்பதும் பண்டையோர் கொள்கை என்பதும் நன்கு விளங்கும். இதன் மூலவரலாற்றை ஆராய்தல் நலம்.

"கோகுலத்துள்ள ஆயர்கள் மழைபெய்யாக் குறையை நீக்க வேண்டிக் கண்ணனைத் தலைமையாக நியமித்துத் தங்கள் பெண்களை மார்கழி நோன்பு நோற்கச் சொல்ல, அவர்கள் அதற்கு இயைந்து பெருமானையும் தோழியரையும் அதிகாலையில் துயில் உணர்த்தி அழைத்துக் கொண்டு யமுனா நதியில் மார்கழி நீராடி நோற்று, கண்ணபிரானை நாயகனாகப் பெறும் தங்கள் விருப்பத்தை அடையப் பெற்றார்கள்" என்பதாம் என்று ஸ்ரீ பெரியவாச்சான் பிள்ளை அவர்கள் எழுதியுள்ளார். ஆயினும் ஸ்ரீமத் பாகவதம்-தசமஸ்கந்தம் 22ஆம் அத்தியாயத்தில் கண்ணன் கோவியர் துகில் கவர்ந்த சரிதம் கூறும் போது மார்கழி நோன்பு பற்றிய முக்கியமான செய்திகள் கூறப்படுகின்றன. அவை வருமாறு:

"அரசனே ! கோகுலத்துள்ள பெண்கள் ஏமந்தருதுவின் முதல் மாதத்தில் (மார்கழியில்) காத்யாயனீ பூஜையாகிய விரதத்தைத் தொடங்கி அவிசைப் புசித்துக் கொண்டு அதனை நடத்திவந்தார்கள். அருணோதயத்தில் அவர்கள் எழுந்திருந்து யமுனா நதியில் நீராடி, ஈர நுண்மணலால் காத்யாயனீ தேவியின் உருவத்தைச் சமைத்து, சந்தனம், மலர், தூபம்,தளிர், பழம் இவற்றாலும் சிறந்த நைவேத்தியங்களாலும் அத்தேவியை வழிபட்டனர். 'காத்யாயனீ ! ஏ மகாமாயே ! மகாயோகிணி ! ஈசுவரீ ! உன்னை வணங்குகிறோம் ; எங்களுக்குகந்த கோபியர் தலைவனாகிய கண்ணனை நாயகனாக அருள்வீராக" -என்ற இந்த மந்திரத்தை ஜபித்தவர்களாய் அவர்கள் கண்ணனைத் தியானித்துக் கொண்டு ஒரு மாத காலம் பூசை செய்து விரத்தைவிடாமல் நடத்திவந்தனர். அக்கோப கன்னியர் ஒருநாள், யமுனா நதியில் நீராடுவதற்காக அருணோதயத்தில் எழுந்திருந்து அவரவருடைய தோழியர்களின் பெயரைச் சொல்லிக் கூப்பிட்டு ஒருவருக்கொருவர் கையைக் கோத்துக் கொண்டும், கிருஷ்ண சரிதங்களைப் பாடிக் கொண்டும் நடந்து சென்றனர். அப்பெண்கள் யமுனா நதியின் ஒருபக்கம் சேர்ந்து அவ்விடத்தே, வழக்கப்படி தங்கள் ஆடைகளை அவிழ்த்து வைத்து விட்டுக் கண்ணன் சரித்திரங்களைக் கானம் செய்து கொண்டு நீரில் விளையாடுவாராயினர், பரமயோகிகளுக்கும் யோகியும் அளவில்லாத ஆற்றல் உடையவனுமாகிய கண்ணபிரான் கோபியர் அங்ஙனம் நீர்விளையாட்டு நிகழ்த்துவதறிந்து, அப்பெண்களின் விரதபலத்தை அளிப்பதற்காகத் தம் நண்பர்கள் சூழ அவ்விடம் சென்றார். "

என்றும்; சென்ற பெருமான் கரையிலிருந்த அம்மகளிர் துகில்களை எல்லாம் கவர்ந்து கொண்டு பக்கத்திலிருந்த கடம்ப மரத்தில், ஏறி நிற்க, நீராடி முடிந்த பெண்கள் ஆடையின்றி, கையது கொண்டு மெய்யது பொத்திக் கண்ணனிடம் வந்து தங்கள் துகில்களைத் தருமாறு பிரார்த்தித்த போது பெருமான் அவர்கள் அன்பைப் பலவகையிலும் சோதித்து முடிவில் அவரவர் ஆடைகளை அளித்து ,'பெண்களாகிய நீங்கள் எந்த நோக்கத்தைக் கொண்டு இவ்விரதத்தை நடத்தினீர்களோ அந்த நோக்கம் இன்று இரவில் என்னுடன் கூடி விளையாடுவதால் நிறைவேறும் ; எல்லாரும் கோகுலம் செல்லுங்கள் 'என்று நியமித்தருளினார்' என்றும் கூறப்படுகின்றன.

இதையும், பெரியவாச்சான் பிள்ளை அவர்கள் எழுதிய முன்வரலாற்றையும் கூட்டி நோக்குமிடத்து, நாடு வளம் குன்றியபோத மழைபெய்யவும், உத்தம நாயகர்களை அடைந்து இம்மை நலம் எய்தவும் வேண்டிக் கன்னியர் காத்யாயனீதேவியைக் குறித்து மார்கழி முழுவதும் நோற்பதும், அதன் பெயரிட்டு அவர்கள் வைகறையில் எழுந்திருந்து ஒருவரை ஒருவர் துயில் எழுப்பிச் சென்று நதிக்கரை அடைந்து நீராடித் தேவியின் பிரதிமை ஒன்றை அமைத்துத் தத்தம் விருப்பங்கள் நிறைவே வழிபடுவதும் பண்டைய மரபு என்பது பெறப்படுகிறது. இந்நோன்பு காத்யாயனீ சம்பந்தம் உடையது என்பதற்குத் திருப்பாவை மூலத்தில் ஆதாரம் இல்லையே என்று சிலர் ஐயுறக் கூடும். இதற்குத் திருப்பாவைப் பாசுரங்களின் ஈறுகளில் வரும் 'எம்பாவாய்' என்ற தொடர் பாகவதத்தில் கண்டவாறு, ஈரநுண்மணலால் அமைக்கப்பட்ட தேவியின் உருவத்தைப் பற்றியதாகக் கொள்ளுதல் பொருந்துமாயின், தேவீ சம்பந்தம் மூலத்தும் கூறப்பட்டதாகவே கொள்ளலாம். பாவை - கொல்லிப்பாவை போல, பெண் தெய்வத்தின் பிரதிமையைக் குறிப்பதாகும். 'நம் பாவைக்குச் செய்யும் கிரிசைகள்', 'நம்பாவைக்குச் சாற்றி நீராடினால்','பிள்ளைகள் எல்லாரும் பாவைக் களம் புக்கார்' எனவரும் திருப்பாவைத் தொடர்களிலும் பிரதிமை ஒன்று வைத்து வணங்கும் குறிப்புத் தோன்றக் காணலாம். ஆனால் பாவை-எனவரும் இடங்களுக்கெல்லாம் விரிவுரையில் 'நோன்பு' என்ற பொருளே தரப்பட்டுள்ளது. நோன்பு என்ற பெயரில் பாவை என்ற பெயர் வேறிடத்து வழங்குதல் அருமையாம்.

இனி, திருமால் பக்தியால் சிறந்தவர் தேவீ விரதத்தை மூலமாகக் கொண்டு ஒரு பிரபந்தம் பாடினர் எனல் தகுமோ என்று சிலர் சந்தேகிக்கக்கூடும். இச் செய்தி பாகவதத்தில் வருவதால், அதையே இவரும் கொண்டு கூறினார் எனில் அதனால் இழுக்குண்டாகுமோ? திருமாலைத் தன் நாயகனாக அடைய வேண்டி 'உன்னையும் உம்பியையும் தொழுதேன்' எனக் காமனையும் அவர் தம்பியாகிய சாமனையும் கூடத் தொழப்புக்க ஆண்டாள் (நாச்சியார் திருமொழி முதல் பதிகம்) தேவியை வேண்டி அப்பெருமானைப் பெற முயன்ற கோபியர் செய்தி கூறியதில் குற்றம் என்ன?

இனி திருவெம்பாவைப் பாடல்கள் ஒவ்வொரு செய்யுளும் 'எம்பாவாய்' என்றே முடிந்து நிற்பதோடு, 'போற்றி நாம் மார்கழி நீராடேலோ ரெம்பாவாய்' என மார்கழி வைகறையில் துயில் எழுப்பி நீராடி-கண்ணபிரானைக் கணவனாக அடைய ஆய்ச்சியர் வேண்டியது போல-சிவனடியாரைத் தம் நாயகராக அடைய வேண்டுவதை உணர்த்தியும் செல்வதாம். அன்றியும் ஆண்டாள், "ஆழிமழைக்கண்ணா" என்னும் பாசுரத்தில் நாடு செழிக்க மழை பெய்யும்படி வருணனை வேண்டியது போலவே,

'முன்னிக் கடலைச் சுருக்கி எழுந்துடையாள்
என்னத் திகழ்ந்தெம்மை ஆளுடையாள் இட்டிடையின்
மின்னிப் பொலிந்தெம் பிராட்டி திருவடிமேல்
பொன்னஞ் சிலம்பில் சிலம்பித் திருப்புருவம்
என்னச் சிலை குலவி நந்தெம்மை ஆளுடையாள்
தன்னிற் பிரிவில்லா எங்கோமான் அன்பர்க்கு
முன்னி அவள் நமக்கு முன் சுரக்கும் இன்னருளே
என்னப் பொழியாய் மழையேலோ ரெம்பாவாய்.

என்று மாணிக்கவாசகரும் மழைக் கடவுளை வேண்டிப்பாடுதல் காணலாம். இவற்றால் திருப்பாவையும் திருவெம்பாவையும் வேறு வேறு தெய்வச் சார்புடையன ஆயினும் ஒரே பொதுக் குறிப்புடையன என்பது தெளிவாகும். ஆனால் திருவெம்பாவையும் தேவீ சம்பந்தம் உடையது என்பதற்கு ஆதாரம் உண்டோ எனின் திருவாசகத்தின் ஒவ்வொரு பகுதிக்கும் அதனதன் பருப்பொருள் புலப்படுமாறு தலைப்புக்குறிப்புகள் அமைந்திருப்பதைப் பலரும் அறிவர். அங்ஙனம் திருவெம்பாவைக்கு அமைந்த தலைப்புக் குறிப்பு சக்தியை வியந்தது என்பதாம் இதனால் தேவியின் புகழ்ச்சியே திருவெம்பாவையின் கருத்து என்பது புலப்படும்.

நிற்க, பண்டைச் சங்கநூல்கள் வாயிலாகவும் இந்நோன்பு பற்றிய சில செய்திகள் தெரியவருகின்றன. வையையாற்றின் சிறப்பைக் கூறும் 11ஆம் பாடலில் இந்நோன்பின் வரலாறுகளை ஆசிரியர் நல்லந்துவனார் அடியில் வரும் அடிகளால் கூறுகிறார்.

"கனைக்கும் அதிர்குரல் கார்வான நீங்கப்
பனிப்படு பைதல் விதலைப் பருவத்து
மாயிருந் திங்கள் மறுநிறை ஆதிரை
விரிநூல் அந்தணர் விழவு தொடங்க
வெம்பா தாக வியனில வரைப்பென
அம்பா ஆடலின் ஆய்தொடிக் கன்னியர்
முனித்துறை முதல்வியர் முறைமை காட்டப்
பனிப்புலர் பாடிப் பருமணல் அருவியின்
ஊதை ஊர்தர உறைசிறை வேதியர்
நெறிநிமிர் நுடங்கழல் பேணிய சிறப்பிற்
றையன் மகளிர் ஈரணி புலர்த்தர;
வையை நினக்கு மடைவாய்த் தன்று;
மையாடல் ஆடல் மழபுலவர் மாறெழுந்து
பொய்யாட லாடும் புணர்ப்பின் அவரவர்
தீயெரிப் பாலும் செறிதவ முன் பற்றியோ
தாயருகா நின்று தவத்தைந் நீராடுதல்
நீயுரைத்தி வையை நதி " எனக் காண்க.

இதன் பொருள்: "கறுத்த மேகங்கள் இடிக்கும் குரல் நீங்கப் பனி மிகுதலால் குளிரால் நடுங்குதலை உடைய முன் பனிப்பருவத்தில், சூரிய வெப்பம் தாக்காத கடைமாரியையுடைய மார்கழி மாதத்திலே, நிறைமதி நாளாகிய திருவாதிரையில் ஆகமங்களை உணர்ந்த பூசகர் தெய்வத்திற்குத் திருவிழாவைத் தொடங்கின ராக,' பூமியானது மழைவளம் பெற்றுக் குளிர்வதாக' என்று சொல்லி, அம்பா ஆடலைச் செய்வதற்குக் கன்னிப் பெண்கள் கூடி, சடங்கறிந்த முதிய பார்ப்பனிமார் நோன்பு நோற்கும் முறையைத் தெரிவிக்க, பனியையுடைய அருணோதயத்திலே நீராடி, நீர்வாடை வீசுதலால் கரையில் தங்கி இருக்கும் அந்தணரது வேதாக்கினியை அக்கன்னியர் வணங்கினவராய், அவ்வக்கினியிலே தம் ஈரத்தைப் புலர்த்தி நிற்க, அவ்வந்தணர் வேள்வித்தீயில் பெய்யும் அவிசானது வையையே ! உனக்கு வாய்ப்புடையதாய் இருந்தது. ஓலையைப் பிடித்துப் படிக்கும் இனிய ஆண் மக்களோடு காமக்குறிப்பில்லாத விளையாடும் கூட்டத்தனராகிய அச்சிறுமியர் புலன்களடக்கித் தீமுன்னர்ச் செய்யும் தவத்தை முன் (பிறவிகளில்) அடுத்தடுத்துச் செய்ததனால் போலும் தாய் அருகாக நின்று தவமாகிய

தைந்நீராடலை, வையையே ! நின்னிடமாக வாய்க்கப் பெறுவாராயினர்; இதனை நீ கூறுவாயாக" என்பதாம்.

இதன் பகுதியில் சங்க காலத்திலேயே இந்நோன்பை நோற்றனர் என்பதும், 'திங்கள் மறுநிறை ஆதிரை.. விழவு தொடங்க' அன்பர்க்கு ' என வருவதால் 'மார்கழித் திங்கள் மதி நிறைந்த' நன்னாளில் இது ஆரம்பமாகி நடைபெறுவது என்பதையும் உய்த்து அறியலாம், 'அம்பா ஆடல்' என்ற பெயரால் இந்நோன்பு குறிக்கப்படுகிறது. 'தேவியின் பொருட்டு நிகழ்த்தப்படும் நீராட்டு' என்று பொருள். இதைத் "தைந்நீராடல்' என்ற பெயரால் சங்க நூல்கள் குறிக்கின்றன. பௌர்ணமியும் திருவாதிரையும் மார்கழி மாதம் 15 ஆம் தேதியிலேனும் அதன் பின்னரேனும் ஒன்று சேருவது இயல்பு. அமாவாசை-பௌர்ணமிகளுடன் மாதங்கள் முடிவதால் முறையே அமாந்தம், பூர்ணிமாந்தம் என்னும் பெயர் கொண்ட இருவகை மாத முறைகள் வழங்கி வருவனவற்றுள், பூர்ணிமாந்தம் என்ற முறைப்படி-மார்கழி கடைசியில் பௌர்ணமிக்குப் பின்வரும் மாதம்-மார்கழியின் பிற்பகுதியும் தையின் முற்பகுதியும் ஆம் என்றும், அதனால் மார்கழி நீராட்டம் தைந்நீராட்டம் என்று இருவகையாகவும் அந்நீராடலைக் கூறுவது கூடும் என்றும் கூறுவர். அதனால் மார்கழியில் நிகழ்த்தப்பட்டதாகத் தெளிவாக அறியப்பட்டதைத் தைந்நீராடல் என்று பரிபாடல் முதலியவை வழங்குவதற்கு இதவே காரணம் என்க. எனவே மார்கழி நோன்பு முன்பு பூர்ணிமாந்த முறைப்படி கடைப்பிடிக்கப்பட்டிருக்க வேண்டும் என்பதும், ஆயினும் சௌரமானப்படி தை மாதமும் அதனுடன் கலந்து விடுவதால் 'தைந்நீராடல்' என்று அதற்குப் பெயர் வழங்கி இருத்தல் வேண்டும் என்றும் அறியமுடிகிறது.

இனி, ஆண்டாளது திருப்பாவையில் இந்நோன்பின் செய்திகள் சில குறிப்பிடப்படுகின்றன. இவ்விரத காலத்தில் கன்னியர் செய்து வந்த செயல்களைத் திருப்பாவையில்,

"வையத்து வாழ்வீர்காள்" -எனத் தொடங்கும் இரண்டாம் பாசுரத்தாலும் இந்நோன்புக்காலத்ததே வழங்கும் வாத்தியங் - களையும் விருதுகளையும், "மாலே மணிவண்ணா" -எனத் தொடங்கும் 26 ஆம் பாசுரத்தாலும், நோன்பு முடிந்ததும் மகளிர்

கொள்ளும் கோலத்தையும் விருந்தையும் "கூடாரை வெல்லும்சீர்" - எனத் தொடங்கும் 27ஆம் பாசுரத்தாலும், இந்நோன்பால் விளையும் பயன் மழை பெய்து நாடு செழித்தலும், பசு வளர்ச்சியும் ஆம் என்பதை, "ஓங்கி உலகளந்த" -எனத் தொடங்கும் 3ஆம் பாசுரத்தாலும்,

இந்நோன்பைக் கன்னியர் நோற்பது தாம் ஒப்புயுர்வற்ற தலைவரை அடைந்து உய்வதற்கே என்பதை,

"சிற்றஞ்சிறு காலே" -எனத் தொடங்கும் 29 ஆம் பாசுரத்தாலும், அறியலாம்.

'முன்னைப் பழம் பொருட்கும்', 'உங்கையிற்பிள்ளை' எனத் தொடங்கும் திருவெம்பாவைப் பாடல்களும் இக்கருத்துகளைக் குறித்தலைக் காணலாம்.

இவ்வாறு இம்மைப் பயன் கருதிக் கன்னியரால் ஆதியில் நடத்தப்பட்டு வந்த மார்கழி நோன்பானது, மறுமை கருதி ஆயர்களால் ஈசுவர பரமாகப் பாடப்படும் பெருமையை அடைந்தது. ஆனால் இந்நோன்பின் பழஞ் செய்திகள் மறக்கப்பட்டும், கன்னிப் பெண்களால் இது கைக்கொண்டு நடத்தப்படாமலும் போயின. எனினும், அவ் அடியார்கள் அருளிய திருப்பாவை, திருவெம்பாவைகளை முக்கியமாகக் கொண்டு அம்மாதத்து வரும் உதய காலங்களில் நீராடுவதும் அத்திவ்வியப்பிரபந்தங்களை ஓதுவதும் ஆராதனைகள் நடத்துவதுமாய் ஆடவுங், பெண்டிர் எல்லா ராலும் சமய ஆதாரமாகக் கொண்டு இக்காலத்தவரால் பெரிதும் கடைப் பிடிக்கப்பட்டுவருகின்றது.

தமிழ்நாட்டின் பழைய வழக்கங்கள் பலவும் இன்றும் காணக்கூடிய மலையாள நாட்டிலே இந்நோன்பு தன் முன்னிலைமையில் சிறிது மாறி இன்றும் வழங்கிவருகின்றது. அவர்கள் கொண்டாடும் முக்கிய விழாக்களிலே 'திருவாதிரைத் திருவிழா' என்பதும் ஒன்று. ஆனால் இது மன்மதனைப் பற்றியதாகப் பாவிக்கப்படுகிறது. காமன் நோன்பு பங்குனி மாதத்தே பழங்கால முதல் நடைபெறுவதே அன்றி மார்கழிக்கு உரியதன்று.

( "மார்கழி திருவாதிரை அன்று 'அக்காரடலை' நிவேதனம் செய்வதற்கு என்று, முதல் இராசராசசோழன் கோயிலுக்கு நிலங்கள்

விட்டுள்ள செய்தி கல்வெட்டுகளில் அறிய முடிகிறது. (EP.Rep.68 & 1914) இதனால் அக்காரடலை (சர்க்கரைப் பொங்கல்) அவ் உற்வசத்திற்கு முக்கியமானது என்பது உணரப்படும். வைணவர்களால் அது சிறப்பாக இன்றும் வழங்கப்படுகிறது. திருவாதிரைக் களி - எனச் சைவர்களுக்குள் வழங்குதலும் இத்தகையதேயாகும்)(இச்செய்திகள்யாவும்அமரர். பேராசிரியர்.மு.இராகவையங்கார் அவர்களின் கட்டுரையைப் பெரிதும் தழுவியது)

இவ்வாறு சங்க காலத்தில் கடைப்பிடிக்கப்பட்ட தைந்நீராடல் பிற்காலத்தில் பாவை நோன்பாக, அதுவும் சமயச் சார்புடையதாக மாறியது என்று கொள்ளலாம். பாவைப்பாட்டு என்னும் இலக்கியம் பழங்கால இலக்கியங்களில் காணப்படவில்லை எனினும் இப்படிப்பட்ட இலக்கியம் ஏதும் இல்லை என்று கூற இயலாது.

பாவை நோன்பினை அடிப்படையாகக் கொண்டு எழுந்த நூல்கள் பற்றி பாடப்படும் யாப்பருங்கல விருத்தியின் பாவுரையில் கீழ்க்காணும் பாடல் காணப்படுகிறது.

"கோழியும் கூவின குக்கில் அழைத்தன
தாழியுனீலத் தடங்கணீர் ! போதுமினோ,
ஆழிசூழ் வையத்தரவன் அடியேத்திக்
கூழிநனையக் குடைந்தும் குளிர்புனல்
ஊழியும் மன்னுவாம் என்றேலோர் எம்பாவாய் ".

இதில் வைகறை வருணனை, நீராட அழைத்தல், ஆண்டவன் அடிபோற்றல், குடைந்து நீராடல் போன்ற பாவை நோன்பின் செய்திகளோடு பாவைப் பாட்டிற்கு உரிய 'எம்பாவாய்' என்னும் மகுடச் சொல்லும் அடங்கிய இப்பாவைப் பாடலில் அதற்குரிய பல்வேறு கூறுகள் உள்ளடங்கியுள்ளதைக் காணலாம். திருப்பாவை, திருவெம்பாவை என்னம் இருநூல்களைத் தவிர, சமணத் திருப்பாவை ஒன்றும் இவ்வகை நூலுக்கு இலக்கணமாகக் கிடைத்துள்ளது. இதன் ஆசிரியர் அவிரோதிநாதர் என்பவர்.

ஸ்ரீ ஆண்டாள் இயற்றிய திருப்பாவை ஒன்றே பாவைப்பாட்டின் எல்லா இலக்கணங்களும் பொருந்தி வழங்குகிறது. திருவெம்பாவை பாவைப் பாட்டமைப்பில் பெரிதும்

ஒத்திருந்தாலும் மணிவாசகர் பாவை நோன்பு பற்றி ஏதும் சொல்லவில்லை.

பாவை நோன்பின் நோக்கத்தையும், நோற்கும் முறையையும், நோன்புக்குரிய செயல்களையும், நோன்பு நடக்கும் இடம் பற்றியும், நோன்பிற்குத் தேவையான பொருள்களின் பட்டியலும், நோன்பிற்குரிய தலைவனைப் பற்றியும், நோன்பு முடிந்தபின் கொண்டாடப்படும் வெற்றி விழா பற்றியும், அவ்விழாவில் நோன்பிருந்த சிறுமியர்க்குக் கிடைக்கும் சன்மானங்களைப் பற்றியும் விரிவாகச் சொல்கிறது திருப்பாவை.

திருவெம்பாவை நல்ல கணவரைப் பெறுவது நோக்கமாகக் கூறியிருப்பது போல் திருப்பாவையில் இல்லை.

நல்ல கணவரைப் பெறுவது திருப்பாவைச் சிறுமியரின் நோக்கம் அன்று. இறைக்காதலே அவர்கள் நெறி. இவர்கள் நோன்பை ஒரு கருவியாகப் பயன்படுத்தி இறைவனை அடையவே முயற்சி செய்கிறார்கள். உயர்ந்த நெறியான இறைக்காதலே திருப்பாவைச் செய்தி ஆகும். அதே நேரம் உலகியலையும் மறக்கவில்லை. மானுடப் பண்புகளை நேசிக்கும், மதிக்கும், அதைப் பெருமானிடம் யாசிக்கும் உள்ளம் கொண்ட கவிஞனின் அற்புதப் படைப்பே திருப்பாவையாகும்.

ஆண்டாளின் பக்திப் பாடலில் பாவனையான காதலையன்றி உண்மைக் காதலையே காண்கிறோம்.

1. மானுடப் பெண் தன்னோடு ஒத்த ஒரு மானுடனைக் காதலிக்கும் பண்டைய அகமும்,

2. ஒரு சாதாரணப் பெண் தன்னோடு ஒவ்வாத, ஆனால் மனிதனான அரசனைக் காதலிக்கும் முத்தொள்ளாயிர அகமும்,

3. மானிடப் பிறவி பிறந்தும் மாயவனைக் காதலிக்கும் ஆண்டாளின் இறைக் காதலும் தலைவனைப் பற்றிய அடிப்படையில் பெரிதும் மாறுபடுகின்றன.

பிறபக்திப் புலவரும் இறைவனைப் பல வடிவில், உறவுகளில் கண்டு அத்துடன் காதலனாகவும் காண, ஆண்டாள் இவ்வொரு உறவு நிலையிலேயே அணுகுதல் தனித் தன்மையாம். "கடவுள் மாட்டு மானுடப் பெண்டிர் நயந்த பக்கத்திற்குப் பொருத்தமான எடுத்துக்காட்டாக ஆண்டாள் அமைகின்றாள்.

<u>சங்கத் தமிழ்மாலை:</u>

திருமால் வணக்கம் தமிழகத்தில் பன்னெடுங்காலமாகவே இருந்து வந்துள்ளது.

"மாயோன் மேய காடுறை உலகமும்" -என்று தொல்காப்பியம் கூறுகின்றது. சங்க நூல்களில் திருமாலின் பெருமைகள் விரிவாகப் பேசப்படுகின்றன. பரிபாடலின் பலவரிகளிலிருந்து திருமாலையே தங்கள் முழு முதற்கடவுளாகத் தமிழர்கள் வழிபட்டு வந்தனர் என அறிகிறோம். "இச்சங்க நூல்களில் எடுத்து ஆளப்பெற்ற கருத்துகளையும், சொற்களையும் கோதை தனது திருப்பாவையில் எடுத்து ஆண்டிருப்பதாலே அது சங்கத் தமிழ்மாலை எனப்படுகிறது" என்று கிருஷ்ணசாமி அய்யங்கார் சுவாமிகள் கூறுகிறார். சிலவற்றை ஒப்பு நோக்கலாம்.

"ஏரார்ந்த கண்ணியசோதை" - (1)

"வண்டடைந்த கண்ணி வளராய்ச்சி' –முல்லைப்பாட்டு.

"நனந்தலை உலகம் வளைஇ நேமியோடு
வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை
நீர்செல நிமிர்ந்த மாஅல் போல" - முல்லைப்பாட்டு.

இவ்வடிகளில் திரிவிக்கிரம அவதாரச்செய்தி கூறப்பட்டள்ளது. இதை,

'ஓங்கி உலகளந்த உத்தமன்' - என்று ஸ்ரீஆண்டாள் பாடுகிறார்.

"மழை விளையாடும் குன்று சேர் சிறுகுடிக்
கறவை கன்று வயிற்படற" - குறுந்தொகை 108

"கருங்கோட்டெருமை செங்கண் புனிற்றாக்
காதற் குழவிக்கு ஊறுமுலை மடுக்கும்" - ஐங்குறுநூறு

என்று கன்றை நினைந்து முலைவழியே கொண்டுவந்த பாலைக் கொடுக்கும். கறவையைப் பற்றி இவற்றில் பேசப்படுகிறது. 'கனைத் திளங்கற்றெருமை... சேறாக்கும்' என்றார் கோதையார்.

'கடுஞ்சுரை நல்லான்' -குறுந். 132

என்னும் தொடரால் மிக்க சுரப்புடைய நல்ல பசு என்று சங்கப் புலவர் பசுவைச் சிறப்பிக்கிறார். இது 'வாங்கக் குடம் நிறைக்கும்' பசுவாதலால் 'கடுஞ்சுரை' என்றார்.

'தேங்காதே புக்கிருந்து சீர்த்த முலைபற்றி
வாங்கக்குடம் நிறைக்கும் வள்ளல் பெரும் பசுக்கள்'

என்ற ஆண்டாள் அழகுறப்பாடியுள்ளார்.

'மேகம் எம்பெருமான் நிறம் போல இருண்டெழுந்து வானத்தில் இருந்தது' என்று பாடுகிறார் மாறன் பொறையனார் என்னும் சங்கப்புலவர்.

'மல்லர்கடந்தான் நிறம்போல இருண்டெழுந்த' ஐந்திணை ஐம்பது.
'ஊழிமுதல்வன் உருவம் போல் மெய்கறுத்து' -திருப்பாவை-4.

பொழுது விடியும் நேரத்தை உணர்ந்து சேவல் கூவுகிறது ; யானையங் குருகு என்னும் ஆனைச் சாத்தனாகிய சேவலும் கூவுகின்றது. அன்னச்சேவலும் தன் பெடையை அழைக்கக் கூவுகிறது. அழகு மயிலும் அகவுகிறது-இதனை,

'பொறிமயிர் வாகனம் வைகறை இயம்ப
யானையங் குருகின் சேவலொடு காமர்
அன்னம் கரைய அணிமயில் அகவ
- மதுரைக்காஞ்சி-673-675

என அழகுற மாங்குடி மருதனர் பாடுகிறார்.

"புள்ளும் சிலம்பின காண்" -திருப்பாவை-6
"கீசு கீசு என்றெங்கும் ஆனைச் சாத்தன் கலந்து
பேசின பேச்சரவம்" -திருப்பாவை-7

கருடக் கொடியின் சிறப்பைச் சங்கப் புலவர் பாடியுள்ளனர்.

"சேவலங் கொடியோன்" -பரிபாடல் - 1:11.
"செவ்வாய் உணர்த்துயர் கொடியோயே" -பரிபாடல் - 2:60.
"புள்ளினை நிவந்தோங்கு உயர் கொடிச்சேவலோய்"
-பரிபாடல் - 3:15 -20.
"புள்ளரையன் கோயில்" -திருப்பாவை-6.

பெருமான் சகடாசுரனை உதைத்து ஒழித்த திறத்தையும், காண்போரைக் கவரும் அவனது தாழம்பூ மேனியையும் நல்லாதனார் பாடுகிறார்.

......கண்ணிய
மாயச் சகடம் உதைத்ததுவும்

பூவைப்பூ வண்ணன் அடி - திரிகடுகம்

"கள்ளச் சகடம் கலக்கழியக் காலோச்சி" -திருப்பாவை-6.

பெருமான் பாற்கடலின் இடையில் ஆதிசேடனாகிய பள்ளியில் யோக நித்திரை செய்கிறான்-என்று நல்லெழினியார் என்னும் புலவர் பரிபாடலில் பாடுகிறார்.

"தன்னுரு வுறழும் பாற்கடல் நாப்பண்
மின்னவிர் சுடர்மணி ஆயிரம் விரித்த
கவைநா வருந்தலைக் காண்மின் சேக்கைத்
துவளம் சூடிய அறிதுயி லோனே" -பரிபாடல் - 13:26-29.

"வெள்ளத்தரவில் துயில் அமர்ந்த வித்து" -திருப்பாவை-6.

"புலியினது முழக்கத்தைப் போன்று, முழங்குகின்ற மத்தை ஆரவாரிக்கக் கயிற்றை வலித்து, குடைக்காளானின் வெள்ளிய மொட்டுகளைப் போன்று விட்ட உறையாலே இறுகத் தோய்ந்த தயிரைக் கடைந்த போது, வெண்ணெய் வெளிப்பட்டது. நுரைகள் பானையின் மேல் புள்ளியாகத் தெறித்தன."

"புலிகுரல் மத்தம் ஒலிப்ப வாங்கி
ஆம்பி வால்முகை அன்ன கூம்பு முகிழ்
உறை அமை தீந்தயிர் கலக்கி நுரை தெரிந்து"
-பெரும்பாணாற்றுப்படை 156-158.

இதே கருத்து 'கடையலங்குரல வாள்வரி உழுவை' -புறம் 277-5 என்று குறிப்பிடப்படுகிறது.

"காசும் பிறப்பும் கலகலப்பக் கைபேர்த்து
வாச நறுங்குழல் ஆய்ச்சியர் மத்தினால்
ஓசைபடுத்த தயிரரவம் கேட்டிலையோ"
-திருப்பாவை-7.

கூந்தலின் மணம்,

"குவளைக் குறுந்தாள் நாள் மலர் நாறும்
நறும் என் கூந்தல்" -குறுந்தொகை 270 : 7-8

"வண்டுபடு நாற்றத் திருள்புரை கூந்தல்" -நற்றிணை 95 :8

"நாறிருங் கூந்தல்" -புறநானூறு 113 : 9

என்று சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்படுகிறது.

"வாச நறுங் குழல் ஆய்ச்சியர்" -திருப்பாவை :7

கேசினனும் அசுரன் குதிரைவடிவில் வந்தவனைக் கண்ணன் அழித்த செய்தி,

"மேவலர் விடுத்தந்த கூந்தல் குதிரையை
வாய் பகுத்திட்டு" -கலித்தொகை

"கூந்தன் மா கொன்று குடமாடிக் கோவலனாய்ப்
பூந்தொடியைப் புல்லிய ஞான்றுண்டால்" -முத்தொள்ளாயிரம்

..........நாராயணன்மூர்த்தி
"கேசவனைப் பாடவும் நீ கேட்டே கிடத்தியோ"
- திருப்பாவை 7

கேசவனான கண்ணபிரான் நாராயணமூர்த்தியின் அவதாரம் என்று குறிப்பிடுகிறார்.

"நின்னை இன்னன் என்றுரைத்தல் எமக்கு எவன் என்று
மனக்கோள் நினக்கு வடிவு வேறிலையே" -பரிபாடல்

இக்கருத்தினை ,' உலகினில் தோற்றமாய் நின்ற சுடரே" -என்று பாடுகிறார். -திருப்பாவை 21

"நேமியும் வளையும் ஏந்திய கையான்" -பரிபாடல்.
"சங்கொடு சக்கரம் ஏந்தும் தடக்கையன்" -திருப்பாவை 14

கண்ணனது இளமைக்கால லீலைகளை,

"கன்றெடுத் தோச்சி கனிவிளவின் காயுகுத்து
குன்றெடுத்து நின்ற நிலை"

-புறப்பொருள் வெண்பாமாலை.

குறிப்பிடுவது போல,

"பொன்றச் சகடம் உதைத்தாய்', ' கன்று குணிலா எறிந்தாய்', குன்று குடையாய் எடுத்தாய்' (திருப்பாவை 24) என்று அன்னை பாடியுள்ளார்.

பலராமனையும், கண்ணனையும் சேர்த்தே சங்கப் புலவர்கள்.

இருபெருந்தெய்வம் எனப்பாடியுள்ளனர். பலராம அவதாரம் பரிபாடல் 1:1:5; 2:20-23; 13:33; கலித்தொகை 26:1; 36:1; 104:7-8; 105:1; புறநானூறு 56:3-4 ஆகிய சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்பட்டுள்து.

பலராமனுக்கு இளையான் பரிபாடல் 2:20-23.

"செம்பொற் கழலடிச் செல்வா பலதேவா
உம்பியும் நீயும் உறங்கேலோ ரெம்பாவாய்" -திருப்பாவை-17.

கரியநிற எருமை கட்டிலிருந்து கயிற்றை அறுத்துக் கொண்டு விடியற் காலையில் மேயச் சென்றது.

"கருங் கோட் டெருமை கயிறு பரிந்தசை இ
நெடுங்கதிர் நெல்லினாண் மேயலாரும்"
-ஐங்குறுநூறு -ஓரம்போகியர்.

"கீழ்வானம் வெள்ளென்று எருமை சிறுவீடு
மேய் வான் பரந்தன காண்" -திருப்பாவை-8

என இவர் பாடுகிறார். எருமை கயிற்றை அறுத்துக்கொண்டு சென்றது. -என ஐங்குறுநூறு கூற, இவர் எருமைகளை அவிழ்த்து விட்டனர் என்று பாடுகிறார். இதுவே இவற்றிடை வேற்றுமை.

"மற்ற தெய்வங்களால் நற்பதமான வீடுபேற்றை அளிக்க முடியாது" என்பதை இளம்பெருவழுதியார் அழுத்தமாகக் கூறுகிறார்.

"நாறிணர்த் துழாயோன் நல்கின் அல்லதை
ஏறுதல் எளிதோ வீறுபெறு துறக்கம்" -பரிபாடல் 15.

"நாராயணன் நம்மால்
போற்றப் பறை தரும் புண்ணியன் " -என்று 'பரமபதம் அவனன்றித் தருவோர் வேறு எவருமிலர் ; ஆகவே அவனைப் போற்றுங்கள்' -என்று கோதையார் கூறுகிறார். (திருப்பாவை 10)

நரசிங்காவதாரம் பற்றிப் பரிபாடல் கூறுகிறது.

"எம்பெருமான் தூணிலிருந்து வெளிப்பட்டு இரணியனுடைய மாமிசப் பிளவுகளும் பலவாகச் சிதறிவீழ, அவனது மார்பை நகத்தாலேயே பிளந்தான்" -என்று இளவெயினனார் என்னும் சங்கப் புலவர் பாடுகிறார்.

"வெடிபடா ஒடி தூண் அடியொடு
தடிதடி பலபட வகிர்வாய்த்த உகிரினை " - 4:12-13.

"பொல்லா அரக்கனைக் கிள்ளிக் களைந்தானை"
-திருப்பாவை 13

விண்ணில் முளைக்கும் வெள்ளியைக் காட்டி (சுக்கிரன்) விடியலை உணர்த்துவதை இன்றும் கிராமப்புறத்தில் பேசக் காணலாம்.

"வெள்ளி முளைத்த விடியல் வயலாமை" புறப்பொருள் வெண்பாமலை

"விரிகதிர், வெள்ளி முளைத்த நள்ளிருள் விடியல்" - பொருநராற்றுப்படை

"வெள்ளி தோன்ற புள்ளுக்குரல் இயம்பப்
புலரிவிடியல் பகடுபல வாழ்த்தி" -புறம் -385

இவற்றால் வெள்ளி முளைத்ததும் விடியற்காலமாவதும் அறியப்படுகிறது. மேலும் 'புள்ளுக் குரல் இயம்ப' என்பதால் பறவைகள் ஆரவாரிப்பதையும் அறிய முடிகிறது.

'வெள்ளி எழுந்துவியாழம் உறங்கிற்று' -திருப்பாவை -13.

நப்பின்னையின் கூந்தலைச் சிலப்பதிகாரம் 'பொதியவவிழ் மலர்க் கூந்தல் பிஞ்ஞை' என்ற படியே, கோதையாரும், 'கொத்தலர்ப் பூங்குழல் நப்பின்னை ' என்றார். (திருப்பாவை 19)

கண்ணகியைச் சிலப்பதிகாரம்'திருத்தகு மாமணிக் கொழுந்து'- என்றவாறே, யசோதையை ஆண்டாள் 'கொம்பனைார்க் கெல்லாம் கொழுந்தே' என்றார். (திருப்பாவை -17)

<u>முக்கோல்பகவர்:</u>

வைணவத் தத்துவம் சித்து, (அறிவுள்ளது) அசித்து (அறிவற்றது) ஈசன் (எம்பெருமான்) என மூவகைப்படும். அக்காலத்திலிருந்த பாகவத சந்நியாசிகள்இதற்கு அடையாளமாக மூன்று மூங்கில்களைச் சேர்த்துக் கட்டித் தாங்கி இருந்தனர். இன்றும் வைணவ மடாதிபதிகள் இவ்வாறு உள்ளனர். சங்க இலக்கியமாகிய கலித்தொகையில் இச்செய்தி கூறப்படுகிறது. (126:4-5; 9:1-4, 126:4-5)

இவ்வழக்கம் பழங்கால முதலே இருந்து வந்துள்ளதைக் தொல்காப்பியம் மூலமாகவும் நாம் உணரமுடிகிறது.

**'நூலே கரகம் முக்கோல் மணையே**

**ஆயுங் காலை அந்தணர்க் குரிய' -**

தொல்.பொருளதிகாரம்-மரபியல்.

இவர்கள் ஆடையைக் காவிநீரில் தோய்த்து அவ்உடையை அணிந்திருந்தனர் என்பதை,

'கற்றோய்த்துடுத்த படிவப் பார்ப்பான்
முக்கோல் அசைநிலை கடுப்ப' -முல்லைப்பாட்டு.

இதனைத் திருமழிசையாழ்வாரும்,

'சிற்றெயிற்று முற்றல் மூங்கில் மூன்று தண்டர் ஒன்றினர்
அற்றபற்றர் சுற்றி வாழும் அந்தணீர் அரங்கமே'
-என்று பாடுகிறார்.

கோதையார் இதை,

"செங்கல் பொடிக் கூறை வெண்பல் தவத்தவர்
தங்கள் திருக்கோயில்"

-என்று குறிப்பிடுகிறார். (திருப்.14) தவசிகள் வாழ்ந்த இடம் கோயில் என்ற அழைக்கப்பட்டது. ஞானியர் வாழ்ந்த இடத்தைக் கோயில் என்றவர் எம்பெருமான் எழுந்தருளியுள்ள இடத்தையும்

"பூவைப்பூ வண்ணா உன் கோயில் நின்று" என்று குறிப்பிடுகிறார். (திருப்.23)

சங்க நூல் பலவும் முல்லை வாழ் மக்களைக் கோவலர் என்று குறிப்பிடுகிறது. சிலம்பும் 'ஆகாத்து ஓம்பி ஆபயன் அளிக்கும் கோவலர்' என்கிறது. அன்னையும் 'குற்ற மொன்றில்லாத கோவலர்' என்கிறார். மழையின் முக்கியத்தை இவர் திருப்பாவையில் வலியுறுத்துகிறார். (பாடல்4) திருக்குறளில் மழைக்காக வான்சிறப்பு என்று ஓர் அதிகாரமே வகுக்ககப்பட்டுள்ளது.

தொல்காப்பியர் திருமாலைப் போற்றி உலகத்து, மன்னர்க்குத் திருமாலை உவமைப்படுத்துகின்றார். அவ்வாறு கூறுதல் **'பூவைநிலை'** என்னும் புறத்துறை ஆகும் என்கிறார்.

'மாயோன் மேய மன்பெருஞ் சிறப்பின்
தாவா விழுப்புகழ் பூவை நிலையும்'

இதில் சிறப்பு என்றது வீடுபெறும் நிலையாகும். இதை 'மன் பெருஞ்சிறப்பு' என்கிறார். அழிவில்லாத, பேரின்பத்தை உடைய வீடு என்று குறிப்பிடுகிறார். இங்கே பூவைநிலை என்றது காட்டில் மலர்ந்து அழகுடன் விளங்கும் காயாம்பூவை மாயவன் திருமேனி நிறத்தோடு உவமிக்கப்பட்டதாகும்.

"கறவை காவலன் நிறனொடு பெயரீஇப்
புறவலர் பூவைப் பூப்புகழ்ந்தன்று"

என்று புறப்பொருள் வெண்பாமாலை மேலே குறித்த செய்தியினை தெளிவாகக் கூறுவதை அறியலாம்.

"பூவைப்பூ வண்ணா !" (திருப்.23)

என இவர் போற்றுகிறார்.

எனவே திருப்பாவை சங்கத் தமிழ்மாலை என்பதில் ஐயமில்லை.

<u>அகமரபு:</u>

சங்க இலக்கியத்தின் பாடுபொருள்கள் இரண்டு. அகம், புறம் , -அகத்தின் புறத்தே நிகழும் மனித ஒழுக்கத்தைப் பற்றிக் கூறுவது புறம். காதலையும் இல்வாழ்க்கையையும் பற்றிப் பாடுவது அகம். ஆழ்வார்களும் நாயன்மார்களும் தம்மீது பெண் தன்மையை மேற்கொண்டு தம்மைத் தலைவியராக உருவகம் செய்து கொண்டு இறைவன் மீது தாம் கொண்ட தெய்வீகக் காதலைப் பாடுவர். இதற்கு ஒப்ப கோதையார் தம்மை ஆயர் சிறுமியாக உள்ளத்தாலும் உணர்ச்சியாலும் தோற்றத்தாலும் நினைத்துப்பாடுகிறார்.

ஆயமகளிரின் உள்ளம் கவர் கள்வன் கண்ணன். அவர்கள் அவனுடன் ஒன்றி நின்றனர். நாச்சியார் திருமொழிபோல் இதில் காதல் உணர்ச்சிகள் வெளிப்படக் கூறப்படவில்லை ஆயினும் இது அகமரபுக் காவியமே. காமம் கடந்த காதல் வாழ்வு-பக்திச் சுவையுடன் கூடிய ஆன்மிகக் காதலின் வெளிப்பாடு தான் திருப்பாவைப் பாடல்கள். கோவியரின் காதல் தன் முனைப்பற்றது முழுமையாகத் தம்மை அவனிடம் ஒப்படைத்து விடுகின்றனர். எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் தாங்கள் அவன் உறவிலே இருப்போம் என்ற எண்ணம் உடையவர்கள். தலைவன், தலைவி, காதல் உணர்வு என்ற மூன்றும் வெவ்வேறாக இருக்கும் வரை அக்காதல் குறையுடைதாகவே இருக்கும். ஒன்றாகும் போது ஒன்றில் ஒன்று கலந்து விடும் என்பதையே 'உற்றோமே யாவோம் உனக்கே நாம் ஆட்செய்வோம்' என்று இவர் குறிப்பிடுகிறார். யான், எனது என்னும் செருக்கற்ற நிலையில்தான் உண்மைக்காதல் வெற்றிபெறும். கருவில் திருவுடையவர்க்கே இது சித்திக்கும்.

"நம் கண்கள் அறியாக் காட்சிகளை அவள் கண்டாள் ;
நாம் அறியாத் தொடர்புகளை அவள் புரிந்து கொண்டாள் ;
அவளுள் கான்ற சக்தி அவளது சைதன்யத்தை அமைத்தது;
நாம் அறிந்த தோற்றங்களைவிட ஆழ்ந்ததாகச் செப்பமைத்தது
அவள் நரம்புகளில் புலனாகாத ஒரு சூரிய வெள்ளம்
அதனால் அவளது எண்ணங்கள் தெய்வீக ஒளிபெற்றன
உலகம் இன்றுவரை காணாத பெருங்காட்சியை
அவை கண்டன."

" ஸ்ரீ அரவிந்தர்தம் மகாகாவியமான சாவித்திரியில் இவ்வாறு கூறுவதை நாம் இங்கு கோதையாருடன் ஒப்பு நோக்கி மகிழலாம்.

"எம்பெருமானுக்கு ஆட்செய்கையே பரமபுருஷார்த்தம் " - என அறுதி இடுதல் இப்பிரபந்தத்தின் உள்ளுறையாகும். கோபியர் கண்ணனுடன் கலந்து அனுபவிக்கும் பேரின்பம் நீராட்டம் (மார்கழிநீராட்டம்) எனப்படும்.

<u>வேதம் அனைத்துக்கும் வித்து:</u>

ஸ்ரீ ஆண்டாள் வாழித் திருநாமப் பாடல் ஒன்றில், திருப்பாவை வேதம் அனைத்துக்கும் வித்து என்று பாராட்டப்படுகிறது. இக்கருத்தை ஆராய்வது நலம்.

நேரிழையீர் (1) - பிரபத்தியை ஆபரணமாக உடையீர் என்பது உட்பொருள். பிர+பக்தி=மேலான பக்தி. 'எம்பெருமானுக்கு விருப்பமானவற்றைச் செய்தல், வெறுப்பானவற்றை நீக்குதல், எவ்வாற்றாலும் அவன் காப்பாற்றுவான்-என்னும் அசையாத நம்பிக்கை யோடிருத்தல், அவன் காவலை வேண்டிநிற்றல், தான் என்பது ஒன்றும் இல்லை என உணர்தல்' -என்பன பிரபத்திக்குரிய அங்கங்களாம்.

செல்வச் சிறுமீர்காள்-(1) இவ் ஆத்மாவுக்கு நிலைநின்ற செல்வம் ஆகிய பகவத் சம்பந்தம் இங்கு செல்வம் எனப்படுகிறது.

செங்கண் (1) - தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீகமேவ மக்ஷிணீ சூரியனால் மலர்ந்த தாமரை எப்படி விளங்குமோ அப்படிப்பட்ட இரு கண்கள் அவனுக்கு உள்ளன.

'கார்மேனிச் செங்கண் கதிர் மதியம் போல் முகத்தான்' - நமக்கு உபாயமமானவன் சர்வேஸ்வரனே -என்று சொல்ல

வேண்டிய இடத்தில் இவ்வாறு சிறப்பித்ததற்குக் கருத்து என்னவெனில், உபாயமாகிய வாசு தேவனைப் பற்றுவதற்கு அனுகுணமான ஞானம், சக்தி, பிறரிடம் பயன் கருதாமல் எல்லாவற்றாலும் பூரணனாய் இருப்பது (அவாப்தசமஸ்த காமத்வம்) சர்வசுவாமித்துவம், இரக்கம் என்னும் 5 குணங்களையும் உபாயநிலையில் கொண்டு கூறுவது வழக்கம். இவை இங்கு உணர்த்தப்படுகின்றன.

1. 'செங்கண்' -என்ற அன்பினாலும், வகுத்த சுவாமியாய் இருப்பதாலும் சிவந்திருக்கும் திருக்கண்ணைச் சொன்னதால் வாத்சல்யமும் சுவாமித்துவமும் சொல்லப்பட்டன.

2. 'ஏராந்த..... இளஞ்சிங்கம்' -என்னும் சர்வ சுவாமியாய் இருப்பவர் ஓர் இடைச்சிக்கும் இடையருக்கும் கட்டவும் அடிக்கவுமாம்படி இருக்கிறான் என்பதால் சௌலப்பியமும், சௌசீல்யமும் உணர்த்தப்படுகின்றன.'இளஞ்சிங்கம்' என்றும் 'கதிர்போல் முகத்தான்' என்றும் சொல்லப்பட்டதால் சர்வசத்தித்துவமும் (பிறரால் செய்து முடிக்க முடியாத செயலையும் மிக எளிதில் செய்ய வல்லனாய் இருக்கை) தோன்றுகிறது. 'மதியம் போல் முகத்தான்' 'கார்மேனி' -என்று பயன்கருதாமல் உதவி செய்யும் மேகம் போன்ற வடிவை உடையவன் என்றதால் (அவாப்த சமஸ்த காமத்துவமும்) உணர்த்தப்படுகிறது.

<u>நாராயணனே</u>- இவனே உபாயம் என்பதைத் தெரிவிக்கும் அசாதாரணமான திருநாமத்தை அனு சந்திக்கிறார்கள். போற்றுகிறார்கள்)

'விஸ்வம் நாராயணம்', 'நாராயண பரப்பிரம்ம... நாராயணஸ்ஸ்தித' என்றும், 'மாதா பிதா நாராயண' -என்றும் 'திவ்யோ தேவஏகோ நாராயண' என்றும் வேதங்களும் துதிக்கின்றன.

'நாரணன் மூவேழுலகுக்கும் நாதன்', 'நலம் திகழ் நாரணன்', 'ஓவாதே நமோ நாரணா', 'நான்முகனை நாராயணன் படைத்தான்' .'நாமம் பல சொல்லி நாராயணா' என்று ஆழ்வார்களும் கணக்கற்ற இடங்களில் இத்திருநாமத்தைப் போற்றியுள்ளனர். நாராணயனே -'ஏ' காரத்தால் வேறு ஒன்றையும் பொறுக்காத உபாயமாய் இருப்பவன் என்று உணர்த்தப்படுகிறது.

திங்கள் மும்மாரி பெய்து - அதிக மழையும் வறட்சியும் இல்லாமல் இருத்தல்.

"நிகாமே நிகாமே ந: பர்ஜந் யோ வர்ஷதி" -(நாம் விரும்பிய போதெல்லாம் வருணன் மழை பொழிகிறான்) என்று வேத்தில் சொல்லியபடியே இருக்கை.

'போயபிழையும் புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசாகும்'
"தத் யதா இஷீக தூலமக் நௌ ப்ரோதம் ப்ரதூயேத !
ஏவம் ஹாஸ்ய ஸர்வே பாப்மாந: ப்ரதூ, யந்தே!!

(நெருப்பில் இடப்பட்ட பஞ்சு எப்படிக் கொளுத்தப்படுகிறதோ அதுபோல, இவனுடைய எல்லாப் பாவங்களும் கொளுத்தப்படுகின்றன) - சாந்தோக்ய உபநிடதம். இதனால் போய பிழைகளின் அழிவு சொல்லப்பட்டது.

"தத் யதா புஷ்கரபலாஸ ஆபோந ஸ்லிஷ்யந்தே !
ஏவம் விதி, பாபம் கர்ம ந ஸ்லிஷ்யதே !!

(எவ்வாறு தாமரை இலையில் தண்ணீர் ஒட்டுவதில்லையோ அப்படியே, இவ்வாறு அறிபவனிடத்தில் பாபகர்மம் ஒட்டாது) இதனால் பின்வரும் பாவம் (புகுதருவான் நின்றன) ஒட்டாமை சொல்லப்பட்டது.

<u>தேவாதிதேவர்:</u>

"தமீஸ்வராணாம் பரமம் மஹேஸ்வரம்
தம்தே வதாநாம் பரமஞ்ச தை வதம்"

(ஈஸ்வரர்களுக்கும் மேலான மகேசுவரனும் தேவதைகளுக்கும் மேலான தேவதையுமான அவன்) - என்று ஸ்வேதாஸ்வதர உபநிடதம் முழங்கியது.

<u>பங்கயக் கண்ணானைப் பாட:</u>

'உத்காய தீநா மரவிந்தலோசநம்
வ்ரஜாங்க நாநாம்திவ மஸ்ப்ருஸத் த்வநீ –பாகவதம்' -

(தாமரைக் கண்ணனைப் பாடும் ஆய்ப்பாடிப் பெண்களின் குரல் ஸ்ரீ வைகுண்டத்தையும் எட்டிற்று)

கோவியர் அனைவரும் சேர்ந்து வாசல் காக்கும் முதலிகளிடம் அனுமதி கேட்கின்றனர். (திருப்பாவை-16) பாஞ்சராத்திர சாஸ்திரத்திலும் எம்பெருமானுடைய கோயிலுக்குச் செல்லும் போது

திருவாசல் காக்கும் முதலிகளிடம் அனுமதி பெற்றுப் போக வேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. அதை இவர்கள் அறியாதாராயினும் வைணவக் குடியிலே வந்தவர்களாகையாலே இந்த நடைமுறை இயற்கையாகவே காணப்படுகிறது.

'முமுக்ஷுர்வைஸரண மஹம் ப்ரபத்யே' (மோட்சமடைய விரும்பிய நான் பகவானைச் சரணமடைகிறேன்) என்பது உபநிடதமாகும்.

கப்பம் தவிர்க்கும் கலியே - கலி-பலம்; பலமே ஒருவடிவெடுத்தது போல் இருப்பவனே! என்கிறார்கள்.

'தம் தேவதா நாம் பரமஞ்ச தைவதம்' - உபநிடதம்,

(தேவதைகளுக்கெல்லாம் மேலான தெய்வமான அவனை) 'பலமஸி ' என்கிறது வேதம். நப்பின்னை நங்காய் - அவனுடைய பூர்த்திக்கும் காரணமானதன்றோ உன்னுடைய பூர்த்தி. '

(ஸ்ரத்தயாதேவோ தேவத்வ மஸ்நுதே - ( ஸ்ரத்தை என்னும் பெயர் கொண்ட பிராட்டியாலேயே தேவனாகிற நாராயணன் தேவனாய் இருக்கும் தன்மையை அடைகிறான் - வேதம்.)

<u>ஊற்றமுடையாய்:</u>

எழுதாக்கிளவியான வேதத்தில் பிரதிபாதிக்கப்படுவதால் வந்த ஸ்திரத் தன்மையை உடையவனே.

'ஸர்வே வேதாயத்ரை கம் பவந்தி ' - (எல்லா வேதங்களும் எவனிடத்தில் ஒன்று சேருகின்றனவோ)

'நாராயணபரா வேதா: (வேதங்கள் நாராயணனையே பிரதிபாதிப்பவை)

"மறையாய நால்வேதத்துள் நின்ற மலர்ச்சுடரே" "வேதமுதல்வன் என்றனர்" ஆயினும் வேதங்கள் கண்ணனை நேரே சொன்னது உண்டோ? எனில்,

"தேவகீபுத்ராய க்ருஷ்ணாய" " ப்ரஹமண்யோ தேவகீபுத்ர" முதலிய இடங்களில் சொல்லியுள்ளன

<u>பெரியாய்:</u>

அந்த வேதங்களும் எல்லைகாண ஒண்ணாதபடி பெரியவனாய் இருப்பவனே!

" யதோ வாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மநஸா ஸஹ" - (எவனை அடைய முடியாமல் மனத்துடன் கூடிய வாக்குகள் திரும்புகின்றனவோ? என்று வேதமும், "நான்மறைகள் தேடி ஓடும் செல்வன்" என்று ஆழ்வாரும் இப்பொருளை அறிவித்தனர்.

தோற்றமாய் நின்ற:

தோன்றி நின்ற - "பிறந்து என்னாமல்" தோன்றி என்ற தால் இவனுக்கு கர்ப்ப வாசத்தால் உண்டாகும் தாழ்மை இல்லை என்று தெரியப்படுத்தப்படுகிறது. கிழக்குத்திக்கிலே தோன்றும் சூரியனுக்கு அத்திக்குக்கும் உள்ள தொடர்பு போன்றது இவனுக்குக் கர்ப்ப சம்பந்தம்.

" ததோகிலஜகத் பத்ம போதாயாச்யுத பாநு நா -
தேவகீ பூர்வஸந்த் யாயா மாவிர் பூதம் மஹாத்மநா" !!

(அதன் பிறகு உலகங்களாகிய தாமரை மலருவதற்காக மகாபுருஷனான அச்சுத சூரியன், தேவகியாகிய கிழக்குத்திக்கில் ஆவிர்ப்பவித்தான்) ------ திங்களும் ஆதித்தியனும் எழுந்தாற்போல் அங்கண் இரண்டும் கொண்டு- (திருப்22) சக்ஷுஷீ சந்த்ர சூர்யௌ - முண்டக உபநிடதம்.

திருத்தக்க செல்வம்:

ஸ்ரீய : பதித்வத்தாலே உண்டான செல்வத்தையும் "அபாங்கா பூயாம்ஸோ யது பரி பரம்ப்ரஹ்ம ததபூத்" (பிராட்டியின் கடைக்கண் நோக்குகள் எப்பொருளின் மீது அதிகமாக விழுந்ததோ அது பரப்பிரம்மாயிற்று.

உன்றன்னைப்பாடி-கூடி-குளிர்ந்து-வாய் உன்னைப்பாடவும் உடம்புகூடவும் நெஞ்சு குளிரவும் வேண்டும்.
" ஸோஸ்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ ப்ரஹ் மணா விபஸ் சிதா"
(அந்த முக்தாத்மா ஸர்வஜ்ஜனான பரமாத்மாவுடன் கூட சகல கலியாணகுணங்களையும் அனுபவிக்கிறான்- வேத வாக்கியம்.
கறவைகள் பின்சென்று (திருப்.28)
அஹமஸ்ம் யபராதாநா மாலயோ கிஞ்சநோ கதி : ।
த்வமேவோ பாயபூ தோ மே பவேதி ப்ரார்த்த நாமதி : ॥
ஸரணாக திரித்யுக்தா ஸாதேவே ஸ்மிந் ப்ரயுஜ்யதாம் ॥
நான் அபராதங்களுக்கு ஓர் இருப்பிடம்; கர்ம, ஞான, பக்தி யோகங்களை அறியாதவன், வேறுகதியற்றவன்; குறைவற்றனான நீயே எனக்கு உபாய பூதனாக வேண்டும்:" - பிரார்த்திக்கும் அறிவே சரணாகதி என்று சொல்லப்படுகிறது. அது இந்த தேவனிடத்தில் பிரயோகிக்கப்படப்படும்" என்று பாஞ்சராத்திரத்தில் சொன்ன பொருளைக் கடைப்பிடிக்கிறார்கள் இங்கு.

ஏழேழ்பிறவிக்கும் :

(திருப்.29) பஹுதா விஜாயதே - என்று வேதமும், பலபிறப்பாய் ஒளிவரும் - என்று ஆழ்வாரும் சொன்ன அளவிட ஒண்ணாத அவதாரங்கள் தோறும் அடிமை செய்ய வேண்டும்.

சிற்றஞ்சிறுகாலே :

(திருப்.29) இப்பாட்டு திரு எட்டெழுத்துக்கு விவரணமாய் உள்ளது. "நீ கோவிந்தா உனக்கு" என்று அகாரத்தின் பொருள் குறிப்பிடப்பட்டது. "உனக்கே" என்னும் ஏகாரத்தினாலே உகாரத்தின் உட்பொருள் உணர்த்தப்பட்டது. நாம் என்று மகாரார்த்தமான ஜீவ சொரூபம் சொல்லப்பட்டது. "உன்றன்னோடு உற்றோமேயாவோம்" என்று நாராயணபதத்தின் பொருள் அறிவிக்கப்பட்டது. எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் ஆட்செய்வோம் என்று ஆய என்னும் சதுர்த்தியின் பொருள் பேசப்பட்டது. மற்றை நம் காமங்கள் மாற்று என்று நம சப்தார்த்தம் சொல்லப்பட்டது. இப்படி எல்லாப் பொருள்களையும் தன்னுள் பொதிந்து கொண்டிருக்கும் அஷ்டாட்சரத்துக்கு விவரணமாக இப்பாசுரம் உள்ளது.

திருமந்திரப் பொருள் ஓம் நமோ நாராயணாய

"எம்பெருமானுக்கே அடிமையாக இருப்பவன் யான். அத்தகைய யான் எனக்கு உரியனாய் இருத்தல் கூடாது; எல்லாப் பொருளுக்கும் தலைவனான நாராயணன் முக உல்லாசத்திற்கு உறுப்பாய் எல்லாவித அடிமைகளும் செய்யப் பெறுவேனாக வேண்டும்" என்பது இதன் பொருள்.

வங்கக்கடல் (திருப் 30)

"மாதவன்" என்று தொடங்கி "திருமால்" என்று முடிப்பதால் துவயத்தின் இரண்டடிகளின் பொருளையும் உணர்த்துகிறார்கள்.

**ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் பிரபத்யே!**
**ஸ்ரீமதே நாராயணாய நம : !!**

ஸ்ரீமான நாராயணனுடைய திருவடிகளை உபயாமாகப் பற்றுகிறேன் - முதல்வாக்கியப் பொருள். அதாவது பின்வரும் இருஅடிகளில் இப்பொருள் உணர்த்தப்படுகிறது.

"வங்கக் கடல் கடைந்த மாதவனைக் கேசவனைத்
திங்கள் திருமுகத்துச் சேயிழையார் சென்றிறைஞ்சி"

துவய - இரண்டாவது வாக்கியத்திற்குப் ' பெரிய பிராட்டியாரும் ஈசுவரனுமான சேர்த்தியில் என்றும் கைங்கரியத்தைப் புரிவேனாக' - என்பது பொருள் - இதை

"செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமாலால்
எங்கும் திருவருள் பெற்று இன்புறுவர்"

என்னும் கடைசி இரண்டடிகள் உணர்த்துகின்றன.

நேச நிலைக்கதவம் நீக்கு (திருப்.16)

கதவுகள் இரட்டையாக இருப்பது போலத் திருமந்திரம், துவயம், சரமஸ்லோகம் ஆகியவை இரட்டையாக இருப்பதால் அவற்றைக் கதவாக உருவகித்து அவற்றின் பொருள்களை உபதேசித்தருள வேண்டும் என்கிறது.

திருமந்திரம் – பிரணவம், மந்திரம் என்று இரட்டை;
துவயம் – பூர்வவாக்கியம் உத்தரவாக்கியம் என்று இரட்டை;
சரமசுலோகம் – பூர்வார்த்தம், உத்தரார்த்தம் என்று இரட்டை;
நாராயணனே நமக்கே பறை தருவான் (திருப்.1)

நாராயணத் தவிர பிற தேவதைகளால் வீடுபேறு அடைய முடியாது ; அவன் ஒருவனே மோட்சத்தை அருளுவுதற்கு ஆதாரமானவன் என்று கூறப் பட்டுள்ளது. யாரிடமிருந்து இவ்வுலகில் உள்ள அசையும் அசையாப் பொருள்கள் எல்லாம் தோன்றினவோ, எந்தப்பரம்பொருளின் பேரருளினால் உலகில் தோன்றிய உயிர்கள் வாழ்கின்றவோ பிரளயம் வரும் போது இவை அனைத்தும் யாரிடத்து ஒடுங்குகின்றனவோ அப்பரம் பொருள் நாராயணனே என்பது உபநிடதக்கருத்தாகும்.

சர்வ தர்மாந் பரித்ய ஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ !
அஹம்த்வா ஸர்வபாபேப்யோ மோட்ச யிஷ்யாமி மாசுச; !!

"தருமங்களை எல்லாம் அறவே நீத்துவிட்டு என்னையே சரணடைக ; பாவங்கள் அனைத்தினின்றும் உன்னை நான் விடுவிப்பேன் வருந்தாதே" பகவத்கீதை - அத்18: சுலோகம்: 66

" மாம் ஏகம் சரணம் விரஜ " அதாவது என்னை ஒருவனையே சரணடைவாயாக உன் பாவங்களை மன்னித்து மோட்சம் அளிப்பேன்; கவலைப்படாதே என்று கண்ணன் கூறுவது இங்கு உணர்த்தப்படுகிறது.

உரையாசிரியர்கள்:

ஸ்ரீ பெரியவாச்சான் பிள்ளை : இவர் திருப்பாவைக்கு மூவாயிரப்படி உரை அருளியவர். இவர் சோழநாட்டில் சங்க நல்லூரில் சர்வஜித் ஆண்டு ஆவணிமாதம் அஷ்டமி திதி ரோகணி நட்சத்திரத்தில் (கி.பி.1167) யாமுநாசார்யருக்கும், நாச்சியாரம்மனுக்கும் திருக்குமாரராய் அவதரித்தார். நாலாயிரதிவ்வியப் பிரபந்தம் முழுமைக்கும் உரை எழுதியவர். இவர் எழுதிய நூல்களில் தற்சமயம் அறுபது மட்டுமே கிடைத்துள்ளது நம்பிள்ளை திருவடிகளிலே பணிந்து எல்லாப் பொருள்களையும் உணர்ந்தார். திருமலையாத்திரையின்போது திருமலைப்பெருமானிடம் திருவேங்கடமுடையான் விக்கிரகம் ஒன்றைப்பெற்று அதைத் தம் சொந்த ஊரான சங்க நல்லூரில் எழுந்தருளுவித்தார் பின்பு திருவரங்க வாசமே. 95 திருநட்சத்திரம் வாழ்ந்தார்.

அழகிய மணவாளப் பெருமாள் நாயனார்:

இவர் திருப்பாவைக்கு ஆறாயிரப்படி உரை அருளியவர். வடக்குத் திருவீதிப்பிள்ளைக்கும் ஸ்ரீரங்கநாச்சியாருக்கும் முதலில் அவதரித்தவர் பிள்ளை லோகாசாரியர்; அடுத்து அவதரித்தவர் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார், இவ்விருவரும் துறவறம் மேற்கொண்டவர்கள் (பிள்ளைலோகாசாரியார் (கி.பி. 1205 இல்) குரோதன ஐப்பசித் திருவோணத்தில் அவதாரம். நாயனார் மார்கழி அவிட்டத்தில் 2,3 ஆண்டுகளுக்குப்பின் அவதாரம். இவர் இயற்றிய சிறந்தநூல் ஆசாரிய இருதயம். பிற திருப்பாவை ஆறாயிரப்படி, அமலனாதிபிரான், கண்ணிநுண் சிறுத்தாம்பு உரைமுதலியன. சுமார் 100 ஆண்டுகள் வாழ்ந்தார்.

திருநாராயணபுரத்து ஆய் (என்னும்) ஜநந்யாசார்யர்

திருநாராயணபுரத்தில், ஐப்பசி, பூராட நன்னாளில், ஸ்ரீ இலட்சுமணாசார்யருக்குத் திருக்குமாரராக அவதரித்தவர். திருப்பாவைக்கு ஈராயிரப்படி, நாலாயிரப்படி உரைகளை எழுதியவர் ஸ்ரீவசன பூஷணத்திற்கும் உரை எழுதியுள்ளார் இவரும் துறவியாக வாழ்ந்தவர் செல்வப்பிள்ளைக்குத் திருவாராதனம் செய்தவர்.

அமரர் ஸ்ரீ வை.மு. கோபாலகிருஷ்ண மாசாரியர், அமரர், ஸ்ரீ உ.வே.கி. ஸ்ரீநிவாச ஐயங்கார் சுவாமி, பி.ஸ்ரீ.ஸ்ரீ. முதலியோரும் உரை வகுத்துள்ளனர்.

வேதாந்த தேசிகரின் கோதாஸ்துதி

இவர் ஒருசமயம் ஸ்ரீவில்லிபுத்தூருக்குச் சென்றார். அங்கு ஸ்ரீஆண்டாளுக்கு வைசாக வசந்த விழா நடந்து கொண்டிருந்தது. கோதையின் விக்கிரகம் கோதை நாச்சியார் நாடக சாலைத் தெருவிலுள்ள திருவேங்கடமுடையான் சந்நிதிக்கு முன்பாகவுள்ள வசந்த மண்டபத்துக்கு எழுந்தருளும் போது தேசிகர் வீதியில் தரிசித்தார். அந்த ஆனந்தம் உள்ளடங்காது இப்பிரந்தத்தை இயற்றினார். இது 29 சுலோகங்களால் ஆயது.

" பெரியாழ்வாரது வம்சமாகிய நந்தவனத்திற்குக் கற்பகக் கொடி போன்ற ஆண்டாள் ஸ்ரீரங்கராஜா என்ற குருவின் சேர்க்கையால் சேவிக்கத்தகுந்த பேரழகு உடையவள் ஆனாள்"- என்பது முதல் சுலோகம்.

அன்னையே உன் திருவடிகளில் அணிந்த மணிச்சிலம்பின் இன்னிசை என் வாக்கில் அமைய வேண்டும்"- 4 ஆம் சுலோகம்.

"அன்னையே ! உன் திருவடிகளில் பிறந்த திவ்வியப் பிரபந்தங்களை அந்த முகத்தாமரையின் " மகரந்தம் என்றும், தேன் என்றும் போற்றுகிறார் " (7)

" நாயக நாயகிபாவம் ஆண்டாளுக்கு ஏற்றது" - (8)

" ஆண்டாள் பிறந்ததால் தென்திசையே பெரும்பேறு பெற்றது" -(11)

" கோதையின் பாதர விந்தத்தில் ஏற்பட்ட பக்தியின் விளைவாகிய இந்தத் துதியை அன்போடு நாள்தோறும் பாராயணம் செய்பவர், பகவானிடம் பக்தியை அடைந்து, மறுமையிலும் மோட்ச மடைந்து இன்புறுவர்" (29).

ஆமுக்தமால்யத

கிருஷ்ணதேவராயர் என்னும் விஜயநகரப் பேரரசர் கலிங்க நாட்டைவெற்றி கொள்ள எண்ணிப் படைஎடுத்துச் சென்றபோது விஜயவாடாவில் சில நாள் இருந்து ஸ்ரீகாகுளத்தில் உறையும் ஆந்திரமதுமதனனைச் (திருமாலை) சேவிக்கச் சென்று ஏகாதசி விரதம் இருந்து அங்கு அப்புண்ணிய இரவில் நாலாம் யாமத்தில் ஒரு கனவுகண்டார். இதில் திருமால் காட்சியளித்து, 'ஸ்ரீ ஆண்டாளின் வரலாற்றைக் காவியமாகப் பாடுவாயாக என்று கூறியருளினார். அதை ஏற்ற மன்னர் தெலுங்கில் இக்காவியத்தை எழுதினார். (சூடிக்கொடுத்த சுடர்க்கொடி) இவர் கி.பி.1590-இல் பட்டம் பெற்றார்.

ஆண்டாள்சந்திர கலாமாலை

இந்நூலாசியர் ஸ்ரீவில்லி என்பது. இவர் ஸ்ரீவில்லிபுத்தூரில் வாழ்ந்த அந்தணர், வேயர் குலத்துதித்தவர், ஆண்டாள் சந்நிதியில் கைங்கரியம் செய்தவர். தாசிவீடே கதியென இருந்ததால், இவருக்குத் தொழுநோய் ஏற்பட்டது. உடலில் துர்நாற்றம் வீசவே, அவ்வூரில் இவரை ஊருக்கு அப்பால் உள்ள திருமுக்குளத்தின் தரையில் இருக்கும் நீராட்ட மண்டபத்தில் சேர்த்தனர். இவரது வயதான தாயார் நாளும் உணவளித்து வந்தனர். இவர் தம் குற்றத்தை உணர்ந்து பிழைபொறுத்தருளுமாறு கோதையாரை வேண்டினார் ஒரு நாள் பெருமழை பொழிய, இருள் கவிந்தது. கோதையார் அவரது தாயார் வடிவில் சர்க்கரைப் பொங்கலைக் கொண்டுசென்று அளித்து, உடலைத்தடவிக் கொடுத்தார். நோய் நீங்கும் என்றார். மறைந்தார் பின் உண்மைத்தாயார் வர உண்மை உணர்ந்தார். அன்று இரவே நோய் நீங்கியது. அந்நிலையில் இந்நூலைப் பாடிப் பணிந்தார் இந்நூல் காப்புச் செய்யுள், அவையடக்கச்செய்யுள் நீங்கலாக 16 செய்யுள்களால் இயற்றப்பெற்றுள்ளது. (பன்னிருசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்) ஆண்டாள் பிள்ளைத்தமிழ்-என்னும் தலைப்பில் ஒருநூல் உள்ளது.

தாய்லாந்தில் மன்னர்முடிசூடிக் கொள்ளும்போது திருப்பாவை-திருவெம்பாவை இசைக்கப்படுகிறது என்பர்.

இவ்வாறு ஸ்ரீஆண்டாளின் பெருமையும், திருப்பாவைப் பனுவலின் சீர்மையும் அளவின்றி உள்ளன. இந்நூலில் பாயிரம், தோழியிரைத் துயிலுணர்த்தல், எம்பெருமானை அடைந்து பயன்பெறுதல் ஆகிய 3 பகுதிகள் உள்ளன. இந்நூலின் 1-5= பாடல்களே பாயிரம். செல்வம், செயல், குணங்களில் 10 வகைப்பட்ட ஆய்ப்பாடிப் பெண்களை அஞ்ஞானத் துயிலிலிருந்து ஞான விழிப்பிற்குக் கொணர்வது இரண்டாம் பகுதி, அவர்களை இறை கைங்கரியத்திற்குத் தகுதியுடையவராகச் செய்வது மூன்றாம் பகுதி.

திருமாலையே கணவராகப் பெற மனவுறுதி பூண்ட தெய்வக் கோதையார் உடல் கட்டவிழப்பெற்று, மனமயமாகி, இத்திருப்பாசுரங்களால் இந்நோன்பிலே பங்குகொண்டு தவம் செய்து திருவரங்கனையே மணந்து அவனொடு கலந்து இன்புற்றார்.

<u>நன்றியுரை</u>

இந்நூலை அடியேன் எழுதிமுடிக்கப் பல ஆண்டுகள் ஆயின, பல மலர்களிலிருந்து தேனைச் சேகரிக்கும் வண்டுபோலப் பலசெய்திகளையும் சேகரித்தேன், வடமொழிச் சொற்களுக்கு ஏற்ற விளக்கம் இயன்றவரை கொடுத்துள்ளேன். குறைகள் இருப்பின் பெரியார்கள் சுட்டிக் காட்டினால் திருத்தம் செய்வேன், இந்நூலுக்கு உரை எழுதுவது எளிதன்று, பண்டைய வியாக்கியான சக்கரவர்த்திகளின் மணிப்பிரவான நடை கடினமானது. பிரதிவாதி பயங்கரம் சுவாமிகளின் உரை, அமரர் வை.மு.கோ. அவர்களின் உரை ஆகியன பெரிதும் உதவின. மேலும் உதவிய துணை நூற்பட்டியலை இறுதியில் சேர்த்திருக்கிறேன்.

இந்நூலுக்கு அழகிய, ஆழ்ந்த அணிந்துரையை வழங்கியுள்ளவர் அடியேனின் முனைவர் பட்ட ஆய்வுக்கு வழிகாட்டிப்பேராசிரியராக இருந்தபெரியார் பாகவத உத்தமர் பேராசிரியர். அ. பாண்டுரங்கனார் (முன்னாள் தமிழ்த்துறைத்தலைவர், புதுவைப் பல்பலைக்கழகம்) அவர்கள், அவருக்கு அடியேன் நன்றி நவில்வதல்லால் வேறு கைம்மாறு என்ன செய்ய இயலும்? மற்றும் ஒரு சிறந்த அணிந்துரை வழங்கியுள்ளவர் டாக்டர்.திருமதி.பிரேமா நந்தகுமார் அவர்கள். அன்னாருக்கும் என் நன்றியைத் தெரிவிக்கிறேன். இந்நூலை அழகிய முறையில் அச்சிட்டுத் தந்த காஞ்சிபுரம், "சரவணா கிராபிக்ஸ்" உரிமையாளர் திரு.சிவா அவர்களுக்கும் என் நன்றி உரியது. மற்றும் இந்நூலுக்கு நிதிஉதவி அளித்த திருமலை திருப்பதி தேவஸ்தான நிர்வாகிகளுக்கும் அடியேனின் உளம் கனிந்த நன்றி உரியது.

இவண்,
அடியார்க்கு அடியேன்-இரா.வ.கமலக்கண்ணன்,
காஞ்சிபுரம்.

**"கண்ணன் கழலிணை நண்ணும் மனமுடையீர் !**
**எண்ணும் திருநாமம் திண்ணம் நாரணமே."**
**– திருவாய்மொழி 10:5:1**

## ஸ்ரீ ஆண்டாள் வரலாறு

"வேதம் அனைத்துக்கும் வித்து" என்று போற்றப்படும் திருப்பாவையையும் நாச்சியார் திருமொழியையும் அருளிச் செய்தவர் ஸ்ரீ ஆண்டாள் ஆவார், குருபரம்பரை நூல்கள் கூறும் இவரது வரலாறு வருமாறு :

செந்தமிழ் தழைத்தோங்கியதும், முச்சங்கம் வைத்துத் தமிழை வளர்த்ததுமான பாண்டிய நாட்டில், கடவுள் தன்மையை இயற்கையிலேயே பெற்ற ஊர் ஸ்ரீவில்லிபுத்தூர் என்னும் திருத்தலமாகும். "மின்னனைய நுண்ணிடையார் கூந்தலில் நுழைந்தவண்டு இசைபாடும் வில்லிபுத்தூர்" என்று பெரியாழ்வாரால் புகழப்பட்ட ஊர், (பெரியாழ்வார் திருமொழி, 2:2:-5) மேலும் அழகிய நடையுள்ள அன்னங்கள் எங்கும் சூழ்ந்து விளையாடும் வில்லிபுத்தூர் "என்று கோதையாரும் பின்னாளில் இவ்வூரைப் புகழ்ந்து உள்ளார். (நாச்.தி.மொழி.1:10), பாண்டிய நாட்டுத் திருப்பதிகள் பதினெட்டனுள் எட்டாவதாக விளங்குவது. மல்லிநாடு எனவும், புதுவை எனவும், தன்வி நவ்வியபுரம் எனவும் வேறு பெயர்களைப் பெற்றது, வேடுவன் வில்லி என்பவன் அதைப் புதியதாக அமைத்தமையால் வில்லிபுத்தூர் என்னும் பெயர் அமைந்தது.

"பொருப்பன்ன மாடம் பொலிந்து தோன்றும் புதுவை" நாச்.தி.மொழி, 1:10,

"பொன்னியல் மாடங்கள் சூழ்ந்த புதுவை" (மேலது, 3:10),
"வேதவாய்த் தொழிலார்கள் வாழ்வில்லிபுத்தூர்" (மேலது, 2:10),

என்றெல்லாம் கோதையாரால் புகழப்பட்ட திருத்தலம் அது.

விஷ்ணுசித்தர் என்னும் பெரியாழ்வார் அவ்வூரில் வடபத்திரசாயிப்பெருமானுக்குத் திருநந்தவனம் உண்டாக்கித் திருமாலை கட்டுதல் முதலிய கைங்கரியங்களைச் செய்து கொண்டு வாழ்ந்து வந்தார். அவர் ஒருநாள் மலர்வனத்தில் மண்ணைக் கிளறும் பொருட்டுப் பணி செய்து கொண்டிருந்தபோது, அங்கிருந்த திருத்துழாய் அடியில் மிக்க ஒளியுடன் கூடிய ஒரு பெண் மகவு இருப்பதைக்கண்டார். "புதுமதுப் பொங்கும் பச்சைப் பசுந்துழாய் பூட்டினூடே கதும் என விழியால் நோக்கிக் கருணையின் கொழுந்தைக் கண்டார்," என்று வடிவழகிய நம்பி தாசர் போற்றுவார். நள ஆண்டு ஆடி மாதம் வளர்பிறை சதுர்த்தி திதி, செவ்வாய்க்கிழமை

கூடிய பூர நன்னாளில் இவர் அவதரித்ததாகக் குருபரம்பரை நூல்கள் கூறுகின்றன. மேலும் இவர் பூமிப்பிராட்டியாரின் அமிசமாகத் தோன்றியவர் என்றும் அவை இயம்புகின்றன.

திருவாடிப் பூரத்துச் செகத்துதித்தாள் ஸ்ரீ ஆண்டாள் சந்திரகலாமாலை-2

**"ஆடிப்பூரம் மேன்மேலும் மிக விளங்க விட்டுசித்தன் தூய திருமகளாய் வந்து"** -தேசிகமாலை, பிரபந்தசாரம்

என்று பின்வந்தோர் இந்நன்னாளைப் போற்றுவாராயினர்.

அக்குழந்தைக்கு அவர் கோதை என்று பெயர்சூட்டி வளர்த்துவந்தார்,

'கோதை' என்னும் சொல்லுக்கு 'மாலை' என்று ஒரு பொருள் உண்டு 'கோதா' என்பது சாமவேத சாகை ஒன்றின் ஆசிரியையான பெண் ஒருத்தியின் பெயராகும் என்பது ' ஸர்மோனியர் வில்லியம்ஸ்' என்பவரின் சமஸ்கிருத - ஆங்கில அகராதியிலிருந்து தெரிய வருகிறது. அப்பழைய ஞானப் பெண்மணியின் பெயரைச் சூட்டினார் எனவும் கருதலாம்.

கோதை சிறுமியாய் வளர்ந்து சிற்றில் கட்டி விளையாடும் போதும், அரங்கனுக்குத் தனி அறை அமைக்கின்றனாள்; அங்குப் பெருமான் அமர்கின்றான். அவனுடைய சங்கு, சக்கரம், தண்டு, வாள், வில் (இவற்றின் திருநாமம் முறையே பாஞ்சசன்னியம், சுதரிசனம் கௌமோதகி, நந்தகம், சார்ங்கம் என்பன) ஆகிய கருவிகள் வரையப்பட்டுள்ளன. இக்காட்சியைப் பெரியாழ்வார் நோக்குகிறார், வியந்து பாடுகிறார்.

**செய்ய நூலின் சிற்றாடை**
**செப்ப னுடுக்கவும் வல்ல ளல்லள்**

பெரியாழ்வார் திருமொழி—**3 7 1**

**பொங்கு வெண் மணற் கொண்டு**
**சிற்றிலும் முற்றத்து இழைக்கலுறில்**
**சங்க சக்கரம் தண்டுவாள்**
**வில்லு மல்லது இழைக்கலுறாள்**

மேலது 3 7 3

இவ்வாறு கோதைக்கு நன்னெறியும், ஒழுக்கமும் ஓங்கியுலகளந்த உத்தமனிடம் உயர்ந்த சிந்தனையும் இயல்பாகவே அமைகின்றன.

குழுவிப் பருவம் மாறிக் குமரிப் பருவம் அடைகின்றாள் தந்தையுடன் மலர்வனம் புகுந்து, மலர்பறித்தல், மாலை தொடுத்தல் ஆகிய பணிகளைச் செய்து வரும்போது அவள் திருவுள்ளத்தில் மாயவன் உருவம் பதிகிறது. அவனை விரைந்து அடைய மனம் உந்தவே அவனுக்கு இடப்படும் பொருள்களைக் காணும் போது அவை தனக்கும் உரிமை உடையன என்ற சிந்தனை ஏற்படுகிறது. அம்முறையிலேயே தன் தந்தை வடபத்திரசாயிக்கெனக்கட்டி வைத்த மாலைகளில் கோதையின் கருத்துச்செல்ல அவற்றை அணிந்துகொள்ளும் நிலை ஏற்பட்டது.

திருமாலைத்தவிர வேறு யாரையும் மணப்பதில்லை என்னும் உறுதியான கொள்கை ஏற்படுகிறது. ஆகவே பெருமானுக்சென்று தொடுத்து வைத்திருந்த மாலையை எடுத்துத்தான் அணிந்து கண்ணாடியில் பார்த்து, அவனுக்கு ஒத்திருப்பேனோ ஒவ்வாது இருப்பேனோ? என்று ஆராய்ந்து பார்த்துவிட்டு மாலையை எடுத்து வைக்கும் வழக்கம் உண்டாயிற்று, அம்மாலையைப் பெருமான் அணிய அது மேலும் மணம் வீசத் தொடங்கியது. அது கண்டு பெரியாழ்வாரின் பக்தியின் மேன்மை என அருச்சகர் கருதி அவரிடம் மிகுந்த மதிப்புடையவரானார்.

இதை ஒருநாள் கண்ட ஆழ்வார் நடுங்கினார். மகளைச் சினந்தார், இத்தகைய செயலை இனிச்செய்யாதே, அருட்கடலாகிய பெருமான் இப்பிழையைப் பொறுப்பானாக என்று தம் மகளைத் தேற்றினார் பின் வேறு புதிய மாலையைத் தொடுத்துச் சென்று அணிவித்தபோது வேறுபாடு தோன்றியது. அன்றிரவு ஆழ்வார் உறங்கவில்லை பின் கண்ணயர்ந்தபோது. அவர்கனவில் பெருமான் தோன்றி ஆண்டாள் சூடிக்கொடுத்த மாலையையே தொடர்ந்து அணிவிக்கப் பணித்தார்.

இறைவன் பணித்தபடி அன்றுமுதல் அவ்வாறே செய்யப்பட்டது. சூடிக்கொடுத்த நாச்சியார் என்று அன்று முதல் இவர் அழைக்கப்பெற்றார். ஆண்டாள் மேலும் ஆற்றாமை கொண்டார். மனிதர் யாரையும் மணக்கமாட்டடேன் என்று உறுதிபட மொழிந்தார்.

பெருமானைக்காண, உறவாட விரும்பினார். கண்ணன் ஆயர்பாடியில் பிறந்த போது ஆய்ச்சியரோடு ஆடிய இளமை விளையாட்டுகளை எண்ணிப்பார்த்தார்.

பின்பு ஆயர் மகளிர் நோற்ற நோன்பினை எண்ணி, அவ்வாறே தானும் நோற்றுக் கண்ணனை அடைய விரும்பி, பாவனையால் இயற்றிப் பயன் பெற்றார். பின்தம்மைக் கண்ணன் கைத்தலம் பற்றிக் கடிமணம் புரிவதாகக் கனவு கண்டார்.

**பெருப் பெருத்த கண்ணாலங்கள் செய்து**
**பேணிநம் இல்லத்துள்ளே**
**இருத்துவான் எண்ணி நாம் இருக்க**
**இவளும் ஒன்று எண்ணுகின்றாள்**

- பெரியாழ்வார் திருமொழி 3 7 10

என்று எண்ணிய ஆழ்வார் "அம்மா எப்பெருமானை நீ மணக்க விரும்புகிறாய்?" என்று கேட்டதற்கு, திருவரங்கனையே என அன்புடன் மொழிந்தார் கோதை. பெருமானும் ஏற்றுக் கொள்ளத் திருவுள்ளம் கொண்டான். ஆழ்வாருக்கும், அருச்சகருக்கும் கோதையாரைத் திருவரங்கத்திற்கு அழைத்து வந்தால் ஏற்றுக் கொள்வதாகப்பணித்தான். அவ்வாறே இவளை அழைத்துச் செல்ல, அரங்கன் பள்ளி கொண்டு சேவை சாதிக்கும் (ஓங்கார) பிரணவ விமானக் கருவறையை, திருமணத்தூண்கள் அமைந்திருக்கும், திருநிலை அறையை இவர் அடைந்த போது பெருமாளோடு கலந்து மறைந்தார்.

**ஒரு மகள் தன்னை உடையேன் உலகம் நிறைந்த புகழால்**
**திருமகள் போல வளர்த்தேன் செங்கண்மால் தான்**
**கொண்டுபோனான்**
**பெருமகளாய்க்குடி வாழ்ந்து பெரும்பிள்ளை பெற்ற அசோதை**
**மருமகளைக்கண்டு கந்துமணாட்டுப்புறம் செய்யுங்சொல்லோ"**

என்று வருந்தி நின்றார் ( ஸ்ரீ ஆண்டாள் மறைந்தது கண்டு வருந்திய பெரியாழ்வாரிடம் தாம் கோதையுடன் ஸ்ரீவில்லிபுத்தூரில் இருப்பதாகக் கூறினார். அருகில் கருடாழ்வாரும் அங்கு உள்ளார். இது அ.உ.ம. என்னும் எழுத்துகள் சேர்ந்த பிரணவத்தைச் சுட்டும் என்பர்.

*காலம்*

திருப்பாவை 13-ஆம் பாசுரத்தில் வரும் ஒரு தொடர் இவரது காலத்தைக் கணித்து அறிய உதவுகிறது.

புள்ளின்வாய் கீண்டானை . . . .
. . . . . . . . . . . . .
வெள்ளி எழுந்து வியாழம் உறங்கிற்றுப்
புள்ளும் சிலம்பின காண் போதரிக் கண்ணினாய்
குள்ளக் குளிரக் குடைந்து நீ ராடாதே
பள்ளிக் கிடத்தியோ பாவாய்நீ நன்னாளால்
கள்ளம் தவிர்ந்து கலந்தேலோ ரெம்பாவாய்

மார்கழி நோன்பு நோற்க ஆற்றங்கரைக்குச் செல்லும் பெண்கள், கிழக்கு வெளுக்கும் முன்பே நீராடித் தங்கள் நோன்புச் சடங்குகளை வைகறையில்முடித்து விடுவர், அதிகாலையில் வெள்ளி முளைத்ததைக் கண்டு நீராடுவதும், பயணம் செய்வதும் எக்காலத்தும் நடைபெற்றுவந்த வழக்கே ஆகும்.

வெள்ளி தோன்றப் புள்ளுக்குர லியம்பப்
புலரி விடியல் பகடுபல வாழ்த்தி (புறம் 385)
விளக்குறு வெள்ளி முளைத்து முன் தோன்ற
தெளித்தலைத் தெண்ணீர் குளித்தனன் ஆடி
(பெருங்கதை 1 53 81)

என்று இவ்வாறு பழங்காலத்தும் விடிவெள்ளி உதயம் கண்டு நன் மக்கள் வேண்டிய செயல்களைச் செய்து வந்தனர் என்பதை அறியலாம்.

ஆனால் சூடிக்கொடுத்த சுடர்க்கொடியோ வெள்ளி எழுந்தது என்றதுடன் நில்லாது வியாழம் உறங்கிற்று என்று வேறு கிரகத்தின் நடை ஒன்றையும் சேர்த்துக் கூறுவதை அறிய முடிகிறது.

மார்கழி மாதத்துப் பௌர்ணமியில் விடியுமுன் வெள்ளி முளைக்க வேண்டும் என்ற நியதி இல்லை வெள்ளி எழுவதும் உண்டு. எழாமையும் உண்டு அவ்வெள்ளி ஒருபுறம் உதயமாக மறுபுறம் வியாழம் மறைந்ததென்று கோதையார் குறிப்பிட்டுக் கூறுவது அது அவர் காலத்து நிகழந்த ஒரு குறிப்பிட்டத்தக்க நிகழ்ச்சியே ஆகும். வெள்ளியின் எழுச்சியும்-வியாழனது வீழ்ச்சியும் ஒருங்குநிகழ்ந்து இருப்பதை நேரில் கண்டு இவ்வாறு பாடியுள்ளார்.

பெரியாழ்வாரின் காலம் கி.பி. 8 ஆம் நூற்றாண்டு என்று ஆராய்ச்சி செய்து நிறுவியுள்ளார் மு. இராகவையங்கள் அவர்கள்,

(ஆழ்வார்கள் காலநிலைபக்கம்.79 முதல் 101 முடிய) வெள்ளி, வியாழங்கள் எதிர் தோன்றும்படி நேர்ந்த நிகழச்சி இந்நூற்றாண்டில் கி.பி 731 டிசம்பர் 18 ஆம் நாள் அதிகாலை 3-50 மணி முதல் 4-00 மணி முடிய உள்ள காலமாகும். நீராடுவதற்குச் சிறிது முன்னதாகத் துயிலுணர்ந்த ஆண்டாள், தம் எதிரே கண்ணாரக் கண்ட வான நிகழ்ச்சியையே இங்ஙனம் பாடலாயினர். இதுவே திருப்பாவை தோன்றிய அருட்காலமாகும்.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீ ஆண்டாள் திருவடிகள் துணை.

---

பொதுத் தனியன்:

ஸ்ரீவேதாந்த தேசிகன் தனியன்:
ராமாநுஜ தயாபாத்ரம் ஜ்ஞாந வைராக்ய பூஷணம்
ஸ்ரீமத் வேங்கட நாதார்யம் வந்தே வேதாந்த தேஸிகம்.
-பிரம்ம தந்திர ஸ்வதந்த்ர ஜீயர் அருளியது.

(பொருள்) ஸ்ரீராமாநுஜரின் கருணைக்குப் பாத்திரமானவரும், ஞானம் வைராக்கியம் ஆகியவற்றைத் தம் அணிகலன்களாகப் பூண்டவரும், வேங்கடநாதாரியர் என்ற பெருமைக்குரியவரும் ஆகிய வேதாந்த தேசிகரை வணங்குகிறேன்.

மணவாள மாமுனிகள் தனியன்

ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்யாதி குணார்ணவம்,
யதீந்த்ர ப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம்.

(பொருள்) திருமலை ஆழ்வார் என்னும் திருவாய் மொழிப்பிள்ளையின் திருவருளுக்கு உரியவரும், ஞானம்-பக்தி முதலிய நற்குணங்களுக்குக் கடல் போன்றவரும் எம்பெருமானாரிடம் பக்தியுடையவருமான மணவாள மாமுனிகளை வணங்குகிறேன்.

குருபரம்பரைத் தனியன்

லக்ஷ்மி நாத ஸமாரம்பாம் நாத யாமுந மத்யமாம்
அஸ்மதா சார்ய பர்யந்தாம் வந்தே குருபரம்பராம்.
-கூரத்தாழ்வான் அருளியது..

---

(பொருள்) எம்பெருமானைத் தொடக்கத்திலே உடைத்தாய், ஸ்ரீமந் நாதமுனிகளையும் ஆளவந்தாரையும் இடையிலே உடைத்தாய், எமக்கு ஆசாரியரான எம்பெருமானாரை முடிவிலே உடைத்தான ஆசாரிய பரம்பரையை வணங்குகிறேன்.

<u>எம்பெருமானார் தனியன்</u>

**யோநித்ய மச்யுத–பதாம்புஜ–யுக்மருக்ம**
**வ்யா மோகதஸ் ததிதராணி த்ருணாய மேநே**
**அஸ்மத் குரோர் பகவதோஸ்ய தயைக ஸிந்தோ:**
**ராமாநுஜஸ்ய சரணௌ ஸரணம் ப்ரபத்யே.**

-கூரத்தாழ்வான் அருளியது.

(பொருள்) எந்த இராமாநுஜர், எப்பொழுதும் அழிவில்லாதவனான எம்பெருமானுடைய இரண்டு திருவடித் தாமரை களாகிற பொன்னிடத்தில் வைத்த விருப்பத்தினால், அந்தத் திருவடிகளுக்குப் புறம்பான பொருள்களைத் துரும்பாக நினைத்தாரோ, அப்படிப்பட்ட என்னுடைய ஆசாரியரும், எல்லாக் குணங்களும் நிறைந்த வரும் அருட்கடலானவருமானஇந்த இராமாநுஜருடைய இருதிருவடிகளையும் துணையாகப் பற்றுகிறேன்.

<u>நம்மாழ்வார் தனியன்</u>

மாதா பிதா யுவதயஸ் தநயா விபூதிஸ்
ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம்
ஆத்யஸ்ய ந: குலபதேர் வகுளாபிராமம்
ஸ்ரீமத் ததங்கிரியுகளம் ப்ரணமாமி மூர்த்நா.

-ஆளவந்தார் அருளியது.

(பொருள்) என்னைச் சேர்ந்தவர்களுக்கு எப்பொழுதும் தாய், தந்தை பெண்டிர், மக்கள், செல்வம் மற்றுமுள்ள எல்லாமும் எந்த ஓர் ஆழ்வார் திருவடிகளோ, நமக்குக் குலமுதல்வராகிய அவ்ஆழ்வாருடைய, மகிழ மலர்களினால் அழகு பெற்று விளங்கும் அந்தத் திருவடிகளை வணங்குகிறேன்.

<u>ஆழ்வார்கள், உடையவர் தனியன்</u>

பூதம் ஸரச்ச மஹதாஹ்வய – பட்ட நாத –
ஸ்ரீ பக்திஸார குலசேகர – யோகி வாஹாந்
பக்தாங்க்ரிரேணு–பரகால–யதீந்த்ர மிஸ்ராந்
ஸ்ரீமத் பராங்குச முநிம் ப்ரணதோஸ்மி நித்யம்.

-பராசரபட்டர் அருளியது.

(பொருள்) பூத்தாழ்வார், பொய்கையாழ்வார், பேயாழ்வார், பெரியாழ்வார், திருமழிசையாழ்வார், குலசேகராழ்வார், திருப்பாணாழ்வர், தொண்டரடிப் பொடியாழ்வர், திருமங்கையாழ்வர், நம்மாழ்வார், எம்பெருமனார் ஆகிய இவர்களை நாள்தோறும் வணங்குகிறேன்.

## திருப்பாவையின் தனியன்

நீளா துங்க ஸ்தநகிரிதடீஸுப்த முத்போத்ய க்ருஷ்ணம்
பாரார்த்யம் ஸ்வம் ஸ்ருதி ஸதஸிரஸ்ஸித்த மத்யா பயந்தீ,
ஸ்வோச்சிஷ்டாயாம் ஸ்ரஜி நிகளிதம் யா பலாத்க்ருத்ய புங்க்தே
கோதா தஸ்யை நம இத மிதம் பூய ஏவாஸ்து பூய:

(பொருள்) எந்தக் கோதையானவள் தன்னாலே சாத்திக் கொண்டு கழிக்கப்பட்ட மாலையிலே, கட்டுண்பவனும், நப்பின்னைப் பிராட்டியினுடைய பருத்துள்ள ஸ்தனமாகிற மலையினடைய தாழ்வரையிலே தூங்குகிறவனுமான கிருஷ்ணனை எழுப்பி, பலவான வேதங்களின் அந்தங்களிலே (உபநிடத்துக்களிலே) ஏற்பட்ட தனது பாரதந்திரியத்ததை தெரிவிக்கின்றவளாய் வலிய அனுபவிக்கிறாளோ, அந்தக் கோதையின் பொருட்டு இந்த இந்த வணக்கமானது மீண்டும் மீண்டுமே ஆகட்டும் (எ.று)

(சிறப்புப் பொருள்) இதனால், திருப்பாவையை அருளிச்செய்த ஸ்ரீஆண்டாளைச் சரணம் புக வேண்டிய வகையை எல்லாரும் உணர்ந்து அனுசந்திக்கும்படியை, ஸ்ரீபட்டர் அருளிச் செய்தார் என்க.

திருவரங்கம் திருத்தலத்தில் திரிவிக்கிரமன் திருமதிள் பழுதுபட்டிருந்தது. அதனைக் கட்டத் தொடங்கிய வீரசுந்தர பிரமராயன் என்னும் அரசன், கூரத்தாழ்வானின் சீடர் பிள்ளைப் பிள்ளையாழ்வானின் திருமாளிகையை இடித்தான். அதைப்பட்டர் தடுத்தார்; அதனால் வெகுண்ட மன்னன் பட்டரைத் திருவரங்கத்தை விட்டுவெளியேறுமாறு ஆணையிட்டான். பட்டர் திருக்கோட்டியூருக்கு எழுந்தருளினார். பெரிய பெருமாளைப் பிரிந்த துக்கம் தணிய பட்டரை ஒரு சுலோகத்தால் ஸ்ரீ ஆண்டாளையும், ஒன்றால் ஆழ்வார்களையும் துதிக்குமாறு நஞ்சீயர் வற்புறுத்த, ஸ்ரீ ஆண்டாளை இந்தச் சுலோகத்தாலும், ஆழ்வார்களை 'பூதம்சரஸ்ய' என்று தொடங்கும் சுலோகத்தாலும் பட்டர் துதித்துப்போற்றினார்.

'நப்பின்னை கொங்கைமேல் வைத்துக் கிடந்த மலர்மார்பா வாய்திறவாய்' 'உம்பர்கோமானே உறங்காது எழுந்திராய்', 'உன்றன்னோடு உற்றோமே யாவோம் உனக்கே நாம் ஆட்செய்வோம்' என்றவற்றைத் திருவுள்ளம் பற்றி முன்னிரண்டு பாதங்கள் அருளிச் செய்யப்பட்டன.

கோதை-மாலை, மாலை போல் இனியவளாய் இருந்தது பற்றிய பெயர். கோதா>கோதை என்று விகாரப்பட்டது என்றும் கூறுவர். அதற்கு கோ-வாக்கை; தா-கொடுப்பவள்; எம்பெருமானைப் பற்றிய பாமாலையைப் பாடிக் கொடுப்பவள் என்று பொருள் ஆகும்.

## உய்யக் கொண்டார் அருளிய தனியன்

அன்ன வயற்புதுவை யாண்டா ளரங்கற்குப்
பன்னு திருப்பாவைப் பல்பதியம் –இன்னிசையால்
பாடிக் கொடுத்தாள்நற் பாமாலை பூமாலை
சூடிக் கொடுத்தாளைச் சொல்லு,

(பொருள்) (நெஞ்சே!) (பலரும் பொருள் சிறப்புகளை) ஆராய்ந்து கொண்டாடுகின்ற பல (30) பாசுரங்களையுடைய தான, திருப்பாவை என்ற பாட்டுக்களினாலாகிய நல்லமாலையை இனிய இசை அமைய ஸ்ரீரங்கநாதன் விஷயமாகப் பாடிக் கொடத்தவளும், பல வகைப்பட்ட மலர்களை இட்டுத் தொடுத்த மாலையை (தன் முடியிலே) சூட்டிக்கொண்டு (அதை வடபெருங் கோயிலுடையானுக்குச் சமர்ப்பிக்கும்படி) கொடுத்தவளுமான, அன்னப் பறவைகள் இயங்குகிற கழனிகளையுடைய ஸ்ரீவில்லிபுத்தூரில் திருவவதரித்த ஸ்ரீஆண்டாளைப் போற்றுவாயாக.

(சிறப்புப் பொருள்) இது நெஞ்சை நோக்கிக் கூறியதாக உய்யக் கொண்டாரால் அருளிச் செய்யப்பட்டது.

ஆண்டாள் கண்ணபிரானைக் குறித்துத் திருப்பாவை பாடியிருக்க, அரங்கற்குப் பாடிக் கொடுத்தாள் என்றது-இருவரும் ஒருவரே ஆதலாலும், பள்ளி கொண்ட பெருமாளைத் துயிலெழுப்பினாள் என்பது பொருந்து மாதலாலும் என்க. 'கோவலனாய் வெண்ணெய் உண்ட வாயன்...... அணியரங்கன்' என்று கண்ணனையும் அரங்கனையும் வேறுபாடின்றித் திருப்பாணாழ்வாரும் அருளிச் செய்திருத்தல் காண்க. ஆண்டாள் பாமாலையைப் பாடிக் கொடுத்து, பூமாலையைச் சூடிக்

கொடுத்தனள் என்க. பூமாலை போல, இப்பாமாலையும் பெருமானது திருவுள்ளத்துக்கு உவப்பைத் தரும் என்க. பூமாலையில் கந்தம் பொலியும் ; பாமாலையில் சந்தம் பொலியும்.

சூடிக் கொடுத்தாளை-என்ற இடத்திலுள்ள இரண்டாம் வேற்றுமை உருபு ஆண்டாள் என்ற இடத்தில் பிரித்துக் கூட்டப்பட்டது. திருப்பாவையைச் சேவிப்பதற்கு முன்னே ஆண்டாளைப் போற்றச் சொல்வதால், அவள் திவ்வியப்பிரபந்தத்திலும் அவள் திருநாமமே முதலில் அனுசந்திக்கப்பட வேண்டும் என்பதாம்.

சொல்லு-முற்றியலுகர இறுதி பெற்ற நேரிசைவெண்பா.

சூடிக் கொடுத்த சுடர்க் கொடியே! தொல்பாவை
**பாடி யருளவல்ல பல்வளையாய்! – நாடி நீ**
**வேங்கடவற் கென்னை விதியென்ற விம்மாற்றம்**
**நாங்கடவா வண்ணமே நல்கு.**

-இதுவும் உய்யக்கொண்டார் அருளியது என்பர்.

(பொருள்) பூமாலையைச் சூட்டிக்கொண்டு (எம்பெருமானுக்கு) சம்ர்ப்பித்த ஒளி பொருந்திய கொடி போன்றவளே! (திருவாய்ப்பாடி இடைப் பெண்கள் மேற்கொண்ட பழமையான நோன்பை (திருப்பாவை என்னும் பிரபந்தத்தால்) பாடி (உலகத்தார்க்குக் கருணையோடு கொடுக்கவல்ல பலவளையல்களை அணிந்தவளே! நீ, (எம்பெருமானிடம்) விருப்பம் கொண்டு திருவேங்கட முடையானுக்கு உரியவளாக) என்னை வாழ்க்கைப் படுத்துவாயாக' என்று முன் மன்மதனை நோக்கிச் சொன்ன இந்தச் சொல்லின் பொருளை (உனது அடியவர்களான) நாங்கள் கடந்து போகாதபடி கருணை செய்வாயாக.

(சிறப்புப் பொருள்) எம்பெருமான் விஷயத்தில் உனக்கு எவ்வளவு அன்பு உள்ளதோ அவ்வளவு அன்பு உனது அடியவர்களான எமக்கும் உண்டாகும்படி நீ கருணை செய்ய வேண்டும் என்று ஆண்டாளை நோக்கி வேண்டியது இப்பாசுரமாகும். நாச்சியார் திருமொழியில் 'அனங்கதேவா ! ..... வேங்கடவற்கென்னை விதிக்கிற்றியே' -என்றது கொண்டு, 'வேங்கடவற் கென்னை விதியென்ற இம்மாற்றம்' எனப்பட்டது.

மாற்றம் என்ற சொல்லின் பெயர் அதன் பொருளுக்கு ஆனது- சொல்லாகு பெயர். பாவைபாடி-இரண்டாம் வேற்றுமைத் தொகையாதலின் இயல்பு. தொல்பாவை-பழமையான திருப்பாவை என்ற பிரபந்தத்தை என்னுமாம்.

'சூடிக்கொடுத்த சுடர்க்கொடி' -கொடியானது ஒரு கொள் கொம்புடன் அணைந்தன்றித் தரித்து நிற்கமாட்டாதவாறு போல, இவ்ஆண்டாளும் வாசுதேவ தருவை அணைந்தன்றித் தரிக்க இயலாதவள் ஆதலால் கொடியாகக் கூறப்பட்டனர்.

ஆண்டாளுக்குத் திருவேங்கடமுடையான் திறத்து எவ்வாறான காதல் ஏற்பட்டதோ, அவ்வாறான காதல் தமக்குப் பிறக்க வேண்டும் என்பது இதனால் பிரார்த்திக்கப்படுகின்ற தெனவும் கருத்து உரைப்பர்.

**தனியன் உரை முற்றுப் பெற்றது.**
**ஆண்டாள் திருவடிகளே சரணம்.**

## திருப்பாவை

இது-ஆண்டாள் அருளிச்செய்த இருதிவ்வியப் பிரபந்தங்களுள் முதலாவது, மற்றொன்று நாச்சியார் திருமொழி ஆகும்.

நாதமுனிகள் என்னும் ஆசாரியரால் வகுக்கப்பட்டதான தமிழ்வேதமாகிய நாலாயிர திவ்வியப் பிரபந்தத்துள் முதலாயிரத்துள் இரண்டாவது திவ்வியப்பிரபந்தமாகச் சேர்க்கப்பட்டது, இத்திருப்பாவை.

திரு-என்னும் பலபொருள் ஒருசொல் தேவர்கள், அடியார்கள், ஞானநூல்கள், மந்திரங்கள் முதலிய மேன்மையுடைய எப்பொருள்களுக்கும் சிறப்புடைய சொல்லாகி, அவற்றிற்கு முன்னே சிறப்புப் பொருளைக் காட்டிவரும். திருமால், திருமழிசையாழ்வார், திருவாய்மொழி, திருவெட்டெழுத்து, திருவரங்கம், திருமலை, திருவடி எனவும் வழங்குவதை அறிக. இங்கே இது-நூலுக்கு அடைமொழி. மேன்மையாகிய பாவை எனப் பண்புத்தொகையாவாவது, மேன்மையையுடைய பாவை என இரண்டனுருபும் பயனும் தொக்க தொகையாகவாவது விரிக்க.

பாவை-இச்சொல்லுக்குப் பல பொருள் உண்டு எனினும், இங்கு நோன்பு என்று பொருள். இந்நூலில் ஆண்டாள், முன்

கண்ணபிரானை நோக்கி நோன்பு நோற்ற ஆயர்குலப் பெண்களின் தன்மையை அடைந்து, 'நம் பாவைக்குச் செய்யும் கிரிசைகள் கேளீரோ' என்று தான் நோன்பு நோற்பதாக் கொண்டு அதற்கு இயைந்த அம்சங்களை அருளிச் செய்துள்ளதால் இதற்குத் திருப்பாவை என்று பெயர் அமைந்தது என்பர்.

இந்நூலில் உள்ள 30 பாடல்களில் இறுதிப்பாடல் ஒன்று நீங்கலாக மற்ற 29 பாடல்களும், 'ஏலோரெம்பாவாய்' எனவும், இறுதிப்பாட்டு 'எம்பாவாய்' எனவும் முடிவடையும். மாணிக்கவாசகர் இயற்றிய திருவாசகத்தில் 'ஏலோரெம்பாவாய்' என்று பெயர் வழங்கி வருதலும் இங்கு ஒப்புநோக்கத் தக்கது.

கூரத்தாழ்வான் திருக்குமாராகிய பராசரபட்டருக்குத் திருநெடுந்தாண்டகத்தில்போல, எம்பெருமானார்க்கு இத்திருப் - பாவையில் அளவற்ற அன்புடைமை உண்டு. ஆகவே உடையவர்க்குத் 'திருப்பாவைஜீயர்' என்னும் சிறப்புப் பெயரும் உண்டு. ஆனது பற்றியே 'கோதை தமிழ் ஐயைந்தும் ஐந்தும்அறியாத மானிடரை வையம் சுமப்பது வம்பு' என்றார் ஆன்றோரும்.

எம்பெருமானுக்கு ஆட்செய்கையே பரமபுருடார்த்தம் என அறுதி செய்தல் இப்பிரபந்தத்தின் உள்ளுறையாகும்.

## தோற்றுவாய்

சாதாரண மனிதர்களைக் காட்டிலும் மிகுந்த பெருமைக்குரியவர் முனிவர்கள் ஆவர்.அவர்களினும் மிக்கபுகழுடையோர் ஆழ்வார்கள். அவ் ஆழ்வார்கள் பதின்மருள்ளும் மிக்க சிறப்புடையவர் பெரியாழ்வார். (திருவரங்கனுக்கே மாமனாரான பெருமை) அவரினும் அவர் திருமகளாராகிய ஆண்டாள் மிகவும் பெருமைக்குரியவளாவாள். ஏனெனில், ஆழ்வார்கள்தாங்கள் சம்சாரத்தில் கிடந்துறங்கா நிற்க, எம்பெருமான் தானாக வந்து அவர்களை உணர்த்த, பிறகு அவர்கள் உணர்ந்தனர். ஆண்டாள் அவ்வாறன்றி மணத்துடன் முளைக்கும் திருத்துழாய் போன்று எம்பெருமானிடத்து ஆராத காதலுடன் அவதரித்து, இவள்தானே அப்பெருமான் சந்நிதியில் சென்று 'உம்பர் கோமானே உறங்காது எழுந்திராய்' என்று அவனை உணர்த்தினள் ஆதலால் ஆழ்வார்களைவிட ஆண்டாளுக்குள்ள சிறப்பு சொல்லக்கூடிய அளவன்று.

அன்றியும், ஆடவரை ஆடவர் கண்டு காமுறுவதைக் காட்டிலும் பெண்கள் கண்டு காமுறுதல் பள்ளமுடையாய் இருக்கும்

என்பது அனைவரும் அறிந்த ஒன்றே. அவ்வகையில் ஆழ்வார்கள் காமத்தின் மெய்ப்பாட்டுக்காகப் பெண்ணுடை உடுத்திப் பேசினர் ; இவட்கு அங்ஙனம் செய்ய வேண்டிய அவசியமில்லை.

இத்தகைய பெருமைகள் அமையப்பெற்ற கோதை, மணப்பருவம் எய்தி, அதற்குரிய ஞானபக்திகள் அதிகரிக்கப்பட்டு, 'மானிடவர்க் கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்' என்று மனித நாற்றத்தைப் பொறுக்கமாட்டாமல், பெருமானையே மணாளனாக அடைய விரும்பி, ஸ்ரீவில்லிபுத்தூரில் கோயில் கொண்டுள்ள வடபெருங்கோயிலுடையானைத் தழுவிப் பரிமாறப் பெறவேண்டும் என்று விரும்பிச் செல்ல, அவன் அதற்கு முகம் காட்டாமையாலே மிகவும் மனம் நொந்து 'இப்பெருமானுடன் கலவி பெற்றுக் களித்தார் யாரேனும் உண்டோ? ' என்று ஆராய்ந்த இடத்து, 'திருவாய்ப்பாடியிலுள்ள ஐந்து இலட்சம் குடி ஆயர்குலப் பெண்கள் இவனுடன் கலந்து களிக்கப் பெற்றனர்' என்று உணர்ந்து, 'அக்கலவி பண்டைக் காலத்தில் நடந்ததொன்றாகையாலே அதில் நமக்கு வாய்ப்பின்றி ஒழிந்தது. இனி அவன் உலாவிய அடிச்சுவடும், அவனும் பெண்களுமாகத் திளைத்த யமுனா நதியும், அவன் பசுக்கூட்டத்தைக் காக்க எடுத்த கோவர்த்தன மலையும் கிடந்தனவாகில் அவற்றைக் கொண்டாகிலும் தரிப்போம்' என்று அங்குச் செல்ல நினைக்க, பகவானைப் பிரிந்த பிரிவால் வந்த மெலிவால் இவ்ஆண்டாள் அவ்வளவு தொலைவு செல்ல இயலாவதவளாகி, இனிநாம் வாழ்வது எப்படியோ? என்று சிந்தித்துத் தளர்ந்திருந்தாள். அவ்வமயம் சில சான்றோர், 'திருவாய்ப்பாடியில் ஆயர்குலப் பெண்களுடன் கண்ணன் குரவை கோத்து விளையாடும்போது (இது வடமொழியில் ராஸக்கிரீடை எனப்படும் அதாவது கண்ணன் பல திருவுருக்கொண்டு ஒவ்வொரு ஆய்ச்சியின் பக்கத்திலும் ஒவ்வொரு கண்ணனாக நின்று ஆடுவதொரு கூத்து) ஆனந்த ரசம் மிகுதியாக அது மாறுவதற்காகக் கண்ணன் அப்பெண்களைப் பிரிந்து மறைந்து செல்ல, அப்போது அவர்கள் தங்கள் ஆற்றாமையாலே 'இனி எவ்வகையிலாயினும் நாம் தரிக்க வேண்டும்' என்று ஓர் ஆய்ச்சி 'நான் காளியனின் வலியை அடக்குவேன்,' எனவும், மற்றொருத்தி 'நான் தேனுகாசூரனை அழிப்பேன்' என்பதாய், அனைவரும் தாங்கள் கண்ணனைப் போல் பாவனை செய்து ஒருவாறு துன்பம் நீங்கினர்' என்று சொல்லக்கேட்ட கோதை தானும் அப்பெண்களைப் போல பாவனைசெய்து, இடைநடையும், இடைமுடியும், இடைப்பேச்சும், முடைநாற்றமும் கொண்டு தரிக்கும்படியைக் கூறுவது திருப்பாவை என்கிற இத்திவ்வியப்பிரபந்தமாகும்.

# திருப்பாவை

## முதல்பாசுரம்

* மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால்
நீராடப் போதுவீர் போதுமினோ நேரிழையீர் !
சீர்மல்கு மாய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள் !
கூர்வேற் கொடுந்தொழிலன் நந்தகோ பன்குமரன்
ஏரார்ந்த கண்ணி யசோதை யிளஞ்சிங்கம்
கார்மேனிச் செங்கண் கதிர் மதியம் போல் முகத்தான்
நாராயணனே நமக்கே பறை தருவான்
பாரோர் புகழப் படிந்தேலோ ரெம்பாவாய்.

(பொருள்): அழகிய ஆபரணங்களை அணிந்து கொண்டிருப்பவர்களே! சிறப்பு நிரம்பிய கோகுலத்திலே இருக்கிற நிலையான செல்வத்தை உடைய சிறுமியர்களே ! (இந்த நாள்) மார்கழி மாதத்திலே சந்திரன் கலை நிரம்பி இருக்கின்ற நல்ல நாளாக (வளர்பிறைப் பௌர்ணமியாக) இருக்கிறது ! (இந்நாளில்) கூர்மையான வேலையும் கொடிய தொழிலையுமுடைய நந்தகோபனது பிள்ளையாய்ப் பிறந்தவனும் அழகு பொருந்திய கண்களை உடையவளான யசோதைப் பிராட்டியினது சிங்கக்குட்டி போன்றவனும், கறுத்த உடலையும் சிவந்த கண்களையும் சூரியனையும் சந்திரனையும் போன்ற முகத்தை உடையவனுமான ஸ்ரீமந்நாராயணனே (தன்னையே நம்பியிருக்கும்) நமக்கு (நோன்பிற்கு வேண்டிய) பறையைத் தருபவனாக ஏற்பட்டு இருக்கின்றான். (ஆதலால்) (கிருஷ்ணனுடன் இத்தனை நாள் சேரவொட்டாத) இவ் ஆய்ப்பாடி இடையர்கள் கொண்டாடும்படி, (நோன்பிலே) ஊன்றி (நோன்பு நோற்க உடன்பட்டு) நீராடும்படி வரவேணும் என்ற விருப்பம் உள்ளவர்களே ! வாருங்கள். (ஓ-அசை)

* இக்குறியுள்ள பாசுரங்களை இரண்டு முறை சேவிக்கவேண்டும்.

(சிறப்புப் பொருள்) ஆயர் சிறுமிகள் 'நாம் நோன்பு நோற்பதற்கு ஈடாக நமக்கு இப்படிச்சிறப்பான தொரு காலம் நேர்பட்டபடி என் !' என்று காலத்தைக் கொண்டாடி மார்கழி நீராட்டத்தில் விருப்பமுடைய பெண்களை விளிக்குமாறு கூறுவது இப்பாட்டு.

திருவாய்ப்பாடிக்குத் தலைவனான நந்தகோபன் வயது ஆனவன் ஆதலால் அவனது குமாரனான கண்ணபிரானை நோன்பை முடித்தற்கு வேண்டுவனவற்றைச் சம்பாதித்துக் கொடுப்பவனாக ஏற்படுத்தினர் என்பதாம். கண்ணனுடன் சேரத் தகுந்த காலமாதலால் 'மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால்' என்று மாத, பட்ச தினங்களைக் கொண்டாடுகின்றனர். மார்கழி மாதத்தில் சத்துவகுணம் தலையெடுத்து நிற்கு மென்பர். 'மாதங்களுக்குள் நான் மார்கழியாக இருக்கிறேன்' என்று கண்ணனும் கீதையில் அருளிச் செய்தான். நமக்கு ஓர் ஆண்டு என்பது தேவர்களுக்கு ஒருநாள் ஆகும். ஆடி முதல் மார்கழி வரை அவர்களுக்கு இரவுப் பொழுது. தை முதல் ஆனி வரை பகல் பொழுது. அவ்வகையில் மார்கழி மாதம் விடியற்காலமாகும். வளர்பிறைக் காலம் நற்செயல்களைத் தொடங்குவதற்கு ஏற்ற நற்காலமாகும். மேலும் கண்ணனுடன் சேரக் கூடாது என்ற இடைக்குலத்து முதியவர்களே தமக்கு அனுமதி கொடுத்ததால் 'பாரோர் புகழ' என்கிறார்கள். பார்-என்பது இங்கு ஊரைக் குறிக்கும்.

நெடுநாளாகக் கண்ணனைப் பிரிந்திருந்தமையால் பிறந்த தாபம் அடங்கலும் தீருமாறு நீராட விருப்பமுடையீர்! வாருங்கள் என்று அழைப்பது இரண்டாம் அடி. இங்கு நீராட எனக் கூறியது 'கண்ணனுடன் கலவி செய்ய' எனக் கூறியவாறு. தமிழர் கலவியைச் சுனையாடல், புனலாடல்-என்று கூறுவர். இதனை,

'நின் வெங்காதலி தழீஇ நெருநை, ஆடினை என்ப புனலே'
-ஐங்குறுநூறு : 71

'திருநீர்க்குமரியாட' (சிந்தாமணி, சுரமஞ்சரி, செய்.26)

'கன்னியைக் கண்ணுற்றாட வந்தனம்'
(வில்லிபாரதம் அருச்சுனன் தீர்த்த செய்.22)

'பொற்றாமரைக் கயம் நீராடப் போனாள்'-(திருநெடுந்.செய்.19)

என்னும் இலக்கிய வழக்குகளை நோக்கி அறியலாம்.

ஒருவருக்கொருவர் தோழிகளாய் இருக்கும் இவர்கள், 'குளிக்க வாருங்கள்' என்று அழைக்கலாமாயிருக்க, 'நீராடப் போதுவீர்' என்று மதிப்பாகக் கூப்பிட்டமையால், பகவத் சம்பந்தம் உள்ளவர்கள் எவராய் இருப்பினும் கௌரவிக்கப்பட வேண்டியவரே -என்பது பெறப்பட்டது.

"கள்ளவிழ் சோலைக் கணபுரம் கைதொழும்

பிள்ளையைப் பிள்ளை என்று எண்ணப் பெறுவரே" - என்றார் திருமங்கையாழ்வாரும்.

"கண்ணன் நம்மை எப்போது அனைத்துக் கொள்ள வருவனோ" என்று ஆய்ச்சியரனைவரும் என்றும் ஆபரணம் பூண்டிருத்தலின் "நேரிழையீர்" என விளிக்கப்பட்டனர்.

ஏற்கெனவே பால், வெண்ணெய், நெய் முதலியவற்றால் சிறப்புப் பொருந்திய திருவாய்ப்பாடியில், திருநாட்டுத் தலைவனான கண்ணபிரான் வந்து பிறந்ததால், "சீர்மல்கும் ஆய்ப்பாடி" எனப்பட்டது. பரத்துவம் (மேன்மை) மட்டும் பொலிய நிற்கும் பரமபதம் போலன்றி, சௌசீல்யம் (உயர்ந்தவன் தாழ்ந்தவர்களோடும் சமமாகப் பழகும் தன்மை) சௌலப்பியம் (எளிமை) முதலிய எல்லாக் குணங்களும் மிகவும் விளங்கும் இடம் ஆதலால் சீர்மல்கும் ஆய்ப்பாடி ஆகும்.

எம்பெருமானிடத்து அன்புடைமைக்கு மேற்பட்ட செல்வம் ஆத்மாவுக்கு இல்லையாதலாலும், தண்டகாரணிய வாசிகளான முனிவர் இராமபிரானது அழகில் ஈடுபட்டு அன்பு மிகுதியால் பெண்மை விரும்பி மற்றொரு பிறப்பில் ஆயர் மங்கையராய்க் கண்ணனைக் கூடினர் என்பதாலும் 'செல்வச் சிறுமீர்காள்' என்று அழைக்கப்பட்டனர் என்க.

நந்தகோபன் எறும்பு முதலிய சிற்றுயிர்களின் சாவுக்கு அஞ்சிப் பசும்புல்லில் காலை ஊன்ற வைத்து நடந்தறியாதவன். கண்ணனை மகனாகப் பெற்ற பின்பு அவனிடத்துப் பரிவு மிகுதியால் தொட்டிலின் கீழ் ஒரு சிற்றெறும்பு ஊர்ந்தாலும் அதனைக் கொல்வதென்று எப்பொழுதும் கூரிய வேலும் கையுமாய் இருந்தமை பற்றிக் 'கூர்வேல் கொடுந்தொழி' லனாகக் கூறப்பட்டான்.

உலகில் சிறுவர்கள் தந்தையரிடம் அஞ்சி நிற்பதும், தாயரிடம் அடங்காது இருத்தலும் பற்றிக் கண்ணனும் நந்தகோபனுக்குக் கோல் கீழ்க் கன்றாகவும், யசோதைப் பிராட்டிக்குச் சிங்கக் குட்டியாகவும் இருந்தது பற்றி 'நந்தகோபன் குமரன்', 'எசோதை இளஞ்சிங்கம் எனப்பட்டது.

"......அழுகையும் அஞ்சி நோக்கும் அந்நோக்கும் அணிகொள்
செஞ்சிறுவாய் நெளிப்பதுவும்,
தொழுகையும் இவை கண்ட வசோதை தொல்லை
இன்பத்து இறுதிகண்டாளே"

என்னும் ஆழ்வார் பாசுரப்படி, கண்ணனது திருமேனி அழகை அவன் செய்யும் குழவிப்பருவச் செயல்களையும் கண்ட களிப்பின் மிகுதியால் யசோதைக்குக் கண்கள் அலர்ந்து அழகு மிகுந்து தோற்றுவது பற்றி "ஏரார்ந்த கண்ணி" என அவளுக்கு அடைமொழி கொடுக்கப்பட்டது.

கண்ணனது திருமேனியைக் கண்ட அளவிலே கரிய மேகத்தைக் கண்டது போல் எல்லாத் தாபங்களும் நீங்குவது பற்றிக் "கார்மேனி" எனப்பட்டது. "கதிர் மதியம் போல் முகம்" -திருமுக மண்டலத்தின் ஒளிக்குக் கதிரவனும், குளிர்ச்சிக்குத் திங்களும் உவமை ஆகும். இவை இரண்டையும் ஒருங்கே கொண்ட முகம். இப்படிப்பட்ட அழியா அழகன் அயற்புருடனாய் இல்லாமல், நமக்கு வகுத்த நாயகனுமாய் இருக்கின்றான் என்கிறார்கள்-நாராயணனே என்பதால்.

நாராயணன்-நித்தியப் பொருள்களின் திரளுக்கு ஆதாரமாக இருப்பவன் என்றும், நித்தியப் பொருள்களின் திரளைத் தனக்கு இருப்பிடமாக உடையவன் என்றும் பொருள்படும். அவையாவன:

1. ஞான ஆனந்த அமலத்து வாதிகளும் (முமுட்சுப்படி-97) (இவை பரமாத்மாவிற்குச் சொரூபக நிரூபக தருமங்களாம்-பிரமத்தின் குணங்களாம்)

(அ) ஞானத்துவம்-அறிவின் தன்மை. உப்புக் கட்டியைப் போன்று பரமான்ம-தத்துவம் முற்றும் ஞானமாகவே இருக்கிறது.

(ஆ) ஆனந்தத்துவம்-தேன், பால், கரும்பு போன்று இன்பம் தருவது.

(இ) அமலத்துவம்-தான் குற்ற மற்றிருப்பதுடன், பிற பொருள்களின் குற்றங்களையும் போக்கும் இயல்பு.

(ஈ) சத்தியத்துவம்-அசித்துக்குள்ள (அறிவற்ற பொருள்) பண்பு, வடிவ வேறுபாடும், சித்துக்குள்ள பண்பின் விகாரங்களும் அற்றிருப்பது.

(உ) அநந்தத்துவம்-எல்லாத் தேச, கால, பொருள்களில் ஆன்மாவாகவும் இருக்கும் பொருள் எதுவோ அதுவே அநந்தப் பொருளாகிய தத்துவமாகும். இவை ஒரு திரள்.

2) ஞான சக்தி ஆகியவையும், ஞானம், சக்தி, பலம், ஐசுவரியம், வீரியம் தேஜஸ் என்னும் குணங்கள்.

(அ) ஞானம்-எல்லா இடங்களிலும் உள்ள எல்லாப் பொருள்களின் பண்புகளையும் ஒரே காலத்தில் கண்கூடாய் நோக்குவது.

(ஆ) சக்தி-உலக உயிர்கள் யாவற்றையும் ஒரே காலத்தில் நடத்தும் ஆற்றல்.

(இ) பலம்-தன் சங்கற்பத்தினாலேயே எல்லாப் பொருள்களையும் தரிக்கும் வன்மை.

(ஈ) ஐசுவரியம்-எல்லாப் பொருள்களையும் நியமித்து நடத்தும் சாமர்த்தியம்.

(உ) வீரியம்-உலகப் பொருள் யாவற்றையும் உண்டாக்கித் தான் யாதொரு தளர்ச்சியும் இன்றி இருத்தல்.

(ஊ) தேஜஸ்-சூரியன்முன் பிற ஒளி வீசாதவாறுபோல, மற்றவற்றின் ஒளியை மறைக்கும் தன்மை.

3. வாத்சல்ய, சௌசீல்யாதிகளும்: (முதலிய எண்ணிறந்த குணங்கள்)

(அ) வாத்சல்யம்-குற்றத்தையும் குணமாகக் கொள்ளும் அளவற்ற அன்பு.

(ஆ) சௌசீல்யம்-உயர்ந்தவன் தாழ்ந்தவனோடு வேற்றுமை இன்றிக் கலத்தல்,

(இ) சுவாமித்துவம்-தன்னைத் தவிர மற்ற எல்லாப் பொருள்களுக்கும் தலைவனாக இருத்தல்,

(ஈ) சௌலப்பியம்-அடியார்க்கு அடியனாய், எளியனாய் இருத்தல். (இவை ஒருதிரள்)

4. திருமேனியும்: அவன் பெருமைக்குத் தகுந்த மேலான திருமேனி. (இது ஒரு திரள்)

5. காந்தி சௌகுமார்யாதிகளும்: அழகு, மென்மை, மணம், இளமைப் பருவம் முதலியன விக்கிரக குணங்கள் (இவை ஒருதிரள்)

6. திவ்விய பூஷணங்களும்: திருவடிகளில் அணியும் நூபுரம் முதல் திருமுடியில் அணியும் திருமகுடம் வரையும் உள்ள ஆபரணங்கள் (இவை ஒரு திரள்)

7. திவ்விய ஆயுதங்களும்: சங்கு, சக்கரம்,வில், வாள், கதை முதலியன. (இவை ஒரு திரள்)

8. பெரிய பிராட்டியார் தொடக்கமான நாய்ச்சிமார்களும்:, திருமகள், மண்மகள், நப்பின்னை ஆகிய முக்கிய தேவியரும், மற்ற தேவியரும். (இஃது ஒரு திரள்)

9. நித்திய சூரிகள்: ஆதிசேடன், கருடன், விஷ்வக்சேனன் (சேனை முதலியார்) முதலியோர் (இஃதொரு திரள்)

10. சத்ர சாமராதிகளும்: குடை, சாமரம் முதலியன. இவை அடிமைபுரியும் போது தேவைப்படுவன. (இஃதொரு திரள்)

11. திருவாசல் காக்கும் முதலிகளும்: இச்சேர்த்திக்கு என்வருமோ? என்று வயிறு எரிந்து பெருமானை நோக்கிக் கொண்டிருப்போர். (இஃதொரு திரள்)

12. கணாதிபரும்: பெருமானுக்குப் பல்லாண்டு பாடுபவராய், அப்பரமபதத்திற்குக் காவலாய் இருப்போர் திருவாசல் காக்கும் முதலிகள் (இஃதொரு திரள்)

13. முக்தரும்: சுகர், வாமதேவர் முதலியோர் (இஃதொரு திரள்)

14. பரமாகாசமும்: பரமபதம் (இஃதொரு திரள்) இதுவரை பரமபத்திலுள்ள நாரங்களைப் பற்றி வெளியிட்டார். இனி இவ்வுலகில் உள்ள நாரங்களைப் பற்றிக் கூறுகிறார்.

15. பிரகிருதியும்: சத்துவம், ரஜஸ், தமசு என்னும் முக்குணங்களோடு கூடிய அசித்துத் தத்துவம் (இது ஒரு திரள்)

16. பத்தாத்மாக்களும்: உரை மெழுக்கில் பொன் போல இவ்வுலகில் ஆன்மாக்கள் உருமாய்ந்து கிடப்பர். (இது ஒரு திரள்)

17. காலமும்: முக்குணங்களும் இல்லாத அசித்து காலம் எனப்படும். (இது ஒரு திரள்)

18. மகதாதி விகாரங்களும்: மகான், அகங்காரம்,பஞ்சபூதங்கள், ஞான இந்திரியங்கள் முதலியன. (இது ஒரு திரள்)

19. அண்டங்களும்: 14 உலகம் கொண்டது ஓர் அண்டம். இது கணக்கற்றது. (இது ஒரு திரள்)

20. அண்டத்துக்குட்பட்ட தேவாதி பதார்த்தங்களும்: தேவர், மனிதர், விலங்கு, பறவைகள், ஊர்வன, நீர் வாழ்வன-முதலியன. (இவை ஒரு திரள்)

இங்குக் குறித்த எல்லாப் பொருள்களுக்கும் எம்பெருமான் ஆதாரமாய் இருக்கிறான். நார+அயனன்=நாராயணன். அன்றியும் நித்தியப் பொருள்களின் திரளைத் தனக்கு இருப்பிடமாக உடையவன் என்றும் பொருள்படும். நாராயணனே ஏ-பிரிநிலை; தேற்றமும் ஆம்.

பறை-என்பது நோன்புக்கு அங்கமானதொரு வாத்தியம். ஆயினும் இதன் உண்மைப் பொருள் 29 ஆம் பாசுரத்தில் புலப்படும். 'கைங்கரிய விருப்பம்' என்பது அப்பொருளாகும்.

'ஏலோரெம்பாவாய்' -என்பது அடி நிறைக்க வந்த சொற்றொடர். பாவை என்ற பிரபந்தத்து ஒவ்வொரு செய்யுள் ஈற்றிலும் இவ்வாறு வருவது மரபு.

<u>உள்ளுறை பொருள்:</u> 'சற்குருவின் அருளாலே பகவானுடைய அங்கீகாரத்துக்குக் காரணமான சத்துவகுணம் மிகுந்த காலம் நேர்ந்துள்ளது. இப்படிப்பட்ட காலத்தில ஞான, பக்தி, வைராக்கியங்களை அடைந்து, பகவானைத் தவிர மற்ற பொருள்களை விட்டிருப்பவர்களே ! ஆசாரியனுக்கு வசப்பட்டும், திருமந்திரத்தில் தனது சர்வ காரணத்துவம் தோன்றும் படியும் இருப்பவனாய், சரண் அடைவதற்கேற்ற வாத்சல்ய, சுவாமித்வ, சௌசீல்ய, சௌலப்பிய குணங்களும், அடியார்களின் காரியத்தை நிறைவேற்றுவதற்கேற்ற ஞான,சக்தி முதலிய குணங்களும் உடையவனான ஸ்ரீமந் நாராயணனே தன்னைத் தவிர வேறொன்றை உபாயமாகக் கொள்ளாத நம்முடைய விருப்பமான கைங்கரியத்தை நிறைவேற்று விப்பான் ஆதலால், பகவத் கைங்கரியத்தில் விருப்பம் உள்ளவர்கள் அனைவரும் வாருங்கள்' என்பதாம்.

நீராடப் போதுவீர்-பகவத் சமாச்சரயணம் செய்ய வாருங்கள்;

நேரிழையீர்-ஞான, பக்தி, வைராக்கியம் முதலிய ஆத்மாவுக்கு அலங்காரமானவை.

மங்களாசாசனபரரான ஆசாரியர்களுக்கு விதேயனாய் இருப்பவன் பெருமான் என்பதைக் கூறவது நான்காம் அடி. பெரிய திருமந்திரத்தில் பெருமையுடன் விளங்குபவன் பெருமான் என்பதைக் கூறுவது 5ஆம் அடி. கண்-ஞானம்;திருமந்திரம் தாயாகச் சொல்லப்படுவதால், இங்கு 'எசோதை' என்று திருமந்திரத்தைக் குறித்தவாறாம். மந்திரம் பெருமானைத் தன் கருவிலே வைத்துக் கொண்டு எல்லாரும் அறியும்படி பிரகாசிப்பிக்கும் தன்மையுடைமை பற்றித் தாயாகக் கூறப்படும். பெருமானுடைய பெருமையை 6 ஆம் அடி கூறுகிறது. அப்பெருமானிடத் தன்றி மற்றையோரிடத்து யாம் பேறுபெறக் கடமைப்பட்டிலோம் என்பதை 7ஆம் அடி உணர்த்தும்.

மார்க் சீர்ஷம் > மார்கழி எனச் சிதைந்த தென்பர். திங்கள்-சந்திரன். இம்மாதத்தில் பௌர்ணமி மிருக சீரிட நட்சத்திரத்தில் அமைவதால் மார்கழி எனப்பட்டது. அமாவாசைக்கு அமாவாசை ஒரு மாதமாகக் கொண்டு சந்திர சம்பந்தத்தால் காலத்தை வரையறுக்கும் 'சாந்திரமான' முறைபற்றி திங்கள் என்று மாதத்திற்குப் பெயர் வழங்கலாயிற்று. முதலடி இறுதியில் ஆல்-ஆதலால் என்பதன் சிதைவு; அசையுமாம். சீர்-ஸ்ரீ மல்குதல்-விஞ்சியிருத்தல்; சிறுமியர்கள்>சிறுமீர்காள்; விளி; நந்தகோபன்: வசுதேவன் 12 ஆயிரம் ஆண்டுகள் தவம்புரிந்து பெற்ற புண்ணியத்தால் கண்ணனை மகனாகப் பெற்றான். எனினும் கண்ணன் திருமுகத்தைக் கண்ட அளவிலே அவன் தவப்பயன் முடிந்ததால், தானே கண்ணனைப் பிறரிடம் கொண்டு விடவேண்டியதாயிற்று. வசுதேவன்-செல்வத்தால் விளங்குபவன் என்று பொருள். ஆனால் நந்தகோபனோ கண்ணனை வளர்க்கும் பேறு பெற்றான். எனவே அவன் 'ஆனந்த முடையவன்' ஆனான். அசோதை யிளஞ்சிங்கம் - என்ற பாடம் மோனை இன்பத்திற்கு மாறுபாடாகும். மதியம்-'அம்' சாரியை. பாரோர் புகழப் படிந்து நீராடப் போதுவீர் போதுமின் என இயைத்துப் பொருள் கொள்வதால் கொண்டு கூட்டுப் பொருள்கோளாகும்.

இப்பிரபந்தத்துப் பாசுரங்கள் முப்பதும்-பெரும்பாலும் வெண்டளையால் வந்த 8 அடி 4 சீர் ஒருவிகற்பக் கொச்சகக் கலிப்பா ஆகும்.

## பாசுரம்-2

வையத்து வாழ்வீர்காள்! நாமும் நம் பாவைக்குச்
செய்யும் கிரிசைகள் கேளீரோ! பாற்கடலுள்
பையத் துயின்ற பரமன்அடி பாடி
நெய்யுண்ணோம் பாலுண்ணோம் நாட்காலே நீராடி
மையிட்டெழுதோம் மலரிட்டு நாம் முடியோம்
செய்யாதன செய்யோம் தீக்குறளை சென்றோதோம்
ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் கை காட்டி
உய்யுமா றெண்ணி உகந்தேலோர் எம்பாவாய்.

பொருள்: இப்பூவுலகில் வாழப் பிறந்தவர்களே ! (எம்பெருமானாலேயே பேறு என்று இருக்கும்) நாமும், உய்யும் வழியை உணர்ந்து மகிழ்ச்சியான நம்முடைய நோன்புக்கு (அங்கமாகச்) செய்ய வேண்டிய செயல்களைக் கேளுங்கள். நாம், திருப்பாற்கடலில் கள்ள நித்திரை கொள்ளும் புருஷோத்தமனுடைய திருவடிகளைப் பாடி, தகுந்தவர்களுக்குக் கொடுக்கும்) பிச்சையையும் (பிரமசாரிகளுக்கும் சந்நியாசிகளுக்கும் கொடுக்கும்) பிச்சையையும் அவர்கள் ஏற்கும் அளவும் கொடுத்து (நோன்பு நோற்கத் தொடங்கிய) நாம் நெய்புசிக்க மாட்டோம்; பாலும் அமுது செய்யமாட்டோம்; விடியற்காலையிலேயே நீராடிவிட்டு, (கண்ணில்) மைஇட்டு அலங்காரம் செய்து கொள்ள மாட்டோம்; (பிறருக்குத்) துன்பம் தரும் கொடிய கோள் சொற்களை (எம்பெருமானிடம்) சென்று சொல்லமாட்டோம். ஒரு சிறந்த செயலில் ஈடுபடத் தொடங்குவோர் அச்செயல் முடியுமளவும் சிலவற்றைப் பற்ற வேண்டுமென்றும், சிலவற்றை நீக்கவேண்டுமென்றும், அவற்றை முதலில் தீர்மானித்துக் கொள்ள வேண்டும் என்றும் சாத்திரங்களில் கூறியுள்ளதால், அதற்கு ஏற்ப, நோன்பாகிற சிறப்புச் செயலைமேற் கொள்ளத் தொடங்கிய இவ் ஆயர்குலப் பெண்கள் தாங்கள் விடுவனவற்றையும், பற்றுவனவற்றையும் எடுத்துக் கூறுகிறார்கள் இப்பாட்டில்.

சிறப்புப் பொருள்:

வையத்து வாழ்வீர்கள்! எம்பெருமான் திருவாய்ப்பாடியிலே கண்ணனாய் வந்து திரு அவதரித்துத் தன்னைத் தாழவிட்டுப் பரிமாறுகிற காலத்திலே வாழப் பிறந்த பாக்கியவதிகளே !

இப்பாட்டில், மேற்கொள்ள வேண்டிய ஆறு 1. பரமனடிபாடுதல் 2. அதிகாலை நீராடல் 3. ஐயம் இடல் 4. பிச்சை இடல் 5. இயன்றவரை அளித்தல் 6. வாழ வேண்டுமென நினைத்து ஈதல். நீக்கவேண்டிய ஆறு; நெய் உண்ணாமை, பால் உண்ணாமை, மை இட்டுக் கொள்ளாமை, மலர் சூடாமை, செய்யத் தகாதவற்றைச் செய்யாமை, கோள் சொல்லாமை.

'செய்யும் கிரிசைகள் கேளீரோ' -என்றது போல, 'விடும் கிரிசைகள் கேளீரோ' என்றும் சொல்ல வேண்டாவோ எனில் வேண்டா, விடுவதும் செய்வதில் அடங்கக் கூடும் ஆதலின்.

தீக்குறளைச் சென்றோதோம் - 'பேய்ப்பெண்ணே, 'நாணாதாய்' என்று நமக்குள் சொல்லிக் கொள்ளும் தீய சொற்கொளைக் கண்ணன் செவிப்படச் சொல்ல மாட்டோம் என்று கருத்துக் கூறுவர். (குறளை-என்றது ஏனைய பொய், வன்சொல், பயனில் சொல் என்றவற்றிற்கும் உபலட்சணம்)

'ஸ்ரீகிருஷ்ணன் பேர்சொல்லிப் பாடினால் முன்பு கண்ணனை அனுபவிக்க ஒட்டாமல் தடுத்த இடைச் சாதிக் கிழவர்கள் ஒருவேளை மீண்டும் தடுப்பரோ ! ' என்ற அச்சமுள்ளதனால், அக் கிருஷ்ணாவதாரத்திற்கு மூலமான பாற்கடலுள் துயின்ற பரமனைப்பாடுவோம் என்கின்றனர்.

இடர்ப்பட்டாரை இன்பக் கடலில் ஆழ்த்துவதை இயற்கைத் தொழிலாக உடைய எம்பெருமான், தாமரை மலர்வேண்டி வானத்தே நிற்பவன் போல், சேண் உயர் வானமாகிய வைகுந்த நாட்டில் இருந்தால் காரியம் ஆகாதெனக் கருதி, அடியார்களின் கூச்சல் செவிப்படுமாறு இவ் அண்டத்திற்குட்பட்ட திருப்பாற் கடலுக்கு எழுந்தருளி அங்கு உறங்குவான் போல் யோகு செய்த பெருமாளாய் இருப்பன் என்பதை அறிக. அங்குப் பிராட்டிமார் போகத்தில் திருவுள்ளம் ஊன்றாது அடியர்களைக் காப்பதிலே கவனத்துடன் இருப்பதை, 'பைய' என்னும் குறிப்பு வினை எச்சம் உணர்த்தும். பெருமானை நினைத்தவுடனே தங்களுடைய தாழ்மையும் உடன் நினைவுக்கு வருமாதலால் , பின்பு அவனை ஏத்துவதே பணியாதல் பற்றி 'அடிபாடி' என்றனர்.

'உண்ணும் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணன் என்றபடி எல்லாவற்றிலும் இன்பமயமான எம்பெருமான்

தன் அடி பாடுதலையே உண்பதாக நினைக்கும் உறுதி இவர்களுக்கு உள்ளதால், வேறு உணவில் விருப்பம் ஒழிவது பற்றி, 'நெய்யுண்ணோம் பாலுண்ணோம்' என்கின்றனர். 'நெய்குடிபோம்' 'பால்குடியோம்' என்ன வேண்டி இருக்க, இவ்வாறு கூறியது சாதிப்பேச்சு என்று அருளிச் செய்து, 'நெய்பால்கள் உண்பனவா ? குடிப்பனவா? என்று கூடத் தெரிய ஒண்ணாதபடி கண்ணன் அவற்றைக் களவாடுவதால் இவ்வாறு கூறியது என்று சுவைபட விளக்குவர் உரையாசிரியர்.

நோன்பு நோற்பதற்கு அங்கமாகவும், விரகதாபம் மாறுவதற்காவும் குளிக்கும்படியை 'நாட்காலை நீராடி' என்றும் சொற்களால் உணர்த்தியுள்ளார்.

ஐம்பொறிகளுள் முக்கியமான கண்களுக்கு, 'காணாதார் கண் என்றும் கண்ணல்ல கண்டாமே' என்றும், எம்பெருமானை அனுபவிப்பது தவிர வேறு பேறு இல்லையாதலால், அப்பேறு வாய்க்குமுன் அக்கண்களை அலங்கரிக்கக்கக்கடவோமல்லோம் என்பதை 'மையிட்டெழுதோம்' என்ற தொடரால் குறிப்பிட்டனர். 'நின்பாத பங்கயமே தலைக்கணியாய், 'தாள் கண்டு கொண்டு என் தலைமேல் புனைந்தேனே' என்ற படி பெருமானின் இணையடிகளைப் புனைதலே தலைக்குப் பேறு ஆதலால் அப்பேறு பெறவதற்குமுன் தலையை அலங்கரிக்கக் கடவோம் அல்லோம்' என்கிறார்கள். (மலரிட்டு நாம் முடியோம்) ஐயம் -சத்பாத்திரத்தில் வேண்டுமளவு மிகுதியாகக் கொடுத்தல்; பிச்சை-பிரமசாரிகளுக்கும் சந்யாசிகளுக்கும் கொடுப்பது. ஆந்தனையும்-இயன்றவரையில் என்றுமாம். கைகாட்டி - என்ற சொல் நயத்தால் எவ்வளவு கொடுத்தாலும், 'நாம் என்ன கொடுத்துவிட்டோம்' என்றே நெஞ்சில் ஓடவேண்டும் என்பது புலப்படும் என்க.

வையம்-பொருள்கள் வைக்கப்படும் இடம் என்னும் காரணத்தால் பூமிக்கு வையம் என்று பெயராயிற்று. வாழ்வார்கள்>வாழ்வீர்காள்! என விளியேற்றது. நாட்கால்-விடியற்காலம். தீக்குறளைச் சென்றோதோம்✓ இப்பாடம் மறுக்கத்தக்கது. குறளை-பெயர்ச்சொல்; இதில் இரண்டன் உருபு மறைந்துள்ளது. எனவே 'குவளை சூடினான்' 'வளை கொண்டான்' என்றாற் போல இயல்பாவதே விதியாம். குறளை-கோட் சொல்லாகும்மே-நிகண்டு. கிரியா-கிரிசை.

**உள்ளுறை:**

இருள்தரு மாஞாலமான இவ்வுலகிலே பிறந்தும், பகவதனுபவத்தைப் பெற்று வாழ்பவர்களே ! நாங்கள் மேற்கொண்டு ஒழுகுகின்ற பிரபத்திக்கு உறுப்பானவற்றைச் சொல்லுகிறோம்; கேளுங்கள். நாங்கள் உய்யும் வழியைச் சிந்தித்து மகிழ்ந்து பகவானையே போக்கியமாகக் கொண்டு (அனுபவிக்கத்தக்க பொருள்) பிற அனுபவிக்கத்தக்கவற்றைத் தவிர்ந்து, பகவத் கைங்கரியமாக வருணாசிரமங்களுக்குத் தகுந்த செயல்களைச் செய்து கொண்டும், சாத்திரங்கள் விதித்தாலும் முன்னோர்கள் மேற்கொள்ளாததால் ஞான, பக்தி யோகங்களைக் கொள்ளாமலும், பிறருக்கும் அவற்றை உபதேசியாமலும், தெரிந்தவரையிலும் பகவத் பாகவத வைபவங்களைச் சிறிதும் கர்வமில்லாது பேசுவோம் என்பதாம். மையிட்டெழுதுதல்-ஞானயோகம்; மலரிட்டு முடித்தல் - பக்தியோகம். ஐயம்-பகவத் வைபவம்; பிச்சை-பாகவதரின் வைபவம். இவை இரண்டையும் தான் அறிந்த அளவு பிறருக்கு உபதேசிக்க வேண்டும் என்கிறது. பகவத் சந்நிதியில் பாகவத வைபவத்தையும், பாகவத சந்நிதியில் பகவத் வைபவத்தையும் இயன்ற அளவு கூற வேண்டும் என்பதாம்.

உய்யும் ஆறு எண்ணி: துவயமந்திரம் 6 சொற்களால் அமைந்தது. அதை எண்ணி என்று ஒரு பொருள். உடையவருக்காகத் திருக்கச்சி நம்பிகள் பேரருளாளனிடம் பெற்று வெளியிட்டருளிய ஆறு சொற்களை நாம் சிந்தித்து அறிவது என்பது மற்றொரு பொருள். அவையாவன: 1. ஸ்ரீமந்நாராயணனே பரதத்துவம். 2. நம் சமயம் ஜீவன் அசித்து, பரமாத்மா என்னும் வேறுபாடு உடையது. 3. பிரபத்தியே வீடுபேறு அடைய ஏற்ற நெறியாகும். 4. பெரிய நம்பிகளை உடையவர் அடையவேண்டும். 5.இப்பிறவி முடிவில் முக்தி உண்டு. 6. உயிர் பிரியும் காலத்தில் என்னை நினைக்க வேண்டும் என்று அவசியமில்லை.

(பிரபத்தியாவது-மேலான நெறியாகும். இதற்குக் கால தேச, அதிகாரி நியமங்கள் இல்லை. எம்பெருமானுக்கு விருப்பமானவற்றைச் செய்தல்; வெறுப்பானவற்றை நீக்குதல்; எவ்வாற்றானும் அப்பரமன் நம்மைக் காப்பாற்றுவான் என்னும் அசையாத நம்பிக்கையோடு இருத்தல்; அவன் காவலை வேண்டி நிற்றல், தான் என்று ஒன்றுமில்லை என்று உணர்தல்-என்பவை இதற்குரிய நெறிகளாம்.)

## மூன்றாம் பாசுரம்

* ஓங்கி உலகளந்த உத்தமன் பேர் பாடி
நாங்கள் நம் பாவைக்குச் சாற்றி நீராடினால்
தீங்கின்றி நாடெல்லாம் திங்கள் மும்மாரி பெய்து
ஓங்கு பெருஞ் செந்நெல் ஊடு கயல் உகளப்
பூங்குவளைப் போதில் பொறிவண்டு கண்படுப்பத்
தேங்காதே புக்கிருந்து சீர்த்த முலை பற்றி
வாங்கக் குடம் நிறைக்கும் வள்ளல் பெரும் பசுக்கள்
நீங்காத செல்வம் நிறைந்தேலோர் எம்பாவாய்.

(பொருள்) (திரிவிக்கிரமனாய்) உயர வளர்ந்து உலகங்களை (மூன்றடியால்) அளந்து கொண்ட புருஷோத்தமனுடைய திருநாமங்களை (ஆயர்குலப் பெண்களாகிய) நாங்கள் (அன்புடன்) இசைபாடி, நாங்கள் தொடங்கியுள்ள இந்நோன்புக்கு அங்கம் என்று சொல்லி, நீராடினால் (அதன் பயனாக) நாடு முழுவதும் ஒரு தீங்கும் இல்லாத படியாக மாதம் மூன்று மழை பொழிய (அதனால்) உயர வளர்ந்த பருத்த செந்நெற் பயிர்களின் நடுவில் கயல்மீன்கள் (மகிழ்ச்சியால்) துள்ளவும், அழகிய குவளை மலர்களில் புள்ளிகளையுடைய வண்டுகள் (இனிது) தூங்கவும், குறையாத செல்வம் நிறையும்படி வள்ளல் தன்மையுடைய பெரிய பசுக்கள் ஏங்காமல் (கறப்பதாகப் புகுந்து) நிலையாய் இருந்து பருத்த காம்புகளை அணைத்து இழுக்க (கறக்கக் கொண்டு போன) குடங்களை எல்லாம் நிறைத்து விடும்.

(சிறப்புப் பொருள்) உலகில் பிற பலன்களை விரும்பி யாகம் செய்வர். இவ்ஆயர் குலப்பெண்கள் எம்பெருமானையே எல்லாவகைப் பயனாகவும் உள்ளத்துக் கொண்டு உள்ளவர்கள் ஆதலால் அப்பெருமானைத் தவிர வேறொரு பயனையும் விரும்பமாட்டார்கள். ஆயினும் இவர்கள் விரும்பி வேண்டுவது ஒன்று உண்டு. அதாவது தாங்கள் நோன்பு நோற்குமாறு அனுமதி அளித்தவர்களுக்குச் சில நன்மைகளை விரும்புவது. அது இப்பாட்டில் சொல்லப்படுகிறது.

முதற்பாட்டில் 'நாராயணனே' என்பதால் எம்பெருமானுடைய பரமபதம் மற்றும் இவ்வுலகம் ஆகிய இருவகைச் செல்வங்களுக்கும் தலைமை சொல்லப்பட்டது. இரண்டாம் பாட்டில் 'பாற்கடலுள் பையத் துயின்ற பரமன்' என்றதால் அவதாரம் செய்ய வேண்டி

திருப்பாற்கடலில் வந்து சாய்ந்தபடி சொல்லப்பட்டது. இப்பாட்டில் 'ஓங்கி உலகளந்த உத்தமன்' என்பதால் அவதரித்து அருளியபடி சொல்லப்பட்டது.

உலகங்களைத் காப்பதற்காகத் திருப்பாற்கடலில் சாய்ந்த போது அடியார்களைக் காத்தல் இல்லாமையால் எம்பெருமான் பனிப்பட்டுச் சாய்ந்த மூங்கில் போலக் குன்றி, அம்மூங்கில், சூரியனின் கதிர்படக் கிளம்புவது போல, இவனும் மாவலி வார்த்த நீர் கையில் பட்ட அளவிலே கிளம்பினைபடியைக் கூறுவது 'ஓங்கி உலகளந்த' என்பது,

'இவன் இன்று செல்வனானான்' என்றால், நேற்று வரை வறுமையுடையவனாய் இருந்தான் என்பது தானே விளங்குவது போல, இங்கு ஓங்கி உலகளந்த என்பதால், கீழ் வாமனனாய் இருந்தமை தானே விளங்கும் என்க. இங்கு உத்தமன்-என்றதற்குக் கருத்து யாதெனில், அதமாதவன், அதமன், மத்தியமன் உத்தமன்-என்று உலக மக்கள் நால்வகைப் பட்டிருப்பர்.

1. பிறரைத் துன்புறுத்தித் தன் வயிறு வளர்ப்பவன்-அதமாதவன்.
2. பிறர் வாழ்ந்தால் வாழட்டும் என்ற இருப்பவன்-அதமன்.
3. பிறரும் வாழ வேண்டும்; நாமும் வாழ வேண்டும் என்று இருப்பவன் மத்தியமன்.
4. தான் கெட்டும் பிறரை வாழ்விப்பவன்-உத்தமன். இவ்வகையில் எம்பெருமான் தன் வடிவைக் குறுகச் செய்து, பிறரிடம் சென்று இரப்பது ஆகிய கேடுகளைத் தான் அடைந்தும், இந்திரன் முதலிய தேவர்களை வாழ்வித்தமை பற்றி, இங்கு உத்தமனாகக் கூறப்பட்டனன் என்க.

பேர்பாடி-கட்டிப் பொன் போல அவன்; ஆபரணமாகிய பொன் போலே திருநாமம் என்பது மூவாயிரப்படி. பேர்-திருநாமங்கள். இங்கு திருமந்திரத்தைக் குறிக்கும் என்பர் பெரியவாச்சான் பிள்ளை.

இதனால், வேறொரு பயனையும் கருதாமல் பகவந் நாம சங்கீர்த்தனத்தையே, பயனாக் கருதுகின்ற நாங்கள் நோன்புக்கு அங்கமாகப் புருஷோத்தமனது திருநாமத்தைச் சொல்லி, விடியற்காலத்தில் நீராடினால், அதன் பயனாக, இப்போதுள்ள பஞ்சமும் நோயும் நீங்கி, நாடு முழுவதும் மாதம் மும்மாரி பெய்யும். 9 நாள் வெயிலும் 1 நாள் மழையும் பெய்வது நாட்டுக்கு நல்லது.

"முடி புனைந்த சீர் மன்னவர் நெறியினால், முன்னவர் தவத்தால் பைந்தொடி மடந்தையர் கற்பினால் மதிதொறும் சொரி

தரும்மும்மாரி" என்று நீதிமன்னவர்க்கு, அந்தணர்களுக்கு கற்புடைய பெண்களுக்கு" என மாதம் மும்மாரி பொழியும் என்ற கூறுவது மரபு. (மும்மாரி-ஒன்பது நாள் வெயிலும் ஒரு நாள் மழையுமாய் என்றபடி) இங்ஙனம் இருக்க "நாங்கள் ...... மும்மாரி பெய்யும்" என்றது ஏன் எனில், பாவை நோன்பின் பயனாக நாடு செழித்தலோடு அரசியல் நெறி, அந்தணர் தவம், மடந்தையர் கற்பு என்ற மூன்றும் அமையும் என்பதாம்.

அதனால், செந்நெற் பயிர்கள் ஓங்கி வளர, நீரின் மிகுதியால் களித்து அப்பயிர்களிடையே வாளை மீன்கள் துள்ளும். நீர்ப்பூக்கள் மலர்ந்து இருப்பதால், அவற்றில் உள்ள தேனை உண்ணும் வண்டுகள் இனிது தூங்கும். நல்ல மேய்ச்சல் கிடைத்தலால், நமக்குப் பெருஞ்செல்வம் உண்டாகப் பசுக்கள் பாலை மிகுதியாகக் கறக்கும் என்பதாம். வேண்டிய போதெல்லாம் சிறுபிள்ளைகளும் கறக்கலாம்படி பாலை மிகுதியாகக் கொடுத்தலால் 'வள்ளல் பசுக்கள்' எனப்பட்டன. பசுவின் மடியிலுள்ள காம்புகளைப் பற்றி இழுத்தால், 'சர்' என்னும் ஒலியுடன் பால் வெளிப்படும். இவ்வொலியினைச் 'சீர்த்த' என்னும் சொல்லால் புலப்படுத்துகிறர்.

கைம்மாறு கருதாமல் அரும்பொருள்களை அருளிச் செய்வதால் ஆசாரியார்கள் வள்ளல் எனப்படுவர். 14 உலகங்களையும் தம்முள் கொண்டிருக்கும் பசுக்களைப் போல, 14 வித்தைகளையும் தரித்திருப்பவர்களாய், பஞ்சகவ்வியம் போன்ற அர்த்த பஞ்சகத்தினால் அனைத்து உயிர்களையும் தூய்மைப்படுத்தும் பெரிய ஆசாரியர்களால் நீங்காத செல்வம் நிறைந்து - அத்யாத்ம வித்தையும் அதன் பலனான பக்தியும் ஒரு நாளும் குறையாமல் மேன்மேலும் பெருகிச் செல்லும் என்கிறபடி. தேங்காதே புக்கிருந்து-சீடர்கள் தயங்காமல் புக்கிருக்க வேண்டும். பல ஆண்டுகள் ஆசாரியன் விதித்த கட்டளைப்படி குருகுல வாசம் செய்ய வேண்டும். பசுக்கள் 4 காம்புகளாலும் பால் சொரியும், அதுபோல ஆசரியர்கள் நான்கு காரணங்களாலே சீரிய பொருளைச் சுரப்பர்கள். அவையாவன: 1. பெருமான் இவர்களை இவ்வுலகிற்கு அனுப்பியது சீடர்கள் வாழ்ச்சிக்காக என்னும் 'அவன்' கட்டளையை நினைத்திருத்தல். 2. சீடர்கள் வருந்தி வேண்டிக் கொள்ளுதல் 3. அவர்கள் வேண்டிக் கொள்ளாவிடினும் அவர்களது துன்பம் கண்டு பொறுக்கமாட்டாமை 4. தாங்கள் வாய்விட்டுச் சொல்லாது ஒழியில் தரிக்கமாட்டாமை. 'பற்றி வாங்கக் குடம் நிறைக்கும்' -அருச்சுனன் வேண்ட 18 அத்தியாயமாகக் கறந்த கீதா சாரியரைப் போலவும், வால்மீகி

முனிவர் கேட்டவாறே ஸ்ரீ இராமாயண கதை அமுதத்தைக் கறந்த நாரதரைப்போலவும், இதம் அருளிச் செய்ய வேண்டும் என்று வேண்டிய அளவில் மழை பொழிவது போல தாரை தாரையாய் பெய்து குடம்குடமாக நிறைப்பர்களாம் மகா ஆசாரியர்கள். குடம்-ஆசாரியரின் கருணைக்கு உரியவரான, நல்ல சீடர்கள். இவர்களை நிறைக்கையாவது தம்மோடு ஒக்க ஞானபூர்த்தி உடையவர்களாகச் செய்வது. இப்படிச் செய்ய வல்ல வள்ளல் பெரும் பசுக்களாலே (மகா ஆசாரியர்களாலே) நீங்காத செல்வம் நிறைந்திடும் என்பதாம்.

<u>உள்ளுறை:</u>

மாதம் மும்மாரி: நாம் இறைவனுக்கே உரியவர் என்று அறிதல், அவனுக்குச் சேவை செய்தல், அவனோடு ஒன்றுதல்-ஆகிய மூன்றும் திருமந்திரத்தின் கருத்துகளாம். அதுவே இங்கு மும்மாரி எனப்பட்டது. செந்நெல் என்பது பாகவதர்கள் பரமனுக்கு அன்னத்தைப் போன்றவர்கள் என்றும், பக்தியால் இன்புறும் ஜீவாத்மாக்கள் மீன்கள் போல்வன என்றும், நம் இதயமலர் மலர்வதால் இம்மலரில் இறைவன் பிராட்டியோடு இணைவதைப் பூங்குவளை மலரில் பொறி வண்டுகள் படுத்து உறங்குவது போல என்றும், பால் ஞானத்தைக் குறிப்பதாகவும், ஆசாரியர் பசுக்கள் போல இருந்து நமக்கு ஞானப்பாலை அளிப்பர் என்றும், சிஷ்யர்கள் பெறுவது நீங்காத செல்வமாகிய அருட்செல்வம் என்றும் பொருள்படும்.

தேங்காதே புக்கிருந்து-பசுக்கள் பால் சுரக்கத் தொடங்கினால் பெரு வெள்ளமாய்ப் பெருகும் என்றஞ்சி மாட்டுத் தொழுவில் கறக்கப்படுவதற்குப் பெரும்பாலும் பலர் தேங்குவர் என்பதை உள்ளுறையாய்க் காட்டும். தேங்குதல் - அஞ்சுதல்.

வேறு பயன் விரும்பாதவரான நாங்கள் திருமந்திரத்தைக் கூறுவதால் நாடு முழுவதும் தேக ஆத்ம அபிமானம் முதலிய குற்றங்கள் நீங்கி, அநந்யார்ஹசேக்ஷத்துவம். (பெருமானுக்கே அடிமையாதல்) அநந்யசரணத்துவம் (வேறுயாரையும் சரணடையாமல் பெருமானையே அடைதல்) அநந்ய போக்யத்துவம் (வேறு பொருள் இன்பந்தருவன அல்ல; பெருமானே) ஆகிய 3 தன்மையும் உண்டாகும் என்பதாம்.

பெய்து, நிறைந்து என்பன-பெய்ய, நிறைய என்னும் பொருள்பட நின்றமையால், எச்சத்திரிபு. 'சொல் திரியினும் பொருள் திரியா வினைக்குறை' என்பது நன்னூல்.

# 4 ஆம் பாசுரம்

ஆழி மழைக்கண்ணா! ஒன்று (ம்) நீ கைகரவேல்
ஆழியுள் புக்கு முகந்து கொடு ஆர்த்தேறி
ஊழி முதல்வன் உருவம்போல் மெய்கறுத்துப்
பாழியந் தோளுடைப் பற்பநா பன்கையில்
ஆழிபோல் மின்னி வலம்புரி போல் நின்றதிர்ந்து
தாழாதே சார்ங்கம் உதைத்த சரமழைபோல்
வாழ உலகினில் பெய்திடாய் நாங்களும்
மார்கழி நீராட மகிழ்ந்தேலோ ரெம்பாவாய்.

(பொருள்) கடல் போல் கம்பீரமாய் இருக்கிற மழைக்கு உரிய தேவைதையே ! நீ சிறிதும் (மழை பொழியாமல்) ஒளிக்காதே ! கடலினுள்ளே புகுந்து மொண்டு கொண்டு முழங்கி (வானத்திலே) ஏறி (படைப்புக் காலத்திலே எல்லாவற்றுக்கும்) காரணனான எம்பெருமானது உருவத்தைப் போல உடம்பு கறுத்துத் தோன்றி, வலிமையுள்ள அழகிய தோள்களையுடைய பத்மநாபனது திருக்கையில் உள்ள சக்கரம்போல மின்னி, (அப்பெருமானின் மற்றொரு திருக்கையிலுள்ள) வலம்புரிச் சங்கு போல நிலையாக இடித்து (அப்பெருமான் திருக்கையிலுள்ள) சார்ங்கமென்னும் வில் பொழிந்த சரமழைபோல (எல்லார்க்கும்) வாழ்வு உண்டாகவும், நாங்கள் மகிழ்ச்சி அடைந்து மார்கழி நீராடலைச் செய்யவும் தாமதியாமல் உலகினில் பொழிவாயாக.

(சிறப்புப் பொருள்) இதனால் ஆயர் சிறுமியர் தாம் நோன்பு நோற்றால் விளையக் கூடிய நன்மைகளைச் சிந்தித்து இருக்கையில், மழைக்கு உரிய கடவுள் (வருணன்) (பகவானிடத்துப் ப்க்தைகளான. இவர்களுக்கு நம்மால் இயன்ற உதவியைச் செய்ய வேண்டும் என்று இவர்கள் முன்னே வந்து தன்னைத் தெரிவித்து இவர்களுடையகட்டளையை எதிர்பார்த்து நிற்க இவர்கள் மேலே கூறியது போன்று கட்டளை இடுகின்றனர். பெருமானது திருக்கையிலுள்ள திருச்சார்ங்கம் பகைவர் மாண்டு, அடியார் செழிக்கச் சரமழை பொழிவது போலவே பிரதிகூலங்களான (பகைமையான) நோய், பஞ்சம் முதலியன நீங்கி அனுகூலர் மனம் மகிழப் புனல் மழை பொழிவாயாக என்று கட்டளை இடுகின்றனர். கடலிலிருந்தே பெரும்பான்மையான நீர் மேகத்திற்கு வருவதால்,

மேகம் கடலில் போய் நீரை முகந்து கொண்டு வானத்தின் மேலேறிப் பொழியும் எனக் கூறுதல் கவிமரபு. தலைவனைச் சார்ந்த பொருள்களை உவமானமாக்கிக் கூறுதலும் ஒருவகை உவமை.

'உருவம் போல் மெய் கறுத்து' -என்ற இடத்து மெய்யுவமையும் உரு உவமையும், 'ஆழிபோல் மின்னி வலம்புரிபோல் நின்றதிர்ந்து' -என்றஇடத்து வினையுவமையும், 'சரமழைபோல்' - என்ற இடத்துப் பயனுவமையும் அமைந்திருத்தல் உய்த்துணரத் தக்கதாம். இங்கு மழைக் கண்ணனை ஊழி முதல்வனைப் போல் மெய்யெடுக்கவும், உருக்கொள்ளவும், வினை செய்யவும், பயன் விளைவிக்கவும் வேண்டுகின்றார் ஸ்ரீ ஆண்டாள். இங்ஙனம் தொல்காப்பியம் கூறியுள்ள அணிகளுக்கு முதன்மையாய் விளங்கும் உவமையணியை இவர் அமைத்துப் பாடியிருப்பது மெச்சத்தக்கது.

'வினை பயன் மெய்யுரு என்ற நான்கே
வகை பெற வந்த வுவமைத் தோற்றம்' -என்பது நூற்பா.
(உவமவியல்)

கண்ணா-நிர்வாகனே ! என்றபடி உறுப்புகளுள் கண்முதன்மையாக இருப்பது போல மேகம் மழைக்குப் பிரதானன் என்பது பற்றிக் 'கண்ணா' என்கின்றனர். மூன்றாமடியில் புக்கு என்பதற்குப் பின் நீரை என்னும் பயனிலை வருவித்துக் கொள்க. மேகத்தின் முழக்கம் மகிழ்ச்சிக்கு இடமாதலால் 'ஆர்த்து' என்று அம்முழக்கத்தை வேண்டுகின்றனர். கடல் கடந்து இலங்கைக்குச் சென்ற அனுமன் செய்தியை உணராத குரங்கினங்கள் கடலுக்கு இக்கரையில் வருந்தி ஏங்கிக் கிடந்த போது, அனுமன் பிராட்டியைக் கண்ட களிப்பின் மிகுதியால் ஆரவாரித்துக் கொண்டு வந்து அவ்வாநர வீரர்களை மகிழ்வித்தது போல நீயும் ஆரவாரத்தினால் எம்மை மகிழ்விக்க வேண்டும் என வேண்டியவாறு. ஊழிமுதல்வன்-ஊழி என்று காலத்துக்குப் பெயர். இங்குக் காலத்தைக் கூறியது மற்றுள்ள எல்லாப் பதார்த்தங்களையும் கூறியவாறாம். உருவம் போல் மெய்கறுத்து-என்ற சொல் நயத்தால் அப்பெருமானது திருமேனியின் நிறத்தை மட்டும் நீ ஒரு புடை ஏறிட்டுக் கொள்ளலாம் அத்தனை ஒழிய, அவன்தன் அகவாயில் கருணை எவ்வகையிலும் உன்னால் ஏறிட்டுக் கொள்ள அரிது என்னும் கருத்துத் தோன்றும் என்ப. இங்கு 'நாச்சியார் விழி விழிக்க ஒண்ணா தென்றாற்போல' -என்னும் ஆறாயிரப்படி அறியத்தக்கது. அதன் பொருள் வருமாறு:

திருவரங்கம் பெரிய கோயிலில் சிறிய திருவத்யயன உற்சவத்தின் கடைநாள் இரவு ஸ்ரீரங்கநாதன் நாச்சியார் திருக்கோலம் பூண்டு சேவை சாதித்தருள, பராசரபட்டர் சேவித்துப் பெருமாளை நோக்கி, 'நாச்சியாருடைய கோலத்தை ஏறிட்டுக் கொண்டது அத்தனை ஒழிய அவள் போல் விழிவிழிக்க உன்னால் ஆகாதே' என்று உரைத்தருளினார் என்ற ஐதிகத்தை உளப்படுத்தியவாறு.

'சார்ங்கம் உதைத்த சரமழைபோல்'-என்றவுடனே, அவ்வில்லின் சரமழை இராவணாதியரை முடித்தது போல, இதுவும் முடித்துவிட்டால் செய்வது என் என்றஞ்சி, 'வாழ உலகினில் பெய்திடாய்' என்றார். சார்ங்கம் அடியார் துன்பத்தை அகற்றும் போது காலதாமத்தைப் பொறுக்காது என்பது தோன்றத் தாழாதே எனப்பட்டது.

மழை பெய்யாமல் இருப்பினும் துன்பம். அளவுக்கதிகமாகப் பெய்தாலும் துன்பம். எனவே அளவோடு பெய்து உலகை வாழ்விக்க வேண்டும் என்று கூறுவாராய், 'வாழ' என்ற சொல்லால் உணர்த்துகின்றனர்.

சேதனனை எம்பெருமானிடம் கொண்டு சேர்க்கும் ஆசாரியன் பலபல காரணங்களாலே மேகம் என்று கொள்ளத் தகுதியுடையராவதால் அவரே இங்கு மேகமாக உள்ளுறையாகக் கூறப்படுவதாகப் பெரியோர் பணிப்பர். ஆசாரிய இருதயத்தில், முதலாழ்வார்கள், திருமங்கை மன்னர், எம்பெருமானார் போல்வார் மேகமாகச் சொல்லப்படுவார்கள் என்று அருளிச் செய்திருப்பது காண்க. இனி ஒப்புமை காண்போம் !

1. மேகங்கள் கடலின் ஆழத்திலிருந்து நீரைக் குடித்து மழையாகப் பொழிந்து மக்களைப் பாதுகாக்கின்றன. ஆசாரியர்கள் வேதங்களாகிய கடலில் ஆழ்ந்த ஞானத்தைப் பெற்று மக்கள் உய்ய அதன் சாரத்தை உபதேசிக்கின்றனர்.
2. மேகங்கள் ஒரே இடத்தில் மட்டும் மழையைக் கொட்டாமல் பல இடங்களிலும் பெய்து செழிப்பை உண்டு பண்ணுவது போல், ஆசாரியர்கள் தங்கள் அருட்செல்வத்தைப் பல இடங்களுக்கும் சென்று பல தரப்பட்ட மக்களுக்கும் அருளுரை வழங்குகிறார்கள்.
3. மேகங்கள் மழை பொழிவதால் குளம், குட்டை எல்லாம் நிரம்பி வழிவது போல், ஆசாரியர்களுடைய உபதேசத்தால் மிகத் தாழ்ந்த நிலையிலுள்ள மக்களும், கடவுள் பக்தி பெற்று உய்கின்றனர்.

4. மழைநீரின் ஒருதுளி ஒரு சிப்பியில் விழுந்தவுடன் அது சில காலம் கழித்து ஒரு நல்ல முத்தாக மாறி அணிகலன்களில் அமையப் பெறுவதைப் போல நல்ல ஞானமுடைய ஒருவர் ஆசாரிய உபதேசத்தால் சிறந்த ஞானியாகி மக்கள் சமுதாயத்தை உயர்த்தத் தன்னை அர்ப்பணிக்கிறார்.

5. மேகமானது இடித்து முழங்கி மழைபெய்து உலகை வாழ்விப்பது போல் ஆசாரியரும் வேதவாக்கியங்களை அழுத்தம் திருத்தமாக நல்ல இசையுடன் ஓதி மக்களை ஒழுங்குபடுத்தி பரமாத்ம தத்துவங்களை ஏற்கச் செய்கிறார்.

6. மேகமானது உலகில் நல்லவர், கெட்டவர், ஏழை, பணக்காரன், என்ற வேறுபாடின்றி மழை பெய்வித்துக் காப்பாற்றுதல் போல, ஆசாரியனும் பலதரப்பட்ட குணங்களைப் பெற்ற மக்களுக்கும் வேறுபாடு கருதாமல் மறைவின்றி உபதேசிக்கிறார்.

முன்னோர்கள் கூறியருளிய ஒருசிறந்த கருத்தும் இங்கு நோக்கத்தக்கது.

'நம்மாழ்வார் ஆகிற காளமேகம் எம்பெருமான் என்னும் கடலிலே புகுந்து கருணையாகிற நீரை முகந்து கொண்டு, ஸ்ரீமந்நாதமுனிகள் என்னும் மலையுச்சியில் பெய்ய, அம்மழை உய்யக் கொண்டார், மணக்கால் நம்பிகளாகிற இரு அருவிகளாகப் பெருகி, எம்பெருமானாராகிய ஏரியிலே நிறைந்து வீராணம் ஏரியின் நீர் 74 மதகுவழியாகப் பெருகிப் பல ஊர் வயல்களிலே பாய்வது போல 74 சிம்மாசனாதிபதிகளின் வழியாய் உலக மக்களிடையே இடையறாது பெருகிக் கொண்டிருக்கிறது' என்க.

<u>உள்ளுறை:</u> பகவானது குணங்களாகிற கடலை நன்றாக அனுபவித்து ஆசாரிய பதவியைக் கைக்கொண்டு, எம்பெருமானது கருணையை அனுபவிப்பதனாலும், எம்பெருமானைப் பிரத்தியட்சமாக உணர்ந்ததாலும் திருமேனியில் வேறுபாட்டையும் ஒளியையும் அடைந்து, பெருமானது திருவருளை நன்றாக அறிந்த முதலாழ்வார்கள், எம்பெருமனார் போன்ற ஆசிரியரைப் பார்த்து, 'எல்லாரும் அறியும்படி பிரணவப் பொருளைச் சொல்லி, அதன் மூலமாகப் பெருமானது கருணைக் குணத்தை எல்லாரும் அறிந்து உய்யும்படி வெளியிட வேண்டும்' என்று வேண்டுவதாக உள்ளுறை அமையும். மழை - வெற்று நீரன்று, பெருமானின் அருள் வெளிப்பாடு.

## ஐந்தாம் பாசுரம்

மாயனை மன்னு வடமதுரை மைந்தனைத்
தூய பெருநீர் யமுனைத் துறைவனை
ஆயர் குலத்தினில் தோன்றும் அணிவிளக்கைத்
தாயைக் குடல் விளக்கம் செய்த தாமோதரனைத்
தூயோமாய் வந்து நாம் தூமலர் தூவித்தொழுது
வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்கப்
போய பிழையும் புகுதருவான் நின்றனவும்
தீயினில் தூசாகும் செப்பேலோ ரெம்பாவாய்.

(பொருள்) நாங்கள் பரிசுத்தம் உடையவர்களாய் வந்து (கண்ணபிரானை தூய்மையான மலர்களைத் தூவி வணங்கி வாயாரப்பாடி நெஞ்சினாலே நினைத்தால், முன்னே செய்த பாவங்களும் (இனிமேல்) வரநின்ற பாவங்களும் நெருப்பிலிட்ட பஞ்சுபோலத் தீய்ந்துவிடும். (ஆதலால்) ஆச்சரியமானவனும் (எம்பெருமானது சம்பந்தம்) எப்போதும் இருக்கின்ற வடமதுரையில் அவதரித்த வலிமை, அழகு முதலியவற்றை உடையவனும், பரிசுத்தமான மிக்க நீரையுடைய யமுனா நதியின் துறையை உடையவனும் ஆயர் குலத்திலே தோன்றிய மங்கள தீபம் போன்றவனும், தாயாகிய தேவகிப் பிராட்டியினுடைய வயிற்றை விளங்கச் செய்த தாமோதரனும் ஆகிய எம்பெருமானின் திருநாமங்களைச் சொல்.

(சிறப்புப் பொருள்) இதில், 'நாம் நோன்பு நோற்கத் தொடங்கினால் நம்முடைய விருப்பம் நிறைவேறும் என்று உறுதியாய்க் கொள்வது எதனால்?' என்று ஒருத்தி சந்தேகிக்க, 'நாம் நோன்பை மேற்கொண்டு பகவானை முக்கரணங்களாலும் கொண்டாடினால்,நமது விருப்பம் நிறை வேறுவதற்குப் பகையான பாவங்களெல்லாம் தாமே நீங்கிவிடும்' என்று மற்றொருத்தி சொல்கின்றனள்.

<u>மாயன்:</u>

பெருமான் பரமபத நிலயனாய் இருந்தும், திருவாய்ப்பாடியில் கண்ணனாய் அவதரித்துக் கோவலர்க்கும் கோக்களுக்கும் தான் எளியனாய், வெண்ணெய் களவு செய்வது, பெண்களைக் களவு காண்பதாய்ச் செய்த ஆச்சரியச் செயல்களின் அளவின்மையை நினைத்து மாயன் என்றார்.

வாமனாவதாரம் செய்த சித்தாச்சிரமமாதலாலும், சத்துருக்கனாழ்வான் இலவணாசூரனைக் கொன்று அரசாண்ட இடமாதலாலும், கண்ணபிரான் திருவருவதரித்த இடம் ஆதலாலும் மன்னு வடமதுரை எனப்பட்டது.

தான் ஆழமுடையதாய் இருந்தும் பிறந்தவுடனே கண்ணனை எடுத்துக் கொண்டு வசுதேவர்எழுந்தருளியபோது முழுந்தாள் அளவாய் வழிவிட்டதனாலும், கண்ணனும் கோபியரும் திளைக்கும் இடம் ஆதலாலும் தூய பெருநீர் யமுனை எனப்பட்டது.

பரமபதத்தில் ஒளிவிடாத சீலகுணம் மிகவும் ஒளிவிடுவது இந்த அவதாரத்திலே ஆதலாலும், அரசனாய்ப் பிறந்திருந்தும் உலகத்தார் முதன்முதலில் அறிந்தது திருவாய்ப்பாடியில் பிறப்பே ஆதலாலும் 'ஆயர் குலத்தினில் தோன்றும் அணிவிளக்கை எனப்பட்டது.

யசோதையிடம், 'கண்ணிநுண் சிறுத்தாம்பினால்' கட்டுண்டு இருந்தது 'இவ்வளவு அடங்கிய குழந்தையை எவ்வாறு இவள் பெற்றாளோ ? என்று உலகினர் கொண்டாடுகின்ற புகழ் அவ் யசோதைக்கு உண்டாகும்படி செய்ததனால் 'தாயைக் குடல் விளக்கம் செய்த' எனப்பட்டது. (நாட்டார் புகழ்ச்சியாலே பெற்ற வயிற்றுக்குப் பட்டம் கட்டுதல்) விளங்கு-என்னும் வினைப்பகுதி 'அம்' விகுதிபெற்று விளக்கம் எனத் தொழிற்பெயராயிற்று. விளங்குதல்-பிரகாசிப்பித்தல்.

இருந்த நிலையிலேயே எம்பெருமானை அடைவது பரிசுத்திகரமானதால் 'தூயோமாய்' என்றும் கூறினார். தாம+உதரன்+தாமோதரன். யசோதை கட்டிய கயிற்றுத் தழும்பை வயிற்றில் உடையவன். தூமலர்-பயன்கருதி இடப்படாத மலர்; மணிவிளக்கை என்று பிரித்தல் மோனைத் தொடைக்குச் சிறவாது.

போய பிழை - பூர்வாகங்கள் (பூர்வ+அகம் ; அகம்-பாவம்). எம்பெருமானை அடையுமுன்பே புத்திபூர்வமாக்ச செய்த பாவங்கள். புகுதருவான் நின்றன-உத்த ராகங்கள். பகவானை அடைந்த பின்பு அபுத்திபூர்வமாக நேரும் பாவங்கள். ஆயர்குலம்-உள்ளுறையில் சாதன அந்தரமில்லாத பாகவத குலம்.

இப்பாசுரத்தில் 5 ஆம் அடியில் 'தூவித் தொழுது' எனக் கனிச்சீர் வந்தது. குற்றியலுகரம் அலகு பெறவில்லை என்க. இனி, தூமலர்தூவித்தொழுது' என்று அலகிடலும் ஒன்று.

தொழுது, பாடி, சிந்திக்க-என்று, மனம், மொழி, மெய்களாகிற முக்கரணங்களினுடைய தொழில்கள் கூறப்பட்டன. பாடுவதற்கும், தொழுவதற்கும் முன்னே சிந்தித்தலாக வேண்டி இருக்க, தொழுது வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்க என முறை மாற்றிக் கூறுவதேன் எனில், ஆற்றாமையின் மிகுதியாலே முறை மறந்து கூறுகின்றனர் என்க. பெரும்பசி உடையவவன் உண்ணப்புகுந்தால் முறைமாறாது உண்ணவல்லன் அல்லனே ! மேலும் முறை பிறழத் திரிகரணங்களால் வழிபாடு செய்யினும் அருளீயும் ஆழியவன் என்றபடி.

கவிஞர்கள் காப்பியம் இயற்றும்போது ஊரையும், அந்த ஊர்த்தலை மகனின் பெயரையும், ஆற்றையும் சிறப்பித்துக் கூறுதல் வழக்கம். அவ்வகையில் வடமதுரை என்று ஊரையும், தாமோதரன் என்று அவ்ஊரின் தலைவனின் பெயரையும், யமுனை என்று அவ்ஊரின் ஆற்றையும் போற்றினார் கோதையார்.

தூய பெருநீர்யமுனை-பரமபதத்திலிருந்து வந்து அவதரிப்பதற்கு இவ்ஊர் உண்டானது போல, பரமபதத்துக்கு விரஜை போல இவ்வூருக்கு இவ்ஆறு. (ஆறாயிரப்படி).

"தூயோமாய் வந்து நாம் தூமலர் தூவித் தொழுது வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்க, போய பிழையும் புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசாகும் ; மாயனை மன்னு வடமதுரை மைந்தனைத் தூய பெருநீர் யமுனைத்துறைவனை ஆயர்குலத்தினில் தோன்றும் அணிவிளக்கைத் தாயைக் குடல் விளக்கம் செய்த தாமோதரனை-செப்பு" -என்று அன்வயம் செய்க.

---

" குலம் தரும்; செல்வம் தந்திடும்; அடியார் படுதுய ராயின வெல்லாம்
நிலந்தரம் செய்யும் ; நீள் விசும் பருளும்; அருளொடு பெருநில மளிக்கும்
வலம் தரும் ; மற்றும் தந்திடும் ; பெற்ற தாயினும் ஆயின செய்யும்
நலம் தரும் சொல்லை நான்கண்டு கொண்டேன் நாராயணா என்னும் நாமம்."

-பெரிய திருமொழி 1:1:9

## ஆறாவது பாசுரம்:

புள்ளும் சிலம்பினகாண் புள்ளரையன் கோயிலில்
வெள்ளை விளிசங்கின் பேரரவம் கேட்டிலையோ
பிள்ளாய் எழுந்திராய் பேய்முலை நஞ்சுண்டு
கள்ளச் சகடம் கலக்கழியக் காலோச்சி
வெள்ளத் தரவில் துயிலமர்ந்த வித்தினை
உள்ளத்துக் கொண்டு முனிவர்களும் யோகிகளும்
மெள்ள எழுந்து அரியென்ற பேரரவம்
உள்ளம் புகுந்து குளிர்ந்தேலோ ரெம்பாவாய்.

(பொருள்) சிறுமியே! பறவைகளும் (கூட்டிலிருந்து) கூவ ஆரம்பித்து விட்டன. பறவைகளுக்கெல்லாம் தலைவனான கருடாழ்வாருக்குச் சுவாமியாகிய பெருமானுடைய கோயிலிலே (எல்லாரையும் வருமாறு) அழைக்கின்ற வெண்ணிறச் சங்கின் பேரொலியை (நீ) கேட்கவில்லையோ? பேய் மகளின் தனத்திலே தடவிய நஞ்சை (அவள் உயிரோடும்) குடித்து,வஞ்சனையால் வந்த சகடமானது கட்டுக்குலையும்படி காலினால் உதைத்து, திருப்பாற்கடலிலே திருவனந்தாழ்வான் மீது யோக நித்திரை செய்கின்ற (அவதாரங்களுக்குக்) காரணமான திருமாலை, தியானம் செய்யும் இயல்பை உடைய முனிவர்களும், கைங்கரியம் செய்யும் தன்மை உள்ள யோகிகளும் மனதிலே தியானித்து, மெல்ல எழுந்திருந்து 'ஹரி ஹரி' என்ற பேரொலியானது உன் நெஞ்சில் புகுவதால் மனம் குளிர எழுந்திராய்.

(சிறப்புப் பொருள்) இது முதல் 10 பாசுரங்களில் முற்பட எழுந்தவர்கள் எழுந்திராதவர்களை நோன்புக்கு என்றுஒரு காரணத்தினால் ஸ்ரீகிருஷ்ணானுபவம் செய்ய வருமாறு எழுப்புகின்றனர். இங்கு அஞ்ஞான நிலையிலிருந்து ஞான நிலைக்கு உயிர்களை எழுப்புதல் என்பது உள்ளுறை. கிருஷ்ணானுபவத்தை தனித்தனியே சென்று அனுபவிக்க அமைந்திருக்க, ஒருவரை ஒருவர் சென்று எழுப்புவானென் எனில் பெருக்கெடுத்து ஓடும் ஆற்றில் இறங்குவோர் துணையின்றி இறங்கமாட்டதவாறு போல, ஆழியான் என்னும் ஆழமோழையில் இழியும் இவர்கள் துணையின்றி இழிய அஞ்சித்துணை கூட்டிக் கொள்வதற்காக ஒருவரை ஒருவர் உணர்த்துகின்றனர் என்பதாம்.

**"வேதம் வல்லார்களைக் கொண்டு விண்ணோர் பெருமான் திருப் பாதம் பணிந்து"** (திருவாய்மொழி 4:6:8)

என்றபடி பகவானை பாகவதர்களின் துணையுடன் தான் சென்று அடைய வேண்டும் ஆதலால் அதனை அனுட்டித்துக் காட்டுகின்றனர் என்பது உள்ளுறையாகும்.

முற்படத் துயிலுணர்ந்தவர்கள் முன்னம் ஒருத்தியை எழுப்ப, எழுப்பப்பட்ட அவள், 'பொழுது விடியு முன்பே என்னை ஏன் எழுப்புகிறீர்கள் ? என்ன, 'பொழுது விடிந்துவிட்டதே' என்று இவர்கள் சொல்ல, 'அடையாளமென்ன?' என்று அவள் கேட்க, பறவை கூவுதல், சங்கின் ஒலி கேட்டல் என்பனவற்றை அடையாளமாகச் சொல்ல, அவ்விரு அடையாளங்களும் வேறு வகையாலும் தோன்றலாம் என்று உறங்குகிறவள் சொல்ல, முனிவரும் யோகியரும் விடிய 5 நாழிகைக்கு முன் துயிலுணரும் போது 'ஹரி ! ஹரி !' என்று சொல்வதால் எழுந்த ஒலியை அடையாளமாகக் கூறுகிறார்கள்.

விடியற்காலத்தில் கூட்டினின்றும் பறவைகள் கூவுதல் இயற்கை. ஸ்ரீ விஷ்ணு ஆலயங்களில் சங்கு ஊதுதல் முற்கால வழக்கம். பேய்முலை நஞ்சு உண்டு கள்ளச் சகடம் கலக்கழியக் காலோச்சியவனென்று எம்பெருமானை இவர்கள் கூறியது- இவ்வரலாற்றைக் கேட்டால் துணுக்குற்று உறக்கம் தெளிந்து எழுந்திருக்கக் கூடும் என்ற எண்ணத்தாலாகும். தம்முடைய மனதில் பெருமானைத் தியானித்தலால், 'வெள்ளத்தரவில் துயிலமர்ந்த வித்தினை உள்ளத்துக் கொண்டு' எனப்பட்டது.

கண்ணன் அவதரித்தபின்பு ஆயர்களுடைய பசுநிரைக் கொட்டில்களிலே வந்து யோகியரும் முனிவரும் படுகாடு கிடப்பர் என அறிக. முனிவர்-பகவத் குண அனுபவம் செய்வோர் ; யோகியர் -பகவத் கைங்கரியம் செய்பவர். முனிவரும் யோகியரும் மெள்ள எழுந்தது-தமது மார்வமாகிய கோயிலில் எழுந்தருளி இருக்கிற அந்தர்யாமியாகிய பெருமான் அசையப் போகின்றானே என்ற பரிவினாலேயாகும். வயிறு வாய்க்கப் பெற்ற பெண்கள் வயிற்றினுள் உறையும் பிள்ளைக்குத் துன்பம் நேராதபடி மெள்ள எழுந்திருப்பது போல என எடுத்துக்காட்டு கூறுவர் பெரியோர்.

கோ-தலைவனது; இல்-இருக்கும். புள்-கருடாழ்வானுக்கு, அரையன்-தலைவனாகிய திருமாலினது கோயிலில் என்றுமாம். பிள்ளை-இளமைப் பெயர். இச்சொல்லுக்கு-பகவத் விஷயத்தின் இனிமையை முற்றவும் அறியாதவள் என்று கருத்துக் கொள்வர். குளிர்ந்த-குளிர, எச்சத்திரிபு. இனி, 'குளிர்ந்து' என்பதைக் 'குளிர்ந்தது' என்ற முற்றின் விகாரம் எனக் கொண்டு எங்களுடைய உள்ளத்தில் புகுந்து குளிரஒலித்தது என்று பொருளுரைப்பர். 'படுக்கைக் கீழே வெள்ளம் கோத்தது போல, திருநாமம் செவிவழியே புகுந்து வவ்வலிட்டது' என்றது நயமுடையது.

இப்பாசுரம் முதல் 15 ஆம்பாசுரம் முடிய 10 ஆழ்வார்களையும் துயிலுணர்த்துவதாக ஸ்ரீவானமாமலை ஜீயர் அருளிச் செய்துள்ளார். தன்னைப் பெற்றெடுத்து வளர்த்த பெரியாழ்வார் தொடக்கமாக ஏறுமுகமான வரிசையில் பொய்கையாழ்வார் அளவும் சென்று, அவ் ஏழு ஆழ்வார்களையும் 7 பாசுரங்களினால் உணர்த்தி பிறகு தன் காலத்திற்குப் பின்பு திருவவதரிக்கப் போகின்ற தொண்டரடிப் பொடி ஆழ்வார், நற்பாணர், நற்கலியன் என்னும் 3 ஆழ்வார்களையும் அகக்கண்ணினால் உணர்ந்து அவர்களை 3 பாசுரங்களால் வரிசையாக உணர்த்தித் தலைக்கட்டுகிறாள்.

இது பெரியாழ்வாரைத் திருப்பள்ளி உணர்த்தும் பாசுரம் பிள்ளாய் அறிவல்லாதவனைப் பிள்ளை என்பது. எம்பெருமானுடைய சர்வ இரட்சகத்துவம் முதலிய திருக்குணங்களை மறந்து இவர் மங்களாசாசனத்தில் ஒருப்பட்டார். ஆதலால் பிள்ளை என்னத் தகுதியுடையவரானார். நந்தவனத்திலேயே பொழுது போக்கின வராதலால் அவ்விடத்து அடையாளமாகிய புட்களின் சிலம்புதல் முதலில் தெரிவிக்கப்பட்டது. புள்ளரையன்-என்று கருடாழ்வார் கூறப்பட்டிருப்பது. இவர் கருடாம் சமாக அவதரித்தவர் என்பதைக் குறிக்கும். பேய் முலை நஞ்சுண்டு-பெரியாழ்வார் திருமொழியில் கண்ணபிரானுடைய சரித்திரங்களில் பேய்முலை நஞ்சுண்ட கதை முதன் முதலாகக் கூறப்பட்டது. 'பிறங்கிய பேய்ச்சி முலை சுவைத் துண்டிட்டு' என்றது காண்க.

உள்ளுறை:

புள்ளும் சிலம்பின - பாகவதர்கள் காலைக் கடன்களை மேற்கொள்ளப் புறப்பட்டனர். சங்கின் பேரரவம்-பிரணவத்தின்

பேரொலி, பேய்முலை நஞ்சுண்டு-பிரகிருதி சம்பந்தமாய் சேதநருக்குவரும் அகங்கார மமகாரங்களைப் போக்கி; கள்ளச் சகடம் கலக் கழியக் காலோச்சி-காமக்குரோதங்களையும் நீக்கி. பரம்பொருளைத் தியானித்து அவன் திரு நாமங்களைகக் கூறுகின்றனர். அதைச் செவிகுளிரக்கேட்டு மனம் தெளிவாயாக-எனப் பகவத் விஷயத்தில் புதியதாகச் சுவை உண்டாகிய சீடனுக்கு ஓர் ஆசாரியன் உபதேசிப்பதாக உள்ளுறை காண்க.

ஞானம், அனுட்டானம் இவைகளைக் கொண்டவராய்ப் பகவானைச் சேர்ப்பிக்கல்ல ஆசாரியரைப் பறவைகளாகக் கூறுவது தகும் என்பர்.

திருப்பாற் கடலில் கிடப்பது அவதாரங்களுக்கு அடிக்கிழங்காதல் பற்றி 'வெள்ளத்தரவில் துயிலமர்ந்த வித்தினை' எனப்பட்டது. உழவர் விதையை நீரிலே சேர்ப்பது போல், உலகங்களுக்கெல்லாம் விதை போன்ற தான் நீரிலே சேர்ந்தான் என்பது சுவையான செய்தியாகும்.

## ஏழாம் பாசுரம்

கீசு கீசு என்று எங்கும் ஆனைச்சாத் தன்கலந்து
பேசின பேச்சரவம் கேட்டிலையோ பேய்ப் பெண்ணே !
காசும் பிறப்பும் கலகலப்பக் கைபேர்த்து
வாச நறுங்குழல் ஆய்ச்சியர் மத்தினால்
ஓசை படுத்த தயிரரவம் கேட்டிலையோ
நாயகப் பெண்பிள்ளாய் ! நாரா யணன்மூர்த்தி
கேசவனைப் பாடவும் நீ கேட்டே கிடத்தியோ
தேசமுடையாய்! திறவேலோ ரெம்பாவாய்.

பொருள்: அறியாமைக் குணத்தையுடைய பெண்ணே ! வலியன் குருவிகள் எல்லா இடத்தும் (பேடையுடன் சேர்ந்து கீச்சுக் கீச்சென்று கத்தி ஒலிக்கின்ற குரலின் ஒலியைக் கேட்கவில்லையோ ? நறு மணமுள்ள கூந்தலையுடைய இடைச்சியர் காசு, பிறப்பு என்னும் ஆபரணங்கள் கலகலவென்று ஒலிக்க, கையை முன் பின்னாக மாறி மாறி, மத்தினால் ஓசையை உண்டாக்கித் தயிர் கடைகின்ற ஓசையைக் கேட்கவில்லையோ? தலைமை கொண்டாடுகின்ற பெண்பிள்ளையே ! நாராயணன் என்னும் திருநாமத்தை

உடையவனும், (பல யுகங்களிலும்) திருமேனி கொண்டு அவதரிப்பவனும், கேசி என்னும் அசுரனை அழித்தவனுமான கண்ணனை (நாங்கள்) பாடும்போது நீ கேட்டபடியே படுத்துக் கொண்டிருக்க விரும்புவாயோ? மிக்க ஒளியை உடையவளே ! (கதவைத்) திறப்பாயாக.

(சிறப்புப் பொருள்): எம்பெருமான் விஷயத்தில் மிக்க ஈடுபட்டினால் மெய்ம் மறந்து கிடக்கின்றாள் ஒருத்தியை எழுப்பும் பாசுரம் இது. 'பொழுது விடிந்த தென்று சொல்லி எழுப்ப வந்தவர்கள் எழுப்பினார்களாக, அவளும் அதை நம்பாமல் விடிந்தமைக்கு அடையாளம் என்ன? என்று அறிய விரும்பினளாக, எழுப்புகின்றவர்கள் ஆனைச் சாத்தன் கலந்து பேசியமையைச் சொல்ல, அவள் இவர்களுக்கு இப்படிச் சொல்வதே தொழில் என்று பேசாமல் கிடக்க, எழுப்புகிறவர்கள் விழித்திருந்தும் பேசாமல் இருப்பதற்காகச் சினந்து, 'பேய்ப்பெண்ணே ! மந்தரமலையை இட்டுக் கடலைக் கலக்கியது போல மத்தினால் தயிர்கடையும் ஓசையைக் கேட்கவில்லையோ? உன்னுடைய செல்வச் செருக்கினால் அன்றோ நாங்கள் நாராயண மூர்த்தியை பாடிக் கொண்டு வரவும் நீ கேட்டே கிடக்கிறது ? உன்னைக் காணாமல் இருண்டுகிடக்கிற எங்களுக்கு இருள்தீர நீயே வந்து கதவைத் திறப்பாய் ' என்கிறார்கள். 'பேய்ப்பெண்ணே' என்றும் 'நாயகப் பெண்பிள்ளாய்' என்றும் மாறுபடக் கூறினாலும் எப்படியாவது எழுந்திருக்கச் செய்ய வேண்டும் என்ற கருத்தினாலேயே சொல்வதால் மாறுபாடில்லை.

'பேர்த்து' -என்பதால் கை பேர்ப்பதிலுள்ள அருமை தோன்றும். அதற்குக் காரணம்-தயிர் செறிந்து கிடப்பது பற்றி மெல்லியரான இடைச்சியருக்குக் கடைய முடியாமையால் என்றாவது, கண்ணன் வந்து தயிரை மோராக்க ஒட்டேன் என்று தடுப்பதனால் என்றாவது கொள்க. கடையும் போது சிரமத்தாலே மயிர் முடிகட்டு நெகிழ்ந்து முடைநாற்றத்தை மறைக்கும்படி மணம் கமழ்வது பற்றி 'வாச நறுங்குழல் ஆய்ச்சியர்' எனப்பட்டது. காசு-அச்சுத்தாலி ; நீளமாய் இருப்பது, பிறப்பு-ஆமைத்தாலி. (வட்டமாய் இருப்பது) தேசம்-தேஜஸ்; ஒளி. 'நாயகப் பெண் பிள்ளாய்' -கிருஷ்ணானுபவத்தின் மிகுதியைக் கண்டு கொண்டாடிக் கூறியது. இகழ்ச்சிக் குறிப்பாகவும் கொள்ளலாம்.

ஆனைச்சாத்தன் - கீசுகீசென்று எங்கும் - கலந்து பேசின பேச்சரவம் கேட்டிலையோ? பேய்ப் பெண்ணே வாசநறுங் குழலாய்ச்சியர் - காசும் பிறப்பும் கலகலப்பக் கைபேர்த்து - மத்தினாலோசைப்படுத்த தயிர் அரவம் என அன்வயம் கொள்க. கீசு கீசு - ஒலிக்குறிப்பு. ஆனைச்சாத்தன் - வால் நீண்ட கரிக்குருவியாகிய வலியன் பரத்வாஜபட்சி என்றும் கூறுவர். இது விடியற்காலையில் கீசு கீசு என்று கத்தும். இதை இக்காலப் பறவை நூல் வல்லுநரும் கண்டு அறிந்து கூறியுள்ளனர். கலகலப்ப - ஒலிக்குறிப்பு. கேசவன் - கேசியைக் கொன்றவன், சிறந்த மயிர்முடியையுடையவன், அயன் அரர்களுக்குத் தலைவன் என 3 வகைப் பொருள்கள் உண்டு.

இவர்கள் கேசவனைப் பாடவும் அவள் பேசாதே கிடக்க நீ கேட்டே கிடத்தியோ என்கிறார்கள். உள்ளே அவள் பெருமானுடைய வெற்றியை எண்ணிக்கொண்டு பேசாமல் கிடந்தமையால் இவர்கள் சாலகவாசலாலே நோக்கிக் கண்டனர். பெருமானுடைய வெற்றியை மனதில் நினைத்துக் கொண்டிருந்ததால் அவள் வடிவில் தோன்றியுள்ள புகரைக் கண்டு தேசமுடையாய் என விளித்துக் கதவைத் திற என்கின்றனர். கிடத்தி - முன்னிலை ஒருமை வினைமுற்று.

இது பெரியாழ்வாருக்கு அடுத்த முந்தினவரான குல கேசவராழ்வாரை உணர்த்தும் பாசுரம். பேய்ப் பெண்ணே! நாயகப் பெண் பிள்ளாய்! தேச முடையாய்! என்ற 3 வரிகளும் இவரை வற்புறுத்துவன. பெருமாள் திருமொழியில் மெய்யில் வாழ்க்கையை என்ற ஒருபதிகத்தால் தம்மைப் பெரும் பேயராகச் சொல்லிக் கொண்டவர் இவர். ஏர்மலர்ப்பூங்குழல், ஆலைநீள் சிலை கரும்பு, மன்னுபுகழ் கௌசலை தன் என்ற பதிகங்களில் பலபெண்களின் தன்மையை அடைந்து பேசினாரும் இவர். கொல்லிகாவலன் கூடல் நாயகன் என்று அரசரான தன்மை தோன்றப்பேசினவராதலால் நாயகப் பெண்பிள்ளாய் என்றது. இவர் ஆழ்வார்களுள் நடுநாயகமானவர் (எம்பெருமானாரையும் இவ்வாறு கூறுவது வழக்கம்) பகவானுக்கு அடிமையாகும் பிறப்பே தேசஸ் என்று கூறப்படும். அப்படிப்பட்ட பிறப்பை ஊனேறுசெல்வத்து என்றபதிகத்தில் பாசுரந்தோறும் ஓரேவிதமாக விரும்பியவர் இவ்ஆழ்வாரே ஆதலால் தேசமுடையார் இவரே ஆகத்தகும்.

இப்பாட்டில் ஆனைச் சாத்தன் என்ற சொல்லாட்சி கவனிக்கத் தக்கது. இச்சொல் மலையான மொழியிலிருந்து திசைச் சொல்லாகத் தமிழில் வழங்குவதென்பர் (ஆனசாதம்) என்று மலையாள நாட்டார் இப்பறவையை வழங்குவராம் இச்சொல் அங்கு அவதரித்த இவரைக் குறிப்பில் உணர்த்தும், காசும் பிறப்பும் ஆபரணக் குறிப்பு இவ்ஆழ்வாருடைய சரிதையில் தொடர்பைக் காட்டும். கேட்டே கிடத்தியோ இவர்நாளும் அந்தணர்களைக் கொண்டு ஸ்ரீராமாயண பாராயணம் செய்வித்துத் தாம் கேட்டவர், கேட்டு இருந்த இடத்தில் இராமல் படை எடுத்தும் சென்றவர்.

உள்ளுறை.

பாகவதர்கள் ஒருவரை ஒருவர் பிரியும் போது பிரிவுத் துயர் தோன்றப் பேசுவதையும், இரகசியத் திரயங்களையும் வாயினால் சொல்லுகின்றவர்களான சொரூப உபாய புருஷாத்தங்களை அறிந்த ஸ்ரீவைணவர்களால் சீர்திருந்திய சம்சாரிகளின் திவ்வியப் பிரபந்த அனுசந்தானத்தையும் கேட்டிலையோ? பாகவத விஷயத்தின் மேன்மையை அறிந்த நீ பகவதனுபவத்தினால் கருவப்பட்டிராமல் பாகவதர் உனது பகவதனுபவத்தை உணரும்படியாக வந்து நீ உன் ஞானத்தைப் பிரகாசிப்பிக்க வேண்டும் என்பதாம்.

காசும் பிறப்பும். . . கைபேர்த்து - திருமந்திரம், துவயம், சரமசுலோகம் ஆகியவை ஒன்றோடொன்று சேர்ந்து ஒலிக்க திவ்வியப்பிரபந்த அனுசந்தான ஒலி.

## எட்டாம் பாசுரம்

**கீழ்வானம் வெள்ளென்று எருமை சிறுவீடு**
**மேய்வான் பரந்தன காண் மிக்குள்ள பிள்ளைகளும்**
**போவான் போகின்றாரைப் போகாமல் காத்து உன்னை**
**கூவுவான் வந்து நின்றோம் கோது கலமுடைய**
**பாவாய் எழுந்திராய் பாடிப் பறை கொண்டு**
**மாவாய் பிளந்தானை மல்லரை மாட்டிய**
**தேவாதி தேவனைச் சென்றுநாம் சேவித்தால்**
**ஆவா வென்று ஆராய்ந்து அருள் ஏலோ ரெம்பாவாய்.**

(பொருள்) ஆகாயத்திலே கிழக்குப் பக்கம் வெளுத்திருக்க, எருமைகள் சிறிது (நேரம் மேய்வதற்காக) விடும் போதிலே

(பனிப்புல்மேய்வதற்காக (நான்கு பக்கத்திலும்) பரவின (நோன்பிற்கு) நீராடப்போகும் பிள்ளைகளையும் (முன்னம்) போகாதபடி தடுத்து உன்னைக் கூப்பிடும் பொருட்டு (நாங்கள் வந்து நிற்கிறோம். (கிருஷ்ணனால்) கொண்டாடப்படுகிற பதுமை போன்றவளே எழுந்திருப்பாயாக (கேசி என்ற குதிரை வடிவமான அசுரனது வாயைப் பிளந்தவனும் மல்லர்களை அழித்த தேவாதி தேவனுமான பெருமானை நாம் சென்று பாடி (நோன்பிற்குப்) பறையை வேண்டிக் கொண்டு வணங்கினால் (அப்பெருமான் நமது விருப்பத்தை முடிப்பான், ஆதலால்) அலறிக்கொண்டு (விரைவாக) நாங்கள் சொல்வதை ஆராய்ந்து புறப்படுவாயாக.

(சிறப்புப் பொருள்) கண்ணபிரானும் வேண்டுபடியாய் இருப்பாள் ஒருத்தியைப் பொழுது விடிந்தமைக்கு உள்ள அடையாளங்களைச் சொல்லியும் எழுந்த பின்பு தாங்கள் செய்ய வேண்டியவற்றையும் அவற்றைச் செய்வதால் உண்டாகும் நன்மைகளைச் சொல்லியும் எழுப்புகிறார்கள். சம்சாரிகள் தாமே குண மிகுதியால் வந்த உறக்கமுமாய்ச் செல்வதாலும், நரகில் சேர்க்கவல்ல தீய செயல்களைச் செய்ய ஏற்ற காலமாய் இருப்பதாலும் இரவை விரும்புவர். பகல் பொழுது அறம் பொருள் இன்பம் வீடுஅடைவதற்கேற்ற செயல்களைச் செய்ய ஏற்றதாய் இருக்கும். ஞானிகளில் தலைமையான இவ்ஆயர்மடந்தையர் இரவில் இடையீடின்றிக் கிருஷ்ணானுபவம் செய்யப் பெறுவதால் பகவத அனுபவத்திற்கு பாங்கான காலமென்று அது இவர்களுக்கு விரும்பத்தக்கதாய் இருக்கும். பகலில் ஆய்க்குரவர் விரோதிப்பர் என்று அக்காலம் வெறுக்கத்தக்க தாய் இருக்கும். ஆகையாலே பொழுது விடியில் இடைக் கிழவர்கள் விரோதிப்பரே ஏற்ற இராக்காலம் பழுதாகக் கழிகின்றதே என்ற பரிதாபத்தினால் பாவாய் கீழ்வானம் வெள்ளென்றதே இனியாகிலும் எழுந்திராய் என்று அழைக்கின்றனர். இது கேட்ட அவள், அதற்குள் இரவு நீங்குவதா? கீழ்வானம் வெளுத்ததா? இது உங்களுடைய விபரீத ஞானம். சந்திரனைப் பேன்ற முகமுடைய நீங்கள் நீண்ட நேரம் கீழ்த்திசையையே நோக்கிக்கொண்டு முகத்திலே வந்து பிரதி பலித்துத் தோன்றுவதாலே கிழக்கு வெளுத்தது போலத் தோன்றுகிறது. இது உங்களுடைய அறியாமையே. வேறு அடையாளம் இருந்தால் சொல்லுங்கள் என்ன, எருமைகள் பனிப்புல் மேய்வதற்காகச் சென்று பரந்தமை எற்ற அடையாளம் அன்றோ? என்கின்றனர்.

சிறுவீடு மேய்வதாவது- ஊர்ப்பசுக்களுடனே சென்று வெளிவயல்களில் மேய்வதற்கு முன்னே அவரவர்கள் சொந்தமாக அமைத்த நல்லபசும்புல் நிறைந்த சிறு தோட்டங்களில் மேய்கை. நன்றாகபால் தருவதற்காக இப்படிச்சிறுவீடு மேயவிடுதல் ஆயர் வழக்கமாகும்.

இங்ஙனம் ஓர் அடையாளம் கூறக்கேட்ட அவள் உங்களுடைய முக ஒளியினால் சிதறிப் போகிற இருள்களின் திரள் எருமைகளாக உங்களுக்குத் தோன்றுகின்றனவே அன்றி, அவை உண்மையில் எருமைகள் அல்ல, இது உங்களுடைய விபரீத ஞானம் என்றாள். எப்போதும் கலகலப்பாகப் பேசும் அடிப் பெண்ணே எருமைகளின் பின்னே கண்ணன் சென்று விட்டால் நாம் அவனைக் காண இயலாதே என்று வெளியில் இருந்தவர்கள் கூறக் கேட்டு நீங்கள் பத்தெட்டுபேர் உறக்கம் நீங்கி எழுந்து வந்து விட்டால் விடிந்தாகுமா? என்று உள்ளே இருந்தவள் கேட்டாள். ஐந்து லட்சம் ஆயர்குடிப் பெண்களுக்கு இன்னும் விடியவில்லை உங்களுக்கு மட்டும் விடிந்து விட்டதாக நீங்கள் நினைத்து வந்திருக்கிறீர்களே? என உள்ளிருந்தவள் கேட்க, "எல்லாரும் வந்துவிட்டார்கள், நீ முன்னமே சென்றிருப்பாய் என நினைத்துச்சிலர் போய் விட்டார்கள் நாமும் குழுவினராய்ச் (கோஷ்டி) செல்ல வேண்டும் ஆதலால் நீ இன்னும் போகவில்லை என்பதறிந்து போய்க் கொண்டிருந்தவர்களைத் தடுத்து அவர்களையும் அழைத்துக் கொண்டு உன் வீட்டிற்கு வந்திருக்கிறோம்" என்றனர் வெளியில் இருந்தோர்.

போவான் போவதற்கு-வான் விகுதிபெற்ற தெரிநிலை வினைஎச்சம். போகின்றாரை-என்ற சொல்லிலுள்ள இரண்டனுருபு மிக்குள்ள பிள்ளைகளும் என்ற இடத்தில் பிரித்துக் கூட்டி உரைக்கப்பட்டது. கோதுகலம்- கௌதூஹலம் என்ற வடசொல்லின் விகாரம். ஆசை-என்பது அதன் பொருள். கோதுகுல முடைய-என்றபாடம் தவறு. பாவை உவமையாகுபெயர். மாட்டிய-மாள் என்னும் வினைஅடியாகப் பிறந்த பிறவினைப் பெயரெச்சம். தேவாதி தேவன்-யாம் கடவுள் என்று இருக்கும் எவ்வுலகில் கடவுளர்க்கும் ஆம் கடவுள் நீ என்ற திருவரங்கக்கலம்பகம் காண்க. ஆ ஆ-ஹாஹா இரக்கக் குறிப்பிடைச் சொல், அருள்-அருளும் என்றபடர்க்கை எதிர்கால வினைமுற்றின் தொகுத்தல்.

பாவாய் எழுந்திராய் - பெண்ணின் வருத்தம் அறியாதவரைப் போல அல்லாமல் அறியக் கூடிய நீ கிடக்கக் கடவையோ? என்பது நயம்.

குலசேகரருக்கு முந்தியவரான நம்மாழ்வாரை உணர்த்தும் பாசுரம் இது. கோதுகலம் உடைய பாவாய்-கண்ணனிடம் ஆசை. பட்டர் நம்மாழ்வாரைப் பற்றிப் பேசும் போது, கிருஷ்ண குதூகலமே நம்மாழ்வாராக வடிவெடுத்தது என்றார். பாவாய் என்று தம்மைப் பாவையாகச் சொல்லிக்கொள்கிறார் திருவாய்மொழியில். எழுந்திராய்-உட்கார்ந்திருப்பவரையன்றோ எழுந்திராய் என்று கூறவேண்டும் மற்றைய ஆழ்வார்கள் எல்லாரும் நின்ற திருக்கோலத்தில் எழுந்தருளிருக்க இவர் ஒருவரே வீற்றிருந்த திருக்கோலத்தில் உள்ளார். கீழ்வானம் வெள்ளென்று உதய காலத்தில் கிழக்கு வெளுக்கும் இங்கும் நம்மாழ்வார் அவதாரம் செய்தது கலியுகத்தின் உதயகாலத்திலாதலும் கிழக்கு வெளுத்ததாகச் சொல்லிற்று. எருமை என்றது தாமதகுணத்தினரை. இவர் அவதரிக்கும் முன்பு பலரும் தாமதகுணத்தினராய் நல்வீடு செல்லாது, சிறுவீடு (கைவல்யம்) முதலியவற்றில் சென்று பாழாயினர் என்பது இங்கு உணர்த்தப்படுகிறது. மிக்குள்ளபிள்ளை காத்து என்பதால் இப்பிள்ளை வாசலில் வந்து துவள்வதால் இவருக்குண்டான ஏற்றம் தோன்றுவது போல, மற்றைய ஆழ்வார்களைக் காட்டிலும் இவருக்குண்டான பிரபன்னஜன கூடஸ்தர் என்னும் ஏற்றம் தோற்றுவிக்கப்பட்டது. போவான் போகின்றாரை - இச்சொல்லாட்சி போவான் வழிக் கொண்ட மேகங்களே என்று திருவிருத்தத்தில் வந்துள்ளது. கூவுவான் வந்து நின்றோம்-கூவிக்கொள்ளும் காலம் இன்னம் குறுகாதோ என்றார். ஆண்டாள் நோற்பதுபோல் நம்மாழ்வாரும் ஒரு திருவாய் மொழியில் நோன்பு நோற்றார். வீற்றிருந்தேழுலகும் என்ற திருவாய்மொழியில் ஏற்ற நோற்றேற்கு என்று முதலிலும் வண்டமிழ் நூற்கநோற்றேன் என்று முடிவிலும் வருவது காண்க. அங்ஙனம் நோற்ற திருவாய் மொழியில் தேவாதி தேவனை அனுபவிக்கின்ற ஆழ்வார் மாவாய் பிளந்தானை என்ற சிறப்பை முதல் பாட்டில் இட்டருளினார். வெம்மா பிளந்தான் தன்னை என்றது காண்க.

**உள்ளுறை**

பாகவதரிடம் மிக்க அன்புடைமையாலே பகவானுக்கு மிகவும் அன்புக்கு உரியவராகிய முக்தர் போல இருக்கிறபாகவதர் ஒருவரை முன்னிட்டு எழுப்புதல் இதற்கு உள்ளுறை பொருள் ஆகும். முதலிரண்டு அடிகள் சத்துவகுணம் தலைஎடுக்கத் தமோ குணங்கள் விலகிப் போவதைக் குறிப்பிக்கும்.

ஒப்பு: மல்லற் கடந்தான் - ஐந்திணை ஐம்பது-மாறன் பொறையனார்
மல்லரை மாட்டிய தேவாதி தேவன் - திருப்பாவை

மேவார் விடுத்தந்த கூந்தல் குதிரையை
வாய் பகுத்திட்டு - கலித்தொகை
கூந்தன் மாகொன்று குடமாடி - முத்தொள்ளாயிரம்
மாவாய் பிளந்தானை- திருப்பாவை.

## ஒன்பதாம் பாசுரம்

தூமணி மாடத்துச் சுற்றும் விளக்கெரியத்
தூபம் கமழத் துயிலணைமேல் கண்வளரும்
மாமான் மகளே மணிக் கதவம் தாள் திறவாய்
மாமீர் அவளை எழுப்பீரோ உன் மகள்தான்
ஊமையோ? அன்றிச் செவிடோ? அனந்தலோ?
ஏமப் பெருந்துயில் மந்திரப் பட்டாளோ
மாமாயன் மாதவன் வைகுந்தன் என்றென்று
நாமம் பலவும் நவின்றேலோ ரெம்பாவாய்.

(பொருள்) தூய்மையான மணிகள் இழைத்துச் செய்யப்பட்ட வீட்டிலே படுக்கையைச் சுற்றிலும் விளக்கு எரிந்து கொண்டிருக்கவும், (அகில்முதலியவற்றின்) புகை கமழவும், தூங்குவதற்கு உரிய படுக்கையிலே தூங்குகின்ற மாமனது பெண்ணே! மணிகளால் ஆகிய கதவின் தாழ்ப்பாளைத் திறப்பாயாக மாமிமார்களே! உமது பெண் ஊமையா? அல்லாமல் செவிடா? (களைப்பினால்) உறங்குகிறாளோ? மிகவும் ஆச்சரியமான குணம் செயல்களை உடையவன், திருமகளுக்குக் கணவன் வைகுண்டநாதன் என்று (நாங்கள் எம்பெருமானுடைய) பலதிருநாமங்களையும் சொல்வதனால் (எழுந்திராதபடி) காவலைச் செய்கின்ற மிக்க தூக்கத்திலே அகப்பட்டாளோ? மந்திரத்தால் கட்டுப்பட்டாளா? (உமது) அந்தப் பெண்ணை எழுப்பமாட்டீர்களோ?

(சிறப்புப் பொருள்) மைத்துனமை உறவுடையாள் ஒருத்தியை எழுப்பும் பாசுரம் இது. சுற்றும் விளக்குகள் விளங்க, தூபங்கள் மணம் கமழப் பெற்ற நன்மணிமாடத்தில் மெல்லணைமேல் கண் துயிலும் மாமான் மகளை நோக்கி மணிக் கதவம் தாள் திறவாய் என்று வெளியே நிற்பவர்கள் சொல்ல, அவள் அதனைக் கேட்டும் மறுமொழி ஒன்றும் சொல்லாமல இருக்க, அது கண்ட அவள் தாயார் இத்தனை பெண் பிள்ளைகளும் வருந்தி வாசலில் நின்று துவள,

இவள் ஒரு பேச்சும் பேசாமல் கிடந்து உறங்குவது என்ன நீதி? என்று நெஞ்சில் கொண்ட இரக்கம் முகத்திலே தோன்றும்படி இருப்பதை இந்த ஆய்ச்சிகள் கண்டு மாமீர்! அவள் ஒருத்தி எங்கள் கூட்டத்தில் புகாததால் நாங்கள் படும் பாட்டைக் கண்டீரே உமது மகளைச் சிறிது எழுப்பலாகாதா? நாங்கள் நீண்ட நேரமாக நின்று கூப்பிட்டும் இவள் பதில் ஏதும் கூறாமல் இருக்கிறாளே! இவள் ஊமையா? செவிடா? பேருறக்கம் பிடித்தவளா? அல்லது இவள் எழுந்திருக்க முடியாதபடி யாரேனும் மந்திரப் பிரயோகம் செய்து விட்டார்களா? நாங்கள் ஒருவகையாகவும் நிர்ணயம் செய்ய இயலாதவர்களாய் இருக்கிறோம்! என்ன, இது கேட்ட தாயார், நீங்கள் இவ்வாறு ஒன்றும் சந்தேகிக்க வேண்டா? அவள் மகிழும்படியான பகவந் நாமங்களைச் சொல்லத் தொடங்கினீர்களாகில் அவள் தானே எழுந்து விடுவாள் என்ன அவ்வாறும் செய்தோம் நாங்கள் சொன்ன பகவந் நாமங்களுக்கு ஓர் எல்லை இல்லை. இன்னும் யாம் என் செய்வோம்? என்கிறார்கள்.

வெளியில் நின்று துவள்கின்ற எங்கள் நெஞ்சு இருண்டு புகைய, உள்ளே சுற்றும் விளக்கெரியும் படியாகப் பெற்ற பாக்கியமே பாக்கியம் ! என்னும் வயிற்றெரிச்சலை முதலடியில் காணலாம். 'தூமணிமாடமாகையால் உள்ளெரிகிற விளக்குத் தோன்றும் அன்றோ? ' என்பது ஆறாயிரப்படி. 'துயிலணைமேல் உறங்கும்' என்னாமல், 'கண்வளரும்' என்றது, பகவத் விஷயத்தில் ஈடுபட்டவர்கள் கௌரவிக்கத் தக்கவர் என்ற கருத்தைக் காட்டும்.

மாமான் மகளே ! திருவாய்ப்பாடியில் ஓர் உறவு முறை அமைவது தனக்கு உய்யும் வழியாக அமையும் என்று ஆண்டாள் ஆசைப்பட்டபடி-என்பது ஆறாயிரப்படி. மாமன்>மாமான் என விகாரப்பட்டது. மாமீர் ! -ஒருவரைக் கூறும் பன்மை. நவின்று-நவில; எச்சத்திரிபு.

'மாமாயன் மாதவன் வைகுந்தன்' -என முழுப்பெயரைச் சிறப்பாகக் குறித்திருத்தல் ஏனெனில், 'மாதவன்' -என்பது திருமகள் கேள்வன் என்பதையும், 'மாமாயன்' -என்பது அவனது எளிமையையும், 'வைகுந்தன்' என்பது அவனது பரத்துவத்தையும் காட்டும். மேலும் பெரிய பிராட்டியின் சம்பந்தத்தாலேயே எளிமையும், பரத்துவமும் பகவானுக்குச் சித்திக்கும் என்பதைத் தோற்றுவிக்க 'மாதவன்' என்பதை நடுவில் வைத்தாள்.

ஊமைக்கும் கேட்டு வந்து திறக்கலாம் ; அதற்கும் மேலே செவியில் துளை இல்லையோ ? என்ற ஆறாயிரப்படியையும் நோக்குக.

'ஊமையோ ? செவிடோ?' -என்ற வினாக்களுக்கு உட்கருத்து அன்பர் விஷயத்தில் இரக்கமுற்று 'ஐயோ !' என்று ஒரு வாய்ச்சொல் சொல்வதற்கும் அவகாசமில்லையோ உன் மகளுக்கு? அன்புடையவரான எங்களுடைய கூக்குரல் செவிப்பட ஒண்ணாதபடி உன் மகள் உள்ளே செய்யும் செயல் என்னோ?

திருமழிசை ஆழ்வாரை உணர்த்தும் பாசுரம் இது:

மாமன் மகளே ! இது ஒரு வகை உடல் தொடர்பைக் காட்டுவது. இலட்சுமி (ஆண்டாள்) திருமழிசையார் இருவரும் பிருகு குலத்தில் தோன்றியவர்கள். ரிஷி குலத்தில் பிறந்து பிரப்பங்குடியில் ஆனார் அவர். பிராமண குலத்தில் பிறந்து ஆயர் குலத்திலே ஆனாள் இவள். தூமணி மாடத்து, சிறந்த மாணிக்கக்குப்பியின் உள்ளே உள்ளது வெளியில் நிழலிட்டுத்தோன்றும். திருமழிசையார் 'உட்கிடந்த வண்ணமே புறம் பொசிந்து காட்டிடே' என்று வேண்டிக் கொண்டபடியே உள்ளிருந்ததிருமால் அப்படியே வெளியில் பொசிந்து காட்சி தந்தமையால் இவர் தூமணிமாடம் என்னத் தகுந்தவர். சுற்றும் விளக்கெரிய-விளக்காவது ஞான ஒளி ! 'சாக்கியம் கற்றோம் சமண் கற்றோம் சங்கரனார் ஆக்கிய ஆகம நூல் ஆராய்ந்தோம்' என்றபடி இவர் எல்லாமதங்களிலும் புகுந்து பல ஞான விளக்கம் பெற்றவர் ஆதலால் சுற்றும் விளக்கு எரிதல்இயல்பே ஆகும். தூபம் கமழ-சிறந்த ஞானம் இருந்தால் மட்டும் போதாது அது நன்கு பரிமளிக்க வேண்டும். எம்பெருமானை அன்றி வேறொரு தெய்வத்தைத் தொழா திருத்தலே ஞானத்திற்கு மணமாம். 'மறந்தும் புறம் தொழா மாந்தர்' என்பது இவரது திருவாக்காகும். துயிலணை மேல் கண் வளரும்-இவரது திருக்கண் செல்வது சயனத் திருக்கோலமான பெருமான்களின் மீதுதான். 'நாகத்தணைக் குடந்தை வெஃகாத் திருவெவ்வுள் நாகத்தணை அரங்கம் பேர் அன்பில் நாகத்தணைப் பாற்கடல் கிடக்குமாதி நெடுமால் அணைப்பார் கருத்தனாவான்' -என்று சயனத் திருப்பதிகளையே ஒரு கோவையாக எடுத்துப் பாசுரம் பாடின வரும் இவரே, 'மாமான் மகளே' -என்பது இவர் பெருமாளிடம் சரீர சம்பந்தம் உடையவர்

என்பதைக் காட்டும். அதாவது இவர் திருமாலின் சக்கராயுதத்தின் அவதாரம் என்று கூறுவர். மேலும் மகள் சொற்படி தந்தை கேட்பதும், தந்தை சொற்படி மகள் கேட்பதும் வழக்கம். துயிலணைமேல் கண்வளரும் மாமான் காஞ்சியில் உள்ள சொன்ன வண்ணம் செய்த பெருமாள். அப்பெருமான் இவர் சொன்னபடிகேட்டவர். 'கணிகண்ணன் போகின்றான் நீயும் உன்றன் பைந்நாகப் பாய் சுருட்டிக் கொள்' என்றபோது அப்படியே சுருட்டிக் கொண்டு புறப்பட்டார். 'உன் தன் பைந்நாகப் பாய் விரித்துக் கொள்' என்றபோதும் அப்படியே. 'உன் மகள் தான் ஊமையோ அன்றிச் செவிடோ' -என்பது இவர் வாழ்வில் நிகழ்ந்த ஒரு நிகழ்வை நினைவு கூறும்படி உள்ளது.

ஒரு சமயம் பிராமணப் பெரியோர்கள் ஒன்று கூடி யாகம் ஒன்று செய்து கொண்டிருந்தனர். இவர் அவ்வழியாக வருவது கண்ட பிராமணரில் சிலர் இவர் கீழ்க்குடியில் பிறந்தவர் எனத் தவறாக எண்ணி இவர் எதிரில் வேதம் ஓதுவது தகாது என்று மந்திரங்கள் ஓதுவதை நிறுத்திவிட்டனர். இவர் அவ்விடத்தை விட்டுக் கடந்து சென்றுவிட்டார். ஆனால் அவர்களுக்கு வேத மந்திரங்கள் விட்ட இடத்திலிருந்து தொடர நினைவில் வரவில்லை. அத்துடன் அவர்கள் பூசிக்க அமைந்திருந்த பூஜா விக்கிரகம் ஆழ்வார் போகும் திசையை நோக்கித் திரும்புவது கண்டு ஆச்சரிய முற்று ஆழ்வாரை வந்தழைத்துச் சென்று நிகழ்ந்ததைக் கூறினர். இவர் ஒன்றும் பதில் கூறாமல் ஜாடையாக ஒரு தானியத்தை எடுத்துக் கிள்ளி எறிந்தார். உடன் அப்பொருள் உள்ள வேதவாக்கியம் அவர்களுக்குத் தோன்றியது. (அதாவது, க்ருஷ்ணாநாம் வ்ரீ ஹீணாம் நக நிர்ப்பந்தம் என்பது) அதனால் அவர்கள் இவருக்குச் சம ஆசனம் கொடுத்துக் கௌரவித்தனர். இவ்விதமாக ஆழ்வார் வாய்திறந்து கூறாமல் ஜாடையாகவே தெரிவித்ததால் 'ஊமையோ அன்றிச் செவிடோ' என்ற பாசுரத் தொடர் இவருக்குப் பொருந்துகிறது. மேலும் இவர் எம்பெருமானைது திருநாமத்தைத் தவிர மற்ற விஷயங்கள் எதையும் காதில் போட்டுக் கொள்ளாமல் இருந்ததால் இவரைச் செவிடோ என்று கூறுவது தகும்.

இப்பாசுர 6ஆம் அடியில் மாமாயன், மாதவன், வைகுந்தன் என்று எம்பெருமானின் 3 திருநாமங்களையும் ஆளுகின்றனர். ஸ்ரீ ஆண்டாள். 'மாமாயன் மக்களைத் துன்புறுத்தும் கொடியவர்களையும் அழிப்பவன் என்பதையும் உணர்த்தவே

இவ்வாறு கூறினர். 'மாதவன்' என்பதில் பெருமான் தேவர்களை மட்டும் காப்பவன் அல்லன் ; அடியார்களையும் அரவணைப்பவன் என்பதையும் அறிவிக்கவே இவ்வாறு கூறினர். 'வைகுந்தன்' என்பதில் எல்லா உயிர்களுக்கும் தாயாக வந்து அருள்பொழிபவனே அப்பெருமான் என்று உணர்த்தினர்.

உள்ளுறை: 'குற்ற மற்ற திருமேனியிலே ஞானம் ஒளிவீசவும், அனுட்டானங்கள் குறைவின்றி இருக்கவும் பகவானையே உறுதியாய் நம்பி அப்பரமனுக்குப் புத்திரனாக இருக்கும் பாகவதரே ! உம்மை அனுபவிக்க விரோதியான எங்கள் தேக ஆத்ம அபிமானங்களைப் போக்குவீர்' என்னவும், அப்பாகவதர் சும்மா இருக்க, அப்படிப்பட்ட ஞான ஆதிக்கம் அவர்க்கு உண்டாவதற்குக் காரணமான எம்பெருமானைத் தவிர வேறு ஒன்றை உபாயமாகப் பற்றாமையாகிய சொரூப ஞானம் 'சிலர் இவ்வாறு அழைக்க சும்மா இருப்பானேன்? ' என்ற ஞானத்தை அவருக்கு உண்டாக்க, அந்த ஞானத்தை நோக்கி, 'உம் மகள் தான் ஊமையோ?' முதலியனவாகச் சொல்கிறது இதற்கு உள்ளுறையாம்.

மணிக்கதவம் தாள் திறவாய்-தேக, ஆத்மாக்கள் இரண்டிலும் உண்டான உமது அனுபவத்திற்கு விரோதியான மமகாரத்தை நீக்க வேண்டும் என்றபடி, தூமணி மாடம்-உடல்; விளக்கொளி-மனிதனிடமிருந்து வெளிப்படும் ஞானப்பிரகாசம்.

## பத்தாம் பாசுரம்

நோற்றுச் சுவர்க்கம் புகுகின்ற அம்மனாய்!
மாற்றமும் தாராரோ வாசல் திறவாதார்
நாற்றத் துழாய்முடி நாராயணன் நம்மால்
போற்றப் பறைதரும் புண்ணியனால் பண்டொருநாள்
கூற்றத்தின் வாய் வீழ்ந்த கும்ப கரணனும்
தோற்றும் உனக்கே பெருந்துயில்தான் தந்தானோ
ஆற்ற அனந்தல் உடையாய் ! அருங்கலமே
தேற்றமாய் வந்து திறவேலோ ரெம்பாவாய்.

**(பொருள்) (கண்ணபிரானை அனுபவிக்க முற்பிறப்பில்) தவஞ்செய்து (இப்போது சுகத்தை அனுபவிக்கிற தலைவியே !வாயிற் கதவைத் திறவாதிருப்பவர், (ஒரு) மறுமொழியாவது சொல்லார்களோ ?**

நறுமணமுள்ள திருத்துழாயை முடியில் அணிந்த எம்பெருமான் நம்மால் பல்லாண்டு பாடப்பெற்று (நமது நோன்புக்கு வேண்டிய) பறையைத் தரக்கூடிய உபாயமாவன். (அப்படி இருக்கவும் நீ உறங்குகின்றாயே ! இது தகுதியோ?) முன் ஒரு காலத்தில் (இராமபிரானால்) எமன் வாயிலிலே விழுந்த (இறந்த) கும்பகருணன் என்பவனும் (உனக்குத்) தோற்றுப் போய் (தனது) பெரிய உறக்கத்தைக் கொடுத்தானோ ? மிகுதியான உறக்கத்தை உடையவளே ! (கிடைத்தற்கு) அரிய ஆபரணம் போன்றவளே ! தெளிவுடன் வந்து (கதவைத்) திறப்பாயாக.

(சிறப்புப் பொருள்) இதனால் கிருஷ்ணானுபவத்தில் மூழ்கிப் பரவசையாய் இருப்பாள் ஒருத்தியை எழுப்புகின்றனர். முற்பிறவியில் செய்த நோன்பினால் இப்போது கிருஷ்ணானுபவம் விஞ்சிச் சுகத்தில் மூழ்கியிருப்பவளே ! நீ எமது செவி குளிர மறுமொழி சொல்லாவிட்டாலும் கண் குளிர உன்னைச் சேவிக்கும்படி கதவையாவது திறக்கலாகாதா? நீ கதவைத் திறவாமல் இருக்கும் போதும் எங்கும் உள்ள பெருமான் உன் உள்ளே புகுந்து உனக்குச் சுக அனுபவத்தைத் தருவது, வெளியே நறுமணம் கமழ்வதனால் எங்களுக்குத் தெரிகின்றது. இப்படி இன்புற்று இருக்கிற நீ உறக்கம் தெளிந்து சோம்பலை விட்டுக் கதவைத் திற என்பதாம்.

நோற்றுச் சுவர்க்கம் புகுகின்ற அம்மனை-இப்போது நோற்க வேண்டாதபடி நோன்பின் பயன் கை கூடப் பெற்றவள் என்பதாம். இனி எதிர்மறை இலக்கணையால், 'நீ எங்களோடு வந்து நோற்றுச் சுகம் பெற நினைப்பது அழகிது' என்று இகழ்ச்சியாக் கூறுகின்றார்களுமாம்.

கண்ணபிரானுடைய திருமாளிகைக்கு அடுத்த திருமாளிகையாய் இடைச்சுவர் அற்று இருப்பதால் கண்ணனுடன் இடைவீடின்றிச் சுக அனுபவம் செய்யும்படி நீ நோற்ற நோன்பு என் கொல்? என்பதாம்.

சுவர்க்கம்-சுகம், புகுகின்ற-என்ற அடைமொழி-உள்ளே கிருஷ்ணானுபவ சுகம் நிகழுவதைக் கூறும். அம்மனாய் ! என்ற விளியால், நீ இங்ஙனம் தனியே சுக அனுபவம் பண்ணுவது உன் பெருமைக்குப் பொருந்தும் அத்தனை அன்றித் தோழமைக்குத் தகாது

என்பது விளங்கும். அம்மனை>அம்மனாய்-ஈறுதிரிந்த விளி ; தாயே! என்று பொருள்.

மாற்றமும் தாராரோ வாசல் திறவாதார்-நீ வாயைத் திறவா தொழியினும் கதவையாகிலும் திறக்கலாகாதோ? என்பதாம். உன் உடம்பைக் கண்ணனுக்குத் தந்தால், உன் பேச்சை எங்களுக்குத் தரலாகாதோ?

முதல் அடியில் 'அம்மனாய்' என முன்னிலைப்படுத்தி விளித்தமைக்கு ஏற்ப, 'மாற்றமும் தாராயோ வாசல் திறவாதாய்' என முன்னிலையாக அன்றோ கூற வேண்டும். படர்க்கையாகக் கூறியுள்ள இது பொருந்துமாறு எவ்வாறு எனில், 'ஓரிடம் பிறஇடம் தழுவலும் உளவே' (நன்னூல்) என்பது இலக்கணம் ஆகலின் இது பொருந்தும். எனவே இது முன்னிலைப் படர்க்கையாகும்.

கும்பகர்ணன்-சுமாலியின் மகளான கைகசியின் இரண்டாம் மகன் ; இராவணனது தம்பி; இவன் பிரமனை நோக்கிக் கடுந்தவம் செய்து அழியாவரம் பெற எண்ணினன். ஆனால் தேவர்களின் விருப்பப்படி பிரமனது தேவியாகிய கலைமகள் இவன் நாவில் நின்று 'பல ஆண்டுகள் உறங்கும் வரம் வேண்டும்' என்று கேட்குமாறு செய்தாள். அதனால் இவன் 6 மாதம் உறங்குவதும் 6 மாதம் விழிப்பதுமாக வாழ்ந்துவந்தான்.

கும்பகர்ணன் இவளுக்குத் தோற்றுத் துயில் தருவது எவ்வாறு எனில், இவளும் இவனும் கூடி, 'நாமிருவரும் உறங்குவோம் ; உறக்கத்தில் தோல்லி அடைந்தோர் உறக்கத்தை விட்டுவிட வேண்டியது' என்று பந்தயம் கூறி உறங்க, அதில் அவன் தோல்வி அடைந்து உறக்கத்தை விட்டிட அதையும் இவள் கைப்பற்றினாள் என்ற கவி மரபுக் கேற்ப சாதுரியமாகக் கூறப்பட்டுள்ளது.

'பரசுராமரை வென்று இராமபிரான் அவர் கையில் வில்லை வாங்கியது போல, நீயும் அவனை வென்று நித்திரையைக் கைக் கொண்டாயோ? அவனதோ துயில்- உன்னதோ பெருந்துயில் ; என்பது ஆறாயிரப்படி. கூற்றம்-உடலையும் உயிரையும் வேறு கூறாக்குபவன் ;

இவ்வாறு கூறக் கேட்ட அவள் தான் உணர்ந்தமை புலப்பட சோம்பல் முரித்தாள். அது கண்ட இவர்கள் 'ஆற்ற

அனந்தலுடையாய் ' என அழைக்கின்றனர். அவள் தங்கள் குழுவில் வந்து கூடினால் நவரத்தின மாலையில் நாயகக்கல் அழுத்தியது போலாகும் எனக் கருதி அருங்கலமே ! என்கின்றனர்.

இது கேட்ட அவள் துணுக் கென்று வரப்புறப்பட, இவர்கள் 'தேற்றமாய் வந்துதிற' என்கின்றனர். புறப்பட்ட மேல் நிலங்களில் நின்று தடுமாறாமல் தெளிந்து வந்து இழிந்து திற என்றபடி.

'நம்மால் போற்ற' -என்றது 'நாம் போற்ற' என்றபடி. கும்பகரணன்-குடம் போன்றது காதுகளை உயைவன் எனப் பொருள்படும்.

<u>பேயாழ்வாரை உணர்த்தும் பாசுரம் இது:</u>

முதலாழ்வார்களில் பொய்கை பூதத்தாழ்வார்கள் புற, அகவிளக்குகளை ஏற்ற, பேயாழ்வார் அவ் ஒளியில் 'திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன்' என்று பாடுகிறார். முதல் இருவரும் நோற்றதன் பயனாகப் பேயாழ்வாரும் சொர்க்கத்தைக் கண்டார் என்பது தெளிவு, நாற்றத் துழாய்முடி நாராயணன்-இவருடைய பாசுரங்கள் திருத்துழாய் மயமாகவே இருக்கும். 'பொன்தோய் வரை மார்பில் பூந்துழாய்' என்பது. முடிவு பாசுரத்திலும் 'தண்குழாய்த்தார் வாழ்வரை மார்பன்' என்றார். இடையிலும் பல பாசுரங்கள் காண்க. இப்பாட்டின் நடுவில் இராமபிரானுடைய திவ்விய சரித்திரம் ஒன்றை ஆண்டாள் அமைத்தது பேயாழ்வாருடைய திருவந்தாதியின் நடுவில், 'அவனே-இலங்காபுரம் எரித்தான் எய்து,' என்றும் 'எய்ததுவும் தென் இலங்கைக்கோன் வீழ ' என்றும் அருளிச்செய்தது நன்கு பொருந்தும். அருங்கலமே-பெருமானது திருவருளை மிக அருமையாகப் பெற்ற சத்பாத்திரமே ! என்றபடி. பாசுரம் தொடங்கும் போதே 'திருக்கண்டேன் பொன் மேனி கண்டேன்' என்று ஆனந்தமாகத் தொடங்கப்பெற்ற பகவத் கிருபைக்கு ஆளானவர் மற்றொரு ஆழ்வாரில்லையே. தேற்றமாய் வந்து திற-உம்முடைய திருநாமமே பேயார் ; பேய்த்தனமாக வராமல் தேறிவந்து திறப்பதாக என்கிறார்.

**உள்ளுறை: அருங்கலமே! எம்பெருமானாரைப் போலே, பகவானையே உபாயமாகப் பற்றியிருக்கும் பாகவதர் ஒருவரை உணர்த்துதல். பாகவதருக்கு நித்திரை-இதர விஷயங்கள் ஒன்றையும் கவனியாமை.**

## பதினோராம் பாசுரம்

கற்றுக் கறவைக் கணங்கள் பலகரந்து
செற்றார் திறலழியச் சென்று செருச் செய்யும்
குற்றம் ஒன்றில்லாத கோவலர்தம் பொற்கொடியே
புற்றர வல்குல் புனமயிலே போதராய்
சுற்றத்துத் தோழிமார் எல்லாரும் வந்து நின்
முற்றம் புகுந்து முகில்வண்ணன் பேர்பாடச்
சிற்றாதே பேசாதே செல்வப் பெண்டாட்டி நீ
எற்றுக் குறங்கும் பொருள் ஏலோ ரெம்பாவாய்.

(பொருள்) கன்றுகளோடு கூடியவான பல பசுக்களின் கூட்டங்களைக் கறந்து, பகைவர்களுடைய வலிமை கெடும்படி போய்ப் போரைப் புரிகின்ற ஒருவகைக் குற்றமும் இல்லாத இடையர்களுடைய அழகிய கொடி போன்றவளே ! புற்றிலே வசிக்கின்ற பாம்பின் படம் போன்ற அல்குலை உடைய, புனத்திலே வாழும் மயில் போன்ற சாயலை உடையளே ! எழுந்து வருவாய். செல்வத்தையுடைய பெண்தன்மையை ஆள்பவளே ! உன்னுடைய முன் வாசலிலே உறவு முறையுடைய தோழிகள் யாவரும் வந்து புகுந்து மேகம் போன்ற திருநிறத்தையுடைய கிருஷ்ணனது திருநாமத்தை (வாயினால்) பாடவும், (உடம்பு) அசையாமலும், மறு மொழிசொல்லாமலும் நீ உறங்குகின்ற செயல் எந்தப் பயனை எண்ணி?

(சிறப்புப் பொருள்) குலத்தாலும் (கோவலர் தம் பொற் கொடியே) வடிவாலும் (புற்றரவல்குல் புனமயில்) குணத்தாலும் (செல்வப் பெண்டாட்டி) ஆகிய எல்லாவற்றாலும் மேன்மை பெற்றிருப்பாள் ஒருத்தியை எழுப்புகிறார்கள்.

உனது உறவு முறையார், தோழிமார் என்னும் பிரிவில் ஒருவர் தப்பாமல் அனைவரும் திரண்டு வந்து எம்பெருமான் திருநாமங்களைப் பாடா நிற்க, நீ உடம்பிலும் வாயிலும் அசைவின்றி இவ்வாறு கிடந்துறங்குவது என்ன பயனைக் கருதியோ அறியோம் என்கின்றனர். முதல் இரு அடிகள் கோவலர்க்கு அடைமொழி.

கற்றுக் கறவைக் கணங்கள் -கண்ணன் தொடுதலால் (ஸ்பரிசம்) இளமை மாறாமல் இருக்கிற கறவைக் கணங்கள். கன்று+கறவை+கற்றுக் கறவை. கணங்கள் பல-கறவைகள்

தனித்தனியே எண்ணமுடியாமையே அன்றி, அவற்றின் திரள்களும் எண்ணமுடியா என்பதாம்.

செற்றார் திறலழிய-கோவலர்க்கும் பகைவர் உளரோ? எனின் உளர். கண்ணபிரானுடைய மேன்மையைப் பொறுக்காதவரெல்லாம் இவர்களுக்கும் பகைவராவர். சென்று செருச் செய்யும்-எதிரிகள் வந்தால் போர் செய்வோம் என்று இராமல் அவர்கள் இருந்த இடத்திற்குச் சென்று போரிடல் என வீரம் குறித்தவாறாம். இராமபிரானின் வீரம் போன்றது இவர்கள் வீரம். 'சென்று அங்குத் தென்னிலங்கை செற்றாய்' என்றதும் நோக்குக. 'செருச் செய்யும் குற்றம் ஒன்றில்லாத' என்ற தொடர் தழிஞ்சி என்னும் புறத்துறையைக் குறிக்கும். அதாவது பகைவர் புறமுதுகிடும் போது போர் செய்யாமல் விடுதல். பகைவர் நிராயுத பாணியாய் இருக்கும் போது அவரை அழிக்க நினையாமை. கோவலர் தம் பொற்கொடியே-ஜனகராஜன் திருமகள் ஜனககுலத்திற்குப் புகழ்படைத்தது போல, இவள் கோவலர் குடியை விளக்கம் செய்பவள் என்பதும், ஒரு கொழு கொம்போடு அணைந்தன்றி நிற்க மாட்டாத கொடிபோல ஒரு கணவனோடு சேர்ந்தன்றித் தரிக்க மாட்டாதவள் என்பதும் புலப்படும். இதனால் எங்களோடு கூடி, உனக்குக் கொழு கொம்பான கண்ணனைச் சேரப்பாராய் என உணர்த்தியவாறாம்.

புற்றரவு அல்குல்-வெளியில் சென்று திரிந்து புழுதிபடைத்த உடம்புடன் இருத்தல் அன்றியே, தன் இருப்பிடம் தன்னில் கிடக்கும் அரவரசின் படமும் கழுத்தும் போல ஒளியையும் அகலத்தையும் அல்குலையும் உடையவளே ! என்றபடி. இவர்கள் பெண்களாக இருந்தும் இவ்வாறு வருணனை செய்தது, நெஞ்சினால் ஆண்மை பூண்டமையால் என்க.

**'கண்ணிற் காண்பரேல் ஆடவர் பெண்மையை அவாவும் தோளினாய்'** என்பது கம்பராமாயணம்.

**'வாராக வாமனனே அரங்கா வட்டநேமி வலவா**
**ராகவா உன்வடிவு கண்டால் மன்மதனும்மட**
**வாராக ஆதரஞ் செய்வன்'** -திருவரங்கத் தந்தாதி.

அல்குல் - தொடை இடுக்குக்கும் அரைக்கும் இடையிலுள்ள இடம்.

புனமயிலே-தன் நிலத்திலே நின்ற மயிலினுடைய தோகை போன்ற கூந்தல் கற்றையை உடையவளே ! என்றபடி. 'பொற்கொடியே'

'புனமயிலே' என்பவற்றால் சமுதாய சோபையும், 'புற்றரவல்குல்' என்பதால் அவயவ சோபையும் கூறப்பட்டன. 'புனமயிலே போதராய் !' என்ற சொல்லமைதியால் 'புனத்தை மயில் சிறப்பிப்பது போல நீ இப்பெண்களாகிய வனத்தைச் சிறப்பிக்க வாராய்' என விளித்தவாறாம் என்க.

நான் புறப்பட மற்றெல்லாரும் வந்தாரோ? என்று அவள் கேட்க, சுற்றமும் தோழியரும் எல்லாரும் வந்து நின் முற்றம் புகுந்தோம் என்கின்றனர். 'புனமயிலே ! முகில் வண்ணன் பேர்பாட, நீ எற்றுக்கு உறங்கும் பொருள்' -என இயைத்து, மயில், முகிலின் பெயரைக் கேட்டவுடனே களித்துக் கூத்தாட வேண்டி இருக்க, நீ இங்ஙனே கிடந்துறங்குவது ஏன்?என வினவுகின்றனர் என்பதாம்.

சிற்றாதே -சிற்றல்-சிதறுதல் ; அங்கங்களை அசைத்தலும் செய்யாமல் என்றபடி.

பூதத்தாழ்வாரை உணர்த்தும் பாசுரம் ஆகும். குற்றம் ஒன்றில்லாதவர் முதலாழ்வார்க்கே பொருந்தும். தாய் வயிற்றில் பிறவாதவர். அவர்களுள் பொற்கொடியே-கோல் ஓடும் கொழுந்ததே போன்றதே மால்தேடி ஓடும் மனம் என்கிற பாசுரத்தினால் தம்மைக் கொடியாகச் சொல்லிக் கொண்டவர் இவர். செற்றார் திறலழியச் சென்று செருச் செய்யும்-தேசமெங்கும் திரிந்து பகவத் விரோதிகளை அழிக்க வேணும் என்னும் பொருளை 'எண்டிசையும் பேர்த்த கரம் நான் குடையான் பேரோதிப் பேதைகாள் தீர்த்தகர ராமின் திரிந்து' என்னும் பாசுரத்தால் வெளியிட்டவர் இவரே. புற்றவரல்குல் என்பது இடையழகை வருணிப்பதாகும். உள்ளுறையில் இடையழகாவது பக்தியின் பெருமை. ஞானம்பக்தி விரக்தி என்ற மூன்றில் பக்தியானது இடைப்பட்டதாதலின் இடையழ கென்பது பக்தியின் அழகே ஆகும். இவர் தம் திருவந்தாதியை முடிக்கும் இடத்து 'என்றன் அளவன்றால் யானுடைய அன்பு' என்றே முடித்தார். புனமயிலே ! என்ற விளி இவருக்கு மிகவும் பொருந்தும். சோலையில் மயில் வாழும். இவர் தோன்றிய தலமோ திருக்கடல் மல்லை. அதைப்பாடிய கலியன் 'கடிபொழில் சூழ்கடல் மல்லை' -என்றே பலமுறை பாடியுள்ளார். சுற்றத்துத் தோழிமார்.................இவருக்குப் பொய்கையாரும் பேயாரும் சுற்றத் தவர்கள்; மற்றை ஆழ்வார்கள் தோழிமார். முகில் வண்ணன் பேர்பாட-முந்துற முன்னம் முகில்

வண்ணன் பேர் பாடினவர் இவரே. 'உலகேழும் முற்றும் விழுங்கும் முகில் வண்ணன்-ஏத்தும் என்நெஞ்சு.' என்ற இவர் பாசுரம் காண்க. புனமயில் முகில் வண்ணனைத் தானே பாடும்.

உள்ளுறை: 'ஈஸ்வரனே உபாயமும்' என்று இருப்பவர்கள் ஆதரத்துக்கு விஷயமாகும்படி மேன்மை பெற்ற பாவத உத்தமரை உணர்த்துதல். கற்றுக் கறவை........கறந்து - குடிகுடியாக வந்தடைந்த சீடர்களுக்கு ஞான உபதேசம் செய்து. நீ உறங்கும் பொருள் எற்றுக்கு-எங்களையும் ஸ்ரீ கிருஷ்ணானநு பவத்திற்கு உடன் சேர்த்துக் கொள்ளாமல் அகற்றுவது பயனோ?இன்னும் சம் சாரிகளைத் திருத்துவது பயனோ? கற்றுக்கறவை........ குற்றமொன்றில்லாத-என்றதால் பிறந்த பிறப்புக்கு ஏற்ற தொழிலைக் கைங்கரியமாகச் செய்தலே சொரூபத்திற்குத் தக்கது என்பதாம்.

## பன்னிரண்டாம் பாசுரம்

கனைத்திளங் கற்றெருமை கன்றுக் கிரங்கி
நினைத்து முலை வழியே நின்றுபால் சோர
நனைத்து இல்லம் சேறாக்கும் நற்செல்வன் தங்காய்
பனித்தலை வீழநின் வாசல் கடை பற்றிச்
சினத்தினால் தென்னிலங்கைக் கோமானைச் செற்ற
மனத்துக் கினியானைப் பாடவும் நீ வாய் திறவாய்
இனித்தான் எழுந்திராய் ஈதென்ன பேருறக்கம்
அனைத்து இல்லத்தாரும் அறிந்தேலோ ரெம்பாவாய்.

(பொருள்) இளங்கன்றையுடைய எருமைகள் (பாலைக் கறவாமையால்) கதறிக் கொண்டு (தமது) கன்றுகளிடத்திலே மனம் இரங்கி (அக்கன்றை) நினைப்பதனால் முலைக்காம்பின் வழியாக நிலையாகப் பால் பெருக, (அதனால்) வீடு முழுவதையும் ஈரமாக்கி சேறு ஆக்குகின்ற மிக்க செல்வத்தை உடையவனது தங்கையே ! (நாங்கள்) பனியானது (எங்கள்) தலைமீது விழ, உனதுதலைவாசலைப் பிடித்துக் கொண்டு (தனது) கோபத்தினால் தென்னிலங்கைக்கு அரசனான இராவணனைக் கொன்ற (நினைக்கின்ற) மனத்துக்கு இனியனான ஸ்ரீராமனைப் பாடும் போதும் நீ வாயைத் திறவாமல் இருக்கிறாய். எல்லா வீட்டில் இருப்பவரும் துயிலுணர்ந்த பின்பும் பெருந்தூக்கமாகிய இது என்ன?(உறங்குதல் தகுதியன்று) இனியாவது எழுந்திராய்.

(சிறப்புப் பொருள்) நாட்டிலிருந்த போதும் காட்டிலிருந்த போதும் வேற்றுமை இல்லாமல் பெருமாளைப் பின் தொடர்ந்து நோக்கிக் கொண்டு திரியும் இளைய பெருமாளைப் போன்ற, கண்ணபிரானை அன்றி மற்றொருவரையும் அறியாமல் என்றும் அவனையே பின் தொடர்ந்து அவனிடம் மிகவும் அன்பு பூண்டிருப்பான் ஒருவனுடைய தங்கையாய்ச் சிறப்பு பெற்று இருப்பாள் ஒரு ஆய்ப் பெண்ணை உணர்த்தும் பாசுரம் இது.

நீண்ட நேரமாக நின் வாசல் கடையை நாங்கள் பற்றிக் கொண்டு இலங்கையை அழித்த சீரிய சேவகத்தை நாங்கள் எடுத்துப் பாடினாலும் நீ வாய் திறவாமல் கிடந்து உறங்குகிறாய்; இங்ஙனம் உறங்கலாமோ ?உன்னைக் காணாமல் நாங்கள் வருந்தித் தளர்ந்திருப்பதை நீ அறிந்து வைத்தும் இங்ஙனம் உறங்குவது உரியதன்று. இனிச் சீக்கிரமாக எழுந்து வாராய் என்கிறார்கள்.

இதில் முதல் இரண்டரை அடிகளால் இவள் தமையனுடைய செல்வச் சிறப்புக் கூறப்படுகிறது. அவன் எப்பொழுதும் கண்ணபிரானுடன் கூடித் திரிபவன் ஆதலால் பசு, எருமைகளைக் காலம் தவறாமல் கறக்க மாட்டான். அவை வகுத்த காலத்தில் கறக்கப் பெறாமையால் தமது முலைப்பால் மிகுதியைப் பொறுக்காமல் கடுக்கவும் அதைப் பற்றிச் சிந்திக்காமல் தொலைவில் கட்டப்பட்டுள்ள கன்றின் மீது தனது பாவபந்தத்தைச் செலுத்தித் தம் கன்றுகளை நினைந்து எருமைகள் கனைக்க அன்புப் பெருக்காலே காம்பினின்று தானாகச் சிந்துகிற பாலின் வெள்ளத்தை மிதித்து மிதித்து வீடெல்லாம் சேறாய் விடுகின்ற நற்செல்வன் இவளுக்கு உடன் பிறந்தவன் ; இவன் எப்போதும் கண்ணனை விட்டுப் பிரிந்து வாராமையால் கறப்பாரின்றி இங்ஙனம் ஆகிறது என்க. இப்படிப்பட்ட செல்வமுடையானுக்குத் தங்கையாய்ப் பிறந்தவளே ! என்று அவளை அழைக்கின்றனர். நற்செல்வன்- அழியும் இயல்புள்ள செல்வம் போலன்றி நிலைநின்ற செல்வமான கண்ணன் திருவடிகளில் நிரந்தர சேவையை உடையவன்.

'பால்சோர நனைத்து இல்லம் சேறாக்கும்' என்ற ஸ்ரீ ஆண்டாளின் இந்தக் கருத்தை ஒட்டியே கம்பன் பாட்டமைத்துப் பால் வீணாகாதபடி செய்த நயத்தை இங்கு ஒப்பு நோக்கி இன்புறலாம்.

'சேலுண்ட ஒன்கணாரில் திரிகின்ற செங்காலன்னம்
மாலுண்ட நளினப் பள்ளி வளர்த்திய மழலைப் பிள்ளை
காலுண்ட சேற்றுமேதிக் கன்றுள்ளிக் கனைப்பச் சோர்ந்த
பாலுண்டு துயிலப் பச்சைத் தேரைத் தாலாட்டும் பண்ணை'
(பாலகாண்டம், நாட்டுப்படலம், செய்.13)

கனைத்தல்-குமுறுதல் ; பசுக்கள் கிரமமான காலத்தில் கறக்கப்பெறா தொழியில் காம்பு கடுப்புற்றுக் கனைத்தல் இயல்பு என்க.

நின்று பால் சோர-மேகம் மழை பொழிய நினைத்தால் கடலிற் புகுந்து நீரை முகந்து கொண்டு வந்து பின்பு பொழிய வேண்டும். இக்கறவைகளுக்கு அவ்வருத்தமில்லை ; நினைவே ஊற்றாகப் பால்சுரக்கும் ஆதலால், அந்நினைவு மாறாமையால் திருமலையில் திரு அருவிகள் போன்று பால் மாறாதே பெருகும் என்க. 'பகவத் விஷயப் பொருள்கூறவேணும்' என்று ஒருவர் கேளாதொழியினும் கற்றுணர்ந்த பெரியோர், பிறர்க்குக் கற்றதை எடுத்துரைக்க வேண்டும் என்னும் அவா மிகுதியால் தாமே பகவத் விஷயார்த்தங்களை எடுத்துக் கூறுவது போலவும், அருச்சுனன் கேளாதிருந்த போதே கண்ணபிரான் கீதையைக் கூறத் தொடங்கியது போலவும் ஆயிற்றுக் கறவைகளின் நிலை.

உழைப்பினாலும், பிற தெய்வ உபாசனத்தினாலும் பெறும் செல்வம் நிலையின்றி அழியும். கண்ணன் எம்பெருமானை நொடிப் பொழுதும் பிரியமாட்டாதவனுடைய செல்வமாதலின் இளைய பெருமாளுடைய செல்வம் போலச் சிறப்புடையதாய் இருக்கும் என்பது தோன்ற, 'நற்செல்வன்' எனப்பட்டது. இப்படிப் பட்டவனுக்குத் தங்கையே ! என்றது உன் உடன் பிறந்தவன் பாதுகாக்க வேண்டிய கறவைகளை நோக்கினாலன்றோ நீ பாதுகாக்க வேண்டியோரை நோக்கப் போகிறாய் ; ஆதலால் காக்க வேண்டியவர்களைக் காவா தொழிவது உனக்குப் பிறவிக்குணம் ஆகும் என்று கூறினர் என்க.

மேலே பனிமழை பொழிந்து வெள்ளமிட, கீழே பால் வெள்ளமிட, நடுவே கண்ணனிடத்து மால் (பெருங் காதல்) வெள்ளமிட, தெப்பம் பற்றுவாரைப் போலே நின் வாசற்கடையில் தண்டியத்தைப் பற்றிக்கிடந்து வருந்துகிற நாங்கள் உய்யும்படி எழுந்து வாராய் என்பதாம்.

மனத்துக்கு இனியானைப் பாடவும்-ஸ்ரீராமனைப் பாடுவது ஸ்ரீகிருஷ்ணனைப் போலப் பெண்களை வருத்தாமையாலாம். மனத்துக்கு இனியான்-இத் தொடருக்கு நண்பர், அயலார், பகைவர் ஆகிய மூவகையினர் மனத்துக்கும் இனியவன் என்று பொருள் நயம் காணலாம்.

கங்கைக் கரையில் வாழ்ந்த குகன், முனிவர் இவர்கள் மனத்துக்கு இனியனாய் இருந்தான். பகையாய் வந்த சூர்ப்பணகை, வாலி, இராவணன் ஆகியோருக்கும் இனியனாய் இருந்தான். எவ்வாறெனில் மூக்கும் காதும் இழந்து அரற்றிய சூர்ப்பணகை,'போக்கினீர் என் நாசி போய்த்து என்?' என்றும், 'மேக்குயரும் நெடுமூக்கு மடந்தையர்க்கு மிகையன்றோ' என்றும், 'பிழை செய்தீரோ?' என்றும் கூறியது அவளது கொடிய மனத்துக்கும் இனியனாய் இருந்ததால் அன்றோ?

மார்பில் இராமபாணம் பாய்ந்து இராமனை ஏசலுற்ற வாலி, 'ஓவியத்தெழுத ஒண்ணா உருவத்தாய்' என விளித்துப் பின்னர் 'ஆவிபோம் வேலைவாய் அறிவு தந்தருளினாய் மூவர் நீ முதல்வன் நீ முற்றும் நீ மற்றும் நீ' -என்றும் போற்றியது வாலியின் மனத்துக்கு இனியனாய் இருந்ததால் அன்றோ?

முதல் நாள் போரில் தோற்ற இராணவனைப் பார்த்து இராவகன் 'இன்று போய்ப் போர்க்கு நாளைவா' என (உயிரை) நல்கினன் அன்றோ? அந்நிலையில் மாலியவானிடம் வந்து, 'நாசம் வந்துற்ற காலை நல்லதோர் பகையைப் பெற்றேன்' என்று சொல்லி, 'இராகவன் மேனி நோக்கித் தீயெனக் கொடிய வீரச் சேவகச் செய்கை கண்டால் நாயெனத் தகுது மன்றே காமனும் நாமும் எல்லாம்' -என்று கூறியதும், பகைவனும் கொண்டாடும் மனத்துக் கினியான் என்பதை விளக்கு மன்றோ?

மண்டோதரி தன் கணவனைக் கொன்ற இராமனிடத்துப் பெரும் பகைமை கொள்ள வேண்டி இருப்ப, அதற்கு மாறாக அழுது அரற்றும் போது, 'ஆராவமுதாய் அலைகடலில் கண்வளரும் நாராயணன் என்றிருப்பேன் இராமனை நான், ஓராதே கொண்டு அகன்றாய் உத்தமனார் தேவிதனைப் பாராயோ நின்னுடைய மார்பு அகலம் பட்டவெலாம்' என்று பேசியது, அவள் மனத்துக்கும் இராமன் சாட்சாத் நாராயணனாகி இனியன் ஆனதாலன்றோ?

இனித்தான் எழுந்திராய்-எங்களுடைய ஆர்த்தியைக் கண்டு எழுந்திருக்காவிட்டாலும் மனத்துக் கினியானுடைய பாட்டுகளைக் கேட்கவாகிலும் எழுந்திருப்பாயாக என்பதாம்.

ஈதென்ன பேருறக்கம்:-உறக்கம் உலகநிலையினது எனவும் தெய்வ நிலையினது என்றும் இருவகைப்படும். தமோ குணத்தினால் உறங்குகிற சம்சாரிகளின் உறக்கம் உலக நிலையினது. அனைத்துலகங்களினுடையவும் காவலைச் சிந்தனை செய்து கொண்டு உறங்குவான் போல் யோகு செய்யும் பெருமானுடைய நித்திரை தெய்விகமானது. இவ்இருவகையிலும் சேராமல் இருப்பதொரு மாறுபட்ட நித்திரையாய் உள்ளது உன் உறக்கம் என்கின்றனர்.

அனைத்து இல்லத்தாரும் அறிந்து-ஆய்ப்பாடியிலுள்ள பெண்கள் எல்லாரும் திரண்டுவந்து உன் மாளிகை வாசலில் நின்று கூப்பிட, நீ சிறிது பொழுதும் உணராமல் கிடக்க, இதனால் உனக்கு வரும் மதிப்பை அனைவரும் அறிய வேண்டும் என்று கிடக்கிறாய் ஆகில், அங்ஙனம் அறிந்தாயிற்று ; இனி உணர்ந்து வா, என்கிறார்கள்.

நற்செல்வன்: யசோதைப் பிராட்டியின் சகோதரர் கும்பர் ; இவருக்கு ஸ்ரீதாமா என்னும் மகனும் நப்பின்னை என்னும் மகளும் பிறந்து வளர்ந்தனர். ஸ்ரீதாமா பரம பாகவதன்; கண்ணனின் நிழல்போல் இருந்து கைங்கரியம் செய்பவன்.

பிரலம்பன் எனும் கம்சனால் ஏவப்பட்ட அசுரன் மாயத்தால் ஆயர் சிறுவனாக வடிவம் மாறிக் கண்ணனை, பலராமனைச் சமயம் பார்த்து அழிக்க வந்தான். கண்ணன் அவன் யாரென அறிந்தும் பணிவிடை செய்ய நியமித்தான். ஒரு நாள் ஆடுமாடுகளைக் காட்டில் மேயவிட்டு, பந்து விளையாடத் தொடங்கி இரு பிரிவாகப் பிரிந்தனர். பிரலம்பன் கண்ணன் பிரிவிலும், ஸ்ரீதாமா பலராமன் பிரிவிலும் சேர்ந்து ஆடினர். பாண்டீரகம் என்னும் ஆலமரத்தின் அடியில் விளையாடினர். தோற்றோர் வென்றோரைத்தோளில் தூக்கிக் கொண்டு அம்மரத்தை ஒரு சுற்று சுற்றிவர வேண்டும் என்பது பந்தயம். கண்ணன் குழு தோற்றது. எனவே இவர்கள் பலராமன் குழுவில் உள்ள ஒவ்வொருவரையும் தூக்க நேரிட்டது. பிரலம்பன் பலராமனைத் தூக்கிக் கொண்டு ஓடினான். திடீரென்று அசுர வேகத்துடன் ஓடுவது கண்ட பலராமன் அவன் தலையில் தன் கை

முட்டியால் ஓங்கிக் குத்தி அவனை அழித்தான். கண்ணன் பரமபாகவதனான ஸ்ரீதாமாவைத் தன் தோளில் தூக்கிச் சுற்றிவந்தான். இவனது பெருமையை உணர்த்தவே கோதையார் இப்பாசுரத்தில் 'நற்செல்வன்' என்று மகுடமிட்டார்.

பெரியாழ்வார் தமது திருமொழியில் (3:4:3) நற்செல்வனைப்பற்றி,

'சுரிகையும் தெறிவில்லும் கெண்டு கோலும் மேலாடையும்
தோழன்மார் கொண்டோட
ஒரு கையால் ஒருவன் தன் தோளை ஊன்றி '

-என்று அருளிச்செய்கிறார். முன் பாசுரத்தில் கறப்பதாகிற சாதிக்கேற்ற தொழிலைச் சொல்லி இதில் அது செய்யாதபடி சொல்லப்பட்டது. இதனால் உலகில் கர்மத்தைச் செய்வதில் மூழ்கி இருப்போர் சிலர், பகவத் கைங்கரியத்தைச் செய்வதாலே கர்மத்தைச் செய்ய அவகாசம் இல்லாமையால் அது செய்யாதிருப்பர் சிலர் என்பது விளங்குகிறது.

பொய்கை ஆழ்வாரை எழுப்பும் பாசுரம் இது: நாலாயிர திவ்வியப் பிரபந்தம் முதலாழ்வர்கள் மூவரில் முதல்வரான பொய்கையாழ்வரின் பாசுரங்களுடனே தொடக்கம். அவ்வாறு தொடங்கும்போது தொண்டையைக் கனைத்துச் சரிசெய்துகொண்டு பாடுவர் அதனால் 'கனைத்து' என்று செய்யுள் தொடங்குகிறது என்பர். தென்னிலங்கைக் கோமானைச் செற்ற-இத்தொடர் இவரது முதல் திருவந்தாதியில் வந்துள்ளது. தங்காய் என்பதால் இலட்சுமிக்கு மூத்தவள் மூதேவி-தங்கையான இலட்சுமி தாமரையிலிருந்து பிறந்தவள். இவரும் தாமரை மலரில் தோன்றியவர். நனைத்து இல்லம் சேறாக்கும் என்ற விசேடணமும் இவருக்கு வெகு அருமையாகப் பொருந்தும். இவர் 'பழுதே பலபகலும் போயின வென்று அஞ்சி அழுதேன்' என்று தாமே பேசினபடியே அழுதவராதலின் கண்ணநீர் கொண்டு நனைத்தில்லம் சேறாக்கினர் என்க. இவருடைய இல்லமான பொய்கை பெரும்பாலும் சேறாகவே இருக்கும் 'சினத்தினால்......... மனத்துக்கினியான்-முனிவர்களின் ஞானக் கண்ணுக்கும் இலக்காகாத ஒரு ஸ்ரீராம சரிதம் இவரது அகக் கண்ணுக்கு இலக்காயிற்று.

'பூமேய மாதவத்தோன் தாள் பணிந்த வாளரக்கன்
நீண்முடியை
பாதமத்தால் எண்ணினான் பண்பு'

இராவணன் பிரமனிடம் வரம்பெற தன் உருவை மறைத்து வர, பெருமான் அவன் முடிகளைக் காலால் உதைத்து வெளிப்படுத்தி வந்திருப்பவன் இராவணன் எனப்பிரமனுக்கு உணர்த்தினார் என்பது இங்கு அறிய வேண்டியது.

உள்ளுறை: பகவதனுபவம் பெற்ற பாகவத நிஷ்டரான பாகவதர் ஒருவரை உணர்த்துகின்றார்கள் என்பதாம்.

## பதின்மூன்றாம் பாசுரம்

புள்ளின் வாய் கீண்டானைப் பொல்லா அரக்கனைக்
கிள்ளிக் களைந்தானைக் கீர்த்திமை பாடிப்போய்ப்
பிள்ளைகள் எல்லாரும் பாவைக் களம் புக்கார்
வெள்ளி எழுந்து வியாழம் உறங்கிற்று
புள்ளும் சிலம்பின காண் போதரிக் கண்ணினாய்
குள்ளக் குளிரக் குடைந்து நீராடதே
பள்ளிக் கிடத்தியோ பாவாய் நீ நன்னாளால்
கள்ளம் தவிர்ந்து கலந்தேலோ ரெம்பாவாய்.

(பொருள்) பறவையின் உருவம் கொண்டுவந்த பகாசுரனுடைய வாயைப் பிளந்தவனும் (பிராட்டியைப் பெருமாளோடு இருக்க ஒட்டாமல் பிரித்துப்)பெரும் பொல்லாங்கு செய்த இராவணனுடைய (பத்துத்) தலைகளையும் மிகவும் எளிதாக அறுத்து (உறவினர்களுடன் ஒரு சேர) அழித்தவனுமான பெருமானது வீரசரிதங்களைப் பாடிக் கொண்டு (அதுவே தாரகமாகச்) சென்று (நாம் எழுப்பும்படி நம்மிலும்) பருவத்தில் சிறியவரும் உட்பட எல்லாச் சிறுமியரும் நோன்புக்கு என்று ஏற்பட்டுள்ள குறித்த இடத்திற்குச் சென்று சேர்ந்தார்கள். (என்று இவ்வளவு கூறிய பின்பும் உறங்குபவள் பொழுது விடிந்துவிட்டதோ? என்ன, அதற்கு எழுப்புபவர்கள் மறுமொழி சொல்கிறார்கள்) சுக்கிரன் உதித்து வியாழக் கிரகம் அத்தமித்துவிட்டது. (அன்றியும்) (கூட்டிலிருந்து வெளியே சென்ற) பறவைகளும் (இரைதேடுகின்ற இடங்களில் ஒலித்தன; தாமரைப் பூவையும் மானையும் ஒத்த கண்களை உடையவளே ! பதுமை

போன்றவளே! நீ நல்ல நாளில் (கண்ணனோடு சேர்ந்திருக்கும் பாக்கியத்தைப் பெறும் நாளில்) (கிருஷ்ண சரிதத்தை நினைத்துக் கொண்டு தனியே கிடப்பதாகிய) கபடத்தை விட்டு (எங்களோடும்) கூடி, உடம்பு வவ்வலிடும்படி துளைந்து விளையாடி நீராடாமல் படுக்கையில் கிடப்பாயோ? (இவ்வாறு கிடப்பது தகுதியன்று; ஆகையால் எழுந்திராய்)

(சிறப்புப் பொருள்) 'நம் கண்ணழகுக்குத் தோற்றுக் கண்ணன் தானே வரட்டும்' என்னும் எண்ணத்தோடு அப்பரமனுடைய வீர சரித்திரங்களைத் தியானித்த படி படுத்திருக்கும் பெண்மணியை, இதனால் எழுப்புகிறார்கள்.

"மனத்துக் கினியானைப் பாடவும்" என்று இவர்கள் சொன்ன பாசுரத்தை அயல் திருமாளிகையிலே கேட்டுக் கிடக்கும் ஒரு பெண்பிள்ளை, நம் அபராதம் தீர இவர்களுக்கு வார்த்தை சொல்லுவோம் என்று, "பெண்களே ! இங்கு இராமபிரானது பெருமையைச் சொன்னார் உண்டோ? என்ன 'இராமன் பெருமை கண்ணன் பெருமை மற்றும் பாஞ்சராத்திர ஆகமம் பற்றியும் சொன்னோம்' என்கிறார்கள் - என்பது ஆறாயிரப்படி விளக்கவுரை. அதாவது 'கீழ்வானம் வெள்ளென்று' என்ற பாட்டில் கண்ணன் வரலாறும், 'கனைத்திளங் கற்றெருமை' என்னும் பாட்டில் இராமபிரானின் பெருமையும் கூறப்பட்டன. 'புள்ளும் சிலம்பின காண்' என்ற பாட்டில் 'வெள்ளத்தரவில் துயிலமர்ந்த வித்தினை' என்ற அடியால் பாஞ்சராத்ர ஆகமம் பற்றிக் கூறப்பட்டது. அதிலே திருப்பாற்கடலிலே பெருமான், வியூகவடிவில், வாசுதேவ, சங்கர்ஷண, பிரத்யும்ன, அநிருத்தன் என்னும் 4 வகை வடிவத்தோடு பள்ளி கொண்டிருக்கிறான். பாஞ்சராத்திரத்திற்கு வியூகதத்துவமே அடிப்படையாகும்.

முன்பாட்டைப் போல இதிலும் இராமனது பெருமையையே சொன்னால் 'சொன்னதையே சொல்லுகின்றார்' எனக் கருதக் கூடும் என்று எண்ணித் தங்களுக்குப் பள்ளமடையான கிருஷ்ணாவதார சரிதையைக் கூட்டிக் கூறுகின்றனர். ஆயினும் மேலும் 'பொல்லா அரக்கனை' என்று தொடங்கி இராமனது பெருமையைக் கூறுவானென்?எனில், தங்களைப் போன்ற, பிராட்டியின் பிரிவு பொறுக்க மாட்டாதவருடைய வரலாறு என்று அதனையும் சேர்த்துக் கூறுகின்றனர் என்பதாம்.

இராவணன், உயிரையும் உடலையும் பிரித்தது போலப் பெருமானையும் பிராட்டியையும் ஓரிடத்தில் சேர இருக்க ஒட்டாமல் பிரித்த கொடியவன் ஆதலால், அவனது கொடுமையின் மிகுதியை நினைத்து, 'பொல்லா' என்று அவனுக்கு அடைமொழி கொடுக்கப்பட்டது. 'பொல்லா அரக்கன்' என்னும் சொல் நயத்தால், நல்ல அரக்கன் ஒருவன் உளன்-என்பது தானே விளங்கும். 'விபீஷணஸ்து தர்மாத்மா' -ஆகவே அவன் நல்ல அரக்கனாவான்.

'கிள்ளிக் களைந்தானை' -சிறிதும் வருத்தமின்றிக் களைந்தமை தோற்றும்.

'பிள்ளைகள் எல்லாரும் பாவைக் களம்புக்கார்' -முன்னதாக துயில் உணர்ந்தவர்களில் சிறிது வயது மூத்தவர்கள் மற்றவர்களை எழுப்பிக்கொண்டு வரும்போது, எழுப்பப்பட்டவர்கள் ஒன்று சேர்ந்து நோன்புக்குச் செல்கின்றனர் என்பதும், அவர்களும் மற்றவர்களை எழுப்பிக் கொண்டு போவார்கள் என்பதும் வெளியாகும். பாவைக்களம்-காத்யாயினியின் உருவத்தை மணலால் அமைத்து வைத்திருக்கும் இடம்.

வெள்ளி எழுதலே பொழுது விடிந்தமைக்கு அடையாளம் ; கோதையார் வாழ்ந்த காலத்து, வெள்ளி எழுதலோடு வியாழன் அத்தமித்தலும் ஒருங்கே நிகழ்ந்தது ஆதலால் அதனையும் சேர்த்துக் கூறினர். வெள்ளி-வெண்மை நிறம்; சத்துவ குணத்திற்கு உரியது. அஞ்ஞான இருள்நீங்கி நல்ல ஞானம் உதயமாகும் காலம் என்பது குறிப்பு. தேவகுரு எனப் போற்றப்படுபவரை 'வியாழம் உறங்கிற்று' என்று சொல்வது பொருந்துமா? எனின், அவர் சார்வாக மதம் (கடவுள் இல்லை என்னும் கருத்துடையது) பற்றிய நூலை எழுதியதால் அஞ்ஞானியானார் என்பதாம். இத்தொடர் கோதையாரின் காலத்தை நிர்ணயம் செய்ய உதவுகிறது என்பதை முன்னுரையில் கண்டோம்.

6 ஆம் பாசுரத்தில் 'புள்ளும் சிலம்பின' என்று கூறி, இத்தனை நேரம் கழிந்த பின்பு 13 ஆம் பாசுரத்திலும் அத்தொடரையே கூறியதால், அதனினும் இதற்கு வேறுபாடு விளங்க, இரை தேடும் இடங்களில் பறவைகள் ஆரவாரம் செய்வதைக் காட்டும் எனக் கொள்க. (அங்கு கூட்டில் இருந்த போது ஆரவாரம் செய்தன).

போதரிக் கண்ணினாய் இத்தொடருக்கு 1. போது - உலாவுகின்ற, அரி கண்ணினாய் மானினுடைய கண்போன்ற கண்ணை உடையவளே. 2. போது-மலர் ; குவளை மலரையும் மான் கண்ணையும் ஒத்த கண்ணையுடையவளே ; 3. அரி-வண்டு; பூவில் படிந்த வண்டு போன்ற கண் உடையவளே ! 4. அரி-பகைவர், மலரின் அழகுக்குப் பகையான கண்ணழகுடையவளே ! 5. தாமரை மலரின் அழகை அரித்தலை (கவர்தலை) உடைய கண் அழகை உடையவளே! என்று பல பொருள் கொள்ளலாம். பூவில் படிந்த வண்டை மகளிர் கண்ணுக்கு உவமை கூறும் மரபை

"தாட் கருங் குவளை தோய்ந்த தண்ணறைச் சாடியுள் தன்
வாட் கண்ணின் நிழலைக் கண்டாள் வண்டென
ஒச்சுகின்றான்."

என்னும் கம்பன் பாடலாலும் அறியலாம்.

குள்ளக்குளிர 'செக்கச் சிவந்து,' 'கன்னங்கறுத்து' என்பன போன்ற ஒருவகைக் குறிப்பிடைச் சொல். உடம்பு மிகவும் வவ்வலிடும்படி என்றவாறு. மார்கழி விடியலில் நீராடினால் குள்ளக் குளிரும் என்க.

நன்னாள்-காலம் கழியும் இயல்புடையது. இங்ஙனம் இருக்க இவ்வுலகில் நீ வெறுமனே கிடந்துறங்கி இந்நன்னாளை வீணாகக் கழிக்கப் பார்க்கின்றனையே! எனப் பரிதாபம் தோற்றக் கூறும் கருத்தறிக.

'வெள்ளி எழுந்து' என்ற இடத்து, எழுந்து-எழ என்றபடி. எச்சத்திரிபு. 'சாத்தன் வந்து பொன்னன் போனான்' என்பது போலும். 'சொல் திரியினும் பொருள் திரியா வினைக் குறை' -என்பது நன்னூல்.

இப்பாசுரத்தில், போதரிக் கண்ணினாய்! பாவாய் ! நீ நன்னாள் கள்ளம் தவிர்ந்து கலந்து குள்ளக் குளிரக் குடைந்து நீராடாதே பள்ளிக்கிடத்தியோ? என இயைத்துப் பொருள் கொண்டது-அடி மறி மாற்றுப் பொருள் கோளாகும்.

இனிமேல் 3 பாசுரங்கள் ஆண்டாளுக்குப் பிறகு தோன்றிய 3 ஆழ்வார்களை அடைவே உணர்த்தவன. இவருக்குப் பின்னர் அவதரிக்க இருப்போர் பற்றி முந்தியே ஆண்டாளுக்கு எங்ஙனே

தெரியும் என்று சிலர் ஐயுறுவரேல் அது ஞானநிலையில் இயலும் என்க.

இப்பாசுரம் கோதையார்க்கு அடுத்த தொண்டரப் பொடியாழ்வாரை உணர்த்துவது, போது அரிக் கண்ணினாய்-மலர்களை அரிப்பதிலேயே கவனம் செலுத்துபவரே ! என்றபடி. புஷ்ப கைங்கரியம் செப்பவரன்றோ இவர். பாவாய்-பதிவிரதையைப் பாவை என்பர். இவர் அரங்கன் ஒருவனைத் தவிர வேறு திருப்பதி எம்பெருமானை நெஞ்சிலும் நினையாதவர் ஆதலால். நன்னாளால்- இவர் அவதரித்ததும் மார்கழி மாதமே ஆதலால் நன்னாள் ஆகும். கள்ளம் தவிர்ந்து-'சூதனாய்க் கள்வனாகி, 'கள்ளமே காதல் செய்து,' கள்ளத்தேன் நானும் தொண்டாய்; என்றும் பல காலும் தமது கள்ளத்தைப் பேசிக் கொண்டவர் இவ் ஆழ்வார். இவரது வரலாற்றிலும் பொன் வட்டில் விஷயமான கள்ளம் இடம் பெற்றுள்ளது. அது தவிர்ந்து பகவத் கோஷ்டியில் கலந்தபடியை ஈற்றடி தெரிவிக்கிறது. இவர் 'கவளமால் யானை கொன்ற கண்ணனை' எனவும், திருப்பள்ளி எழுச்சியால் 'மாமுனி வேள்வியைக் காத்து அவபிரதம் ஆட்டிய அடுதிறல் அயோத்திஎம் அரசே' என்றும் கிருஷ்ண, இராமாவதாரங்களைப் பாடியுள்ளதும் பொருத்தம் ஆகும். பிள்ளைகள் எல்லாரும்-ஆண்டாள் தனக்கு முந்தின ஆழ்வார்கள் எல்லாரையும் சொன்னபடி.

உள்ளுறை: நமக்குச் சொரூப ஞானம் உண்டானால் அவன் தானே வருகிறான், 'நாமே எழுந்து செல்வது பொருந்தாது' என்றிருக்கும் பாகவதரை உணர்த்தும் பாசுரம் இது. 'போதரிக்கண்ணினாய்' என்று ஞானம் உடைமையைக் கூறியவாறு.

குள்ளக்குளிர.........பாவாய்-எம்முடன் கூடி நெஞ்சு குளிரும்படி பகவதனுபவம் செய்யாமல் தனியே கிடந்து பகவதனுபவம் செய்யலாமோ? இன்கனி தனி அருந்தான் என்றன்றோ இருப்பது என்று உணர்த்தியவாறு;

---

**" கண்ணாவான் என்றும் – மண்ணோர் விண்ணோர்க்கு**

**தண்ணார் வேங்கட விண்ணோர் வெற்பனே"**

**-திருவாய்மொழி -1:8:3**

## பதினான்காம் பாசுரம்

உங்கள் புழைக் கடைத்தோட்டத்து வாவியுள்
செங்கழுநீர் வாய் நெகிழ்ந்து ஆம்பல்வாய் கூம்பினகாண்
செங்கல் பொடிக் கூறை வெண்பல் தவத்தவர்
தங்கள் திருக்கோயில் சங்கிடுவான் போகின்றார்
எங்களை முன்னம் எழுப்புவான் வாய் பேசும்
நங்காய் ! எழுந்திராய் நாணாதாய் ! நாவுடையாய் !
சங்கொடு சக்கரம் ஏந்தும் தடக்கையன்
பங்கயக் கண்ணானைப் பாடேலோ ரெம்பாவாய்.

(பொருள்) உங்கள் (வீட்டுப்) புழைக்கடைத் தோட்டத்தில் இருக்கிற தடாகத்திலுள்ள செங்கழுநீர்ப்பூக்களானவை மலர்ந்து, ஆம்பல் மலர்கள் வாய்குவிந்தன காவிக்கல் பொடியில் தோய்த்த காஷாய ஆடையையும், வெண்ணிறமான பற்களையும் உடைய துறவிகள், தங்களுடைய கோயிலிலே சங்கிடும் பொருட்டுப் போகின்றார்கள். எங்களை முன்னே வந்து எழுப்பும் பொருட்டு வாயினால் சொல்லிப்போன நங்கையே! வெட்கமற்றவளே! நாவுடையவளே! சங்கு சக்கரங்களை ஏந்தியுள்ள பெரிய கைகளை உடையவனும் தாமரை போன்ற கண்களை உடையவனுமான கண்ணபிரானைப் பாடுவதற்கு எழுந்திரு (காண்-முன்னிலை அசை)

(சிறப்புப் பொருள்) ஆய்ச்சியர் திரளுக்கெல்லாம் தலைவியாய் நான் எல்லார்க்கும் முன்னே உணர்ந்து வந்து எல்லாரையும் எழுப்புவேன் என்று சொல்லி வைத்து அதனை மறந்து உறங்குவாள் ஒருத்தியை உணர்த்தும் பாசுரம் இது.

உணர்ந்த ஆயர்குலப் பெண்கள் எல்லாருமாகத் திரண்டு இவள் மாளிகை வாசலிலே வந்து நீண்ட நேரமாக நாங்கள் உன் வாசலில் வந்து நின்று துவண்டு நிற்க, நீ எழுந்திராமல் இருப்பது ஏன்? என பொழுதுவிடிய வேண்டாவோ எழுந்திருப்பதற்கு? பொழுது விடிந்தமைக்கு அடையாளம் என்ன? என்று அவள் கேட்க செங்கழுநீர் மலர்கள் அலர்ந்து, ஆம்பல் மலர்கள் குவிந்தமை அடையாளமன்றோ? என்று இவர்கள் சொல்ல அதற்குஅவள் ஆ! ஆ! உங்கள் மயக்கம் இருந்தபடி என்ன! நீங்கள் என் வாசலில் வந்த மகிழ்ச்சியின் மிகுதியால் உங்கள் கண்கள் அலர்ந்து நீங்கள் என் முகத்தைக் காணாது போனதால் வெள்கி, வெறுத்து உங்கள்

வாய்மூடிப் போனமையை இவ்வாறு நீங்கள் நினைத்துவிட்டீர்கள், இது உங்கள் மயக்கமே தவிர வேறு இல்லை என்ன அதற்கு இவர்கள் பேதையே தடாகத்தில் செங்கழுநீர், அலர்ந்து ஆம்பல்வாய் கூம்பினமையைச் சொன்னோம் காண் நாங்கள் என்ன, அதற்கு அவள் இரவு முழுவதும் வயல் எங்கும் உலவி அரும்புகளை மலர்த்துவதும், மலர்களை மூடுவிப்பதும் அன்றோ உங்களுக்குக் காரியம் என்ன, கேட்ட இவர்கள் கட்டும் காவலுமாய் உள்ள தோட்டத்து வாவிகளில் இருப்பதைச் சொன்னோம் காண் என்ன, அதற்கு அவள், அங்கும் நீங்கள் சென்றதாகக் கூற, காவல் நிறைந்த உங்கள் புழைக்கடைத் தோட்டத்து ஆழ்ந்த வாவியிலுள்ளபடியைச் சொல்லுகிறோம் என்றார்கள். வெளியில் நிற்கும் இவர்கள் இவளுடைய புழைக்கடைத் தோட்டத்து வாவியிலுள்ள மலர்களின் மாறுபாட்டை எப்படி உணர்ந்தனர் எனில், வெளியில் உள்ளவை அலர்ந்தும் குவிந்தும் இருக்கக் கண்டு உள் இருப்பவையும் அப்படியே இருக்க வேண்டும் என்று ஊகித்துக் கூறுகின்றனர்.

அதுகேட்ட அவள் வேறு அடையாளம் இருப்பின் சொல்லுங்கள் என்றாள். பகத் விஷயத்தில் ஈடுபட்டவராய், இதர பொருள்களில் வெறுப்பு உற்றவராய், காவி ஆடை அணிந்தவராய், வெற்றிலை முதலிய இன்பப் பொருள்களை வெறுத்திருப்பதால் வெளுத்த பற்களை உடையவராய் உள்ள சாத்விக சந்நியாசிகள் தங்கள் காலைக் கடன்களை முடித்து தங்கள் கோயில்களில் வழிபாடு செய்யச் சங்கு ஊதப்போவதையும் காணலாமே என்றனர் இவர்கள். மேலும் எங்களை எல்லாம் வந்து எழுப்புவதாகச் சொல்லி இன்னும் படுத்திருக்கிறாயே, கண்ணபிரானைப் பாடுவதற்கு எழுந்திருப்பாயாக என்றனர். நாணாதாய் - நீ எழுந்து வரவில்லையாயினும் பரவாயில்லை சொன்னபடி செய்திலோமே என்று நெஞ்சில் சிறிது வெட்கமும் கொண்டிலையே அம்மா! உன்னைப் போல் சுணை கெட்டவள் இவ்வுலகில் வேறு ஒருத்தியும் இல்லை என்றவாறு.

நாவுடையாய் - பாம்பணையானுக்கும் தன் பாம்புபோல நாஇரண்டு உளவாயிற்றுகண்ணனுக்கும். அப்பெருமானுடன் பழகுவதால் அப்படிப்பட்ட நாவைப் படைத்தாய்.

மற்றொரு பொருள் அவளது பேச்சாற்றலைப் புகழ்ந்து கூறுவதாகவும் ஆம். கேட்ட அவள், நான் செய்ய வேண்டியதென்ன?

என, சங்குசக்கரம் உடையனாய்த் தாமரை போன்ற திருக்கண் உடைய பெருமானுடைய புகழைப் பாட அழைக்கின்றோம் என்றனர். எம்பெருமான் அவதரித்தபோது சங்குசக்கரங்களுடன் பெற்றோர்க்குக் காட்சி தர, அது கண்ட அவர்கள் அஞ்சி, இவற்றை மறைத்துக் கொள் என்ன, கண்ணனும் மறைத்துக் கொண்டனன். இங்குஆய்ச்சியர் இவ்வாறு கூறக் காரணம் என்ன,? எனில், அவற்றை மறைத்தது பகைவர்களுக்காகவே அன்பர்களுக்கு அவை தோன்றத் தடையில்லை.

**நெய்த்தலை நேமியும் சங்கும் நிலாவிய**
**கைத்தலங்கள் வந்து காணீரே**

- என்று யாசோதைப் பிராட்டி ஆய்ப்பாடி பெண்களை அழைத்துக் காட்டியது இங்கு அறியத்தக்கது.

இப்பாட்டில் நங்காய் என ஒருமையாக அழைத்தற்கு ஏற்ப உன்றன் புழைக்கடை என்ன வேண்டியிருக்க உங்கள்புழைக் கடை என்றது மரபு வழுவமைதியாகும்.

சங்கிடுவான் போதந்தார் என்றும் பாடம் உண்டு ஈற்றில் பாட+ஏல்=பாடேல், தொகுத்தல் விகாரம்

திருப்பாணாழ்வாரை உணர்த்தும் பாசுரம் இது. இதில் நங்காய் நாணாதாய்! நாவுடையாய்! என்னும் மூன்று விளிகளும் இவருக்கு நன்கு பொருந்தும். லோகசாரங்கரின் தோள்மேல் அகங்காரம் இன்றி உட்கார்ந்து பவனி சென்றது நாணாதாய். அமலன் ஆதிபிரான் உவந்த உள்ளத்தனாய் மந்தியாய் வடவேங்கடம் இப்பாசுர அடிகளின் முதல் எழுத்து அஉம ஓம் என்னும் பிரணவமாகிறது. இவ்வாறு பொருள்பொதிந்த பாசுரங்களைப் பாடியதால் நாவுடையாய் என்பதாம் லோகசாரங்க முனிவரின் தோளின் மேல் ஏறிக் கொள்ள உடன் பட்ட குணபூர்த்தி ஆகும்.

கையினார் சுரி சங்கனல் ஆழியார் - என்று இவர் படினார். சங்கொடு சக்கரம் ஏந்தும் தடக்கையன். இவர் பாணர் குலத்தில் வளர்ந்ததால் கோயிலுக்குள் செல்ல முடியாமல் ஆற்றிலிருந்து சேவித்தார். இது இங்கு புழைக்கடை தோட்டத்து - எனப்பட்டது. இவரது சரிதையில் தொடர்புடைய லோகசாரங்க முனிவரின் தன்மையைக் காட்டுவது போல் உள்ளது செங்கல் பொடிக் கூறை முதலியன.

எங்களை முன்னம் எழுப்புவான் வாய் பேசும் நங்காய் - எழுப்புதல் தூக்கிக் கொள்வது. எங்களை - பாகவதர்களை பாண்பெருமானே! உம்முடைய முதல் பாசுரத்தில்! அடியார்க்கென்னை ஆட்படுத்த விமலன் என்னும் சொல் நயத்தை நோக்கும்போது பாகவதர்களை நீர் தோளின் தூக்கிக் கொண்டாடுபவர் போலத் தெரிகின்றது. உமது கதை அவ்வாறில்லை. பாகவதரான லோக சாரங்கமுனிவரின் தோளின் மீதேறி நீர் வந்ததாக உள்ளது. ஆகவே முந்துற முன்னம் பாகவதர்க்கு அடிமை என்று நீர்சொல்லிக் கொண்டது வாய்பேசும் அத்தனையே போலும் என்று வேடிக்கையாகக் கூறுகிறபடி.

<u>உள்ளுறை:</u> பாகவத சமுதாயங்களுக்கெல்லாம் முக்கிய மானவராய்ப் பலருக்கும் பகவத் சம்பந்தத்தை உண்டாக்கும் ஞான, பக்தி முதலியவற்றை உடைய பாகவதரை எழுப்புவது. நீங்கள் மகிழ்வதற்குக் காரணமான திருமந்திரத்திலே உள்ள நம - பதத்தால் பாரதந்திரியம் விளங்க (பரனுக்கு அடிமைப் பட்டிருத்தல்) சொந்தமுயற்சி ஒடுங்கிவிட்டது. பக்தியினால் நாம் எம்பெருமானுக்கு அடியவர் என்னும் ஞானம் உடையவராய் மகிழ்கிற பிரபன்ன அதிகாரிகளும் திருவாராதனத்துக்குப் போனார்கள் என்பது முதல் 4 அடிகளின் கருத்தாகும்.

## <u>பதினைந்தாம் பாசுரம்</u>

**எல்லே இளங்கிளியே! இன்னம் உறங்குதியோ?**
**சில்லென்று அழையேன்மின் நங்கைமீர் போதர்கின்றேன்**
**வல்லைஉன் கட்டுரைகள் பண்டே உன் வாயறிதும்**
**வல்லீர்கள் நீங்களே நானேதான் ஆயிடுக**
**ஒல்லை நீ போதாய் உனக்கென்ன வேறுடையை**
**எல்லாரும் போந்தாரோ? போந்தார் போந் தெண்ணிக்கொள்**
**வல்லானை கொன்றானை மாற்றாறை மாற்றழிக்க**
**வல்லானை மாயனைப் பாடேலோ ரெம்பாவாய்**

(பொருள்) என்ன ஆச்சரியம்! இளமையான கிளிபோன்ற பேச்சு இனிமை உடையவளே! இன்னமும் உறங்குகின்றாயோ? (என்று எழுப்பப் போனவர்கள் சொல்ல) பெண்களே! சிலுசிலு வென்று அழைக்காதீர்கள் (இதோ எழுந்து) வருகின்றேன் (என்று

எழுப்பபட்டவள் சொல்ல மீண்டும் எழுப்புகின்றவர்கள்) உனது கடுஞ்சொற்களினால் (நீ) சாமர்த்தியம் உடையவளாய் இருக்கிறாய் (என்பது நன்கு விளங்குகிறது), முன்னமே உனது வாயை அறிவோம் (என்ன-மீண்டும் எழுப்பப்பட்டவள், நீங்கள் தாம் சாமர்த்திய சாலிகள் நானே சாமர்த்திய சாலியாய் இருந்தாலும் இருக்கட்டும் (என்ன - மீண்டும் எழுப்புகிறவர்கள்) உனக் கென்று வேறுபாடு தனியே கொண்டிருக்கிறாயே இது என்? (என்று சொல்ல, அவளும்) எல்லாரும் வந்துவிட்டார்களோ? (எனவினவஇவர்களும்) வந்து விட்டார்கள், எழுந்து வந்து கணக்கிட்டுக்கொள், வலிய குவலயாபீடம் என்ற யானையைக் கொன்றவனும் பகைவரை எதிராக நின்று அழிக்க வல்லவனும் மாயனுமாகிய கண்ணபிரானைப்பாடும் பொருட்டு விரைவாக நீ எழுந்து வருவாய் (என்கிறார்கள்) (போதருகின்றேன் என்றும்பாடம்)

(சிறப்புப் பொருள்) எல்லாப் பெண்களுடைய கூட்டத்தையும் காணக் கருதிக் கிடப்பாள் ஒருத்தியை உணர்த்தும் பாசுரம் இது.

கீழ் 10 பாட்டிலும் நிகழ்ந்த வினாவிடைகள் இதில் வெளிப்படையாகக் காணப்படும் 6 முதல் 14 முடிய உள்ள 9 பாடல்களிலும் உணர்ந்துவோருடைய பாசுரம் ஒன்றே அன்றி, உறங்குவோருடைய ஆட்சேபிக்கும் கருத்துள்ள பாசுரம் ஒன்றும் தெளிவாகக் காணப்படவில்லை. அது சொல் தொடை நோக்கி அவதாரிகையாக எடுத்துரைக்கப்பட்டது. இப்பாடலில்.

முதலடி- எழுப்புவோரின் பேச்சு, இரண்டாமடி - உறங்குமவளின் பேச்சு

மூன்றாமடி-உணர்த்துவோரின் பேச்சு, 4 ஆம் அடி உறங்குபவரின் பேச்சு

ஐந்தாமடி-உணர்த்துவோரின் பேச்சு 6ஆம் அடியில் முற்பகுதி உறங்குபவளின் பேச்சு

மேல் முழுவதும் எழுப்புவோரின் பேச்சாக அமைந்துள்ளது.

## ஆறாயிரப்படி அருளிச் செயல்

திருப்பாவையாகிற இப்பாட்டிறே (இப்பாட்டன்றோ?) பகவத் விஷயத்தில் இருக்கும்படியெல்லாம் சிற்றஞ்சிறுகாலையில் சொல்லுகிறது. பாகவத விஷயத்தில் இருக்கும்படி எல்லாம் இப்பாட்டிலே சொல்லுகிறது என்பது.

பாகவதர்களால் ஏதேனும் ஒருபடியாகக் குற்றம் காட்டப்பெற்றவர்கள் அப்பாகவதர் திருவடிகளில் தலை சாய்த்து இக்குற்றம் அடியேனுடையது தான், மன்னித்தருள வேண்டும் எனப் பிரார்த்தித்துப் பொறுப்பித்தல்ஸ்ரீ வைணவலட்சண மாதலால், அவ்வாறே இப்பாட்டில் நானே தானாயிடுக என்று பிறர் கூறியகுற்றம் தன்னிடத்தே உள்ளதாகத்தான் இசைந்தமை கூறப்படுதலால், பாகவதலட்சணம் சொல்லப்பட்டது. திருப்பாவையாகிற இப்பாட்டிறே என்றதும் இப்பொருள் சிறப்பின் ஊற்றத்தாலேயே என்பது அறியத்தக்கது. (பகவத்லட்சணம் 29 ஆம் பாசுரத்தில் விளக்கப்படும்)

நங்காய்! எழுந்திராய் ... பங்கயக் கண்ணானைப்பாட என்று அயலகத்துப் பெண் பிள்ளையை எழுப்பினது கேட்ட ஒருத்தி, அந்தச்சொல்லின் இனிமையில் ஈடுபட்டுத் தன் மிடற்றினால்பாட, அவளை அந்தக் குரலின் இனிமையினால் எல்லே இளங்கிளியே! என்று சொல்லி எழுப்பினார்கள். நாணாதாய் நாவுடையாய் என்று அயலகத்துப் பெண்பிள்ளையை எழுப்பினவர்கள் இவ்வாறு சொல்லக் காரணம் இருக்க வேண்டும் என்று எழுப்பபட்டவள் பேசாதே கிடக்க, நாங்கள் வருவதற்கு முன்பு நீ உறங்கினாலும் உறங்கலாம் நாங்கள் இத்தனை பேரும் கிருஷ்ணனைப் பிரிந்திருக்கும் துன்பத்தாலே துவண்டு உன்னுடைய குளிர்ந்த நோக்கத்தைப் பெறுவது எப்போது என்று உனது வாசலிலே நிற்கையில் இன்னும் உறங்குதல் தகாது என்பவர் இன்னும் உறங்குதியோ? என்றார்கள் (ஏற்கெனவே 9 திருமாளிகையில் உள்ளாரை எழுப்பி வருமளவும் இவள் உறங்கிக்கிடந்ததால் இன்னும் உறங்குதியோ என்றனர்? இவர்கள் இவ்வாறு சொல்லியது தனது அனுசந்தானத்துக்குத் (நடைமுறை) தடையாய் இருந்ததால் படுத்திருப்பவள் சில்லென்றழையேன் மின் என்றாள். எங்கள் சொல் காதில்படுவதும் பொறுக்கமுடியாதபடி உனக்குவந்துள்ள பூர்த்தி என்? என்று எழுப்புகின்றவர்களுக்கு எண்ணமாக, படுத்திருப்பவள் நீங்கள் பெரியவர்கள் பேசாதிருந்தால் போதும் நான் வருகிறேன் என்று வெறுப்பாகக் கூறியதால், எழுப்புபவர்கள் நீ செய்வதெல்லாம் செய்து விட்டு எங்கள் மீது வெறுப்பாகச் சொல்லவும் வல்லை என்பது முன்னமே எங்களுக்குத் தெரியும் என்ன, சில்லென்றழையின் மின் நங்கை மீர்! போதர்கின்றேன் என்று நீ

வெட்டெனப் பேசவில்லையோ? என்று எழுப்பு வோர் சொல்ல, படுத்திருப்பவள் நம்முடைய வார்த்தையைக் கேட்டு மகிழ்பவள் நம்முடைய பேச்சும் அலட்சிய மாகும்படி கிருஷ்ணானுபவத்திலே ஈடுபட்டிருக்கின்றாளே என்று மகிழ வேண்டி இருக்க அது செய்யாதது உங்கள் மேலே அன்றோ குற்றம் என்று சொல்லிவிட்டு, சற்று ஆலோசித்து இல்லாத குற்றத்தை நம்மீது ஒருவர் ஏறிட்டுச் சொன்னாலும் அதை மறுத்துச் சொல்லாமல் நம்மதே குற்றம் என்று இசைவதே ஸ்ரீவைணவ இலட்சணம் என்ற ஞானம் பிறந்து <u>நானேதான் ஆயிடுக</u> என்று தன்குற்றமாக இசைகின்றாள். பல்லாயிரம் நூல்கள் பயின்றுஞான அனுட்டானங்களில் குறையாது விளங்கும் பெருமை உடையவர்க்கும் இத்தகைய சொரூபம் வாய்ப்பது அரிது என்பவர் பெரியோர்.

இனிச்செய்ய வேண்டியது என்? என்று உறங்குபவள் கேட்க உனக்கு என்று தனியே கிருஷ்ண அனுபவம் கூடுமோ? எங்களோடு வந்து சேருக என்ன, எல்லாரும் வந்திட்டார்களோ? என்று படுத்திருப்பவள் வினவ, எழுப்புகிறவர்கள், போந்தார் போந்து எண்ணிக் கொள், மாயனைப்பாட ஒல்லை நீ போதாய் என்கின்றனர்.

எல்லே - பொழுது விடிந்த பின்பும் உறங்குவது பற்றிய வியப்பைக் காட்டும். கீழ், குள்ளக்குளிரக் குடைந்து நீராடாதே! பள்ளிக்கிடத்தியோ? என்று எழுப்புகிறவர்கள் எழுந்திராய் பங்கயக் கண்ணானைப் பாட என்றும் எழுந்திராய் மாயனைப்பாட என்றும் இவ்வாறு கூறலாமோ? எனின் நீராடுதல் போலவே பங்கயக் கண்ணனாகிய மாயனைப் பாடுதலும் நோன்புக்கு அங்கமாதலால் ஆகும், அன்றியும் உள்ளுறையில் பாடுதலும் நோன்புக்கு அங்கமாதலால் ஆகும். அன்றியும் உள்ளுறையில் நீராடுதல் என்பது கண்ணனோடு சேர்ந்திடுத்தலே ஆதலாலும் தகும் என்பவர்.

போதருகின்றேன் - என்று ஓதுதல் பொருந்தாது, வெண்டளை பிறழும் திருமாலையில் நாவலிட்டுழிதர்கின்றோம் - என்று ஓதுவதுபோல இங்கும் போதர்கின்றேன் என்றே ஓத வேண்டும். உனக்கென்ன வேறுடையை என்ற பாடமே சிறந்தது - உனக்கு வேறு என்ன அதிசயத்தை நீ உடைத்தாய் இருக்கின்றாய்? என்று பொருள். திருவெம்பாவை 4 ஆம்பாடல் இதனோடு ஒப்புநோக்கத்தக்கது இதனை அடி ஒற்றியது.

திருமங்கையாழ்வாரை உணர்த்தும் பாசுரம். மென்கிளிபோல் மிக மிழற்றும் என்பேதையே என்று பல பாசுரங்களில் இவர்தம்மைக் கிளியாகச் சொல்லி கொண்டார் ஆதால் கிளியே! என்ற விளி இவர்க்குப் பொருந்தும்.

ஆழ்வார்களில் கடைக்குட்டி ஆதலால் இளங்கிளியே என்றது. அன்றியும் சொன்னதைச் சொல்வது கிளியின் இயல்பு - அது போல இவர் மாறன் பணித்த தமிழ் மறைக்கு மங்கையர் கோன் ஆறங்கம் கூற என்றபடி நம்மாழ்வார் அருளிய அருளிச்செயல்களை அடியொற்றி அருளிச்செய்ததாலும் கிளி என்பது பொருந்தும். கிளி அழகானது; இவரும் அழகான தோற்றம் உடையவர் என்பதைக் குருபரம்பரை மூலம் அறிய முடிகிறது. இவர் ஆழ்வார்களில் கடைசியாகத் தோன்றியதால் இவருக்கு முன்னால் பிறந்த ஆழ்வார்கள் எல்லாம் வந்து விட்டார்களா? என்று கேட்பதுபோல் எல்லாரும் போந்தாரோ என்பது அமைந்துள்ளது. வல்ஆனை கொன்றானை - ஆனையைக் கொன்றது பற்றி ஓர் ஆச்சரியமாக எடுத்துப்பேசினார் கலியன். கவளயானை கொம் பொசித்த கண்ணனென்னும்-முதலியன காண்க. மாற்றாரை மாற்றழிக்க வல்லவன் - மாறுபட நடந்த இந்திரனுக்கு ஒரு தீங்கும் செய்யாமல் (கோவர்த்தனத்தைக் குடையாகப் பிடித்து) அவனது கொழுப்பை அடக்கினன். இக்கதையில் ஊற்ற முடைய கலியன், பெரிய திருமொழியை முடிக்கும் போது, குன்றமெடுத்து ஆநிரை காத்தவன் தன்னை என்றார். இறுதிப்பிரபந்தமாகிய திடுநெடுந்தாண்டகத்தை முடிக்கும் போதும் குன்றெடுத்த தோளினானை என்றே முடித்தார்.

மாயனைப் பாடுகைக்கு ஒல்லை நீ போதாய் - என்று அன்வயம் செய்க.

<u>உள்ளுறை:</u> பாகவத கோஷ்டியைக் காண விருப்புற்றிருப்பார் ஒருவரை உணர்த்துதல். ஸ்ரீ வைஷ்ணவர்களை விட்டிட்டுத் தான் தனியே பற்றுகின்ற பகவத் விஷயம் தேவதாந்தரத்தோடு ஒக்கும் என்ற கருத்தும் இதில் தோன்றும். எல்லே இளங்கிளியே என்றதால் பாவதர்களைக் காண்பதும் அவர்கள் குரலைக் கேட்பதும் மிகவும் சிறந்தது என்கிறது. இன்னம் உறங்குதியோ-பாகவதரிடம் கலக்காமல் இருப்பது தவறு என்கிறது. சில்லென்றழையேன்மின் என்றதால் வைணவர்கள் விஷயத்தில் கடுமையாக வார்த்தை சொல்லாகாது என்கிறது. நங்கை மீர் போதர்கின்றேன்-என்றதால் அவர்களிடம்

கௌரவமாகவே வார்த்தை சொல்ல வேண்டும் என்கிறது. கட்டுரைகள் என்றதால் அவனடியார்கள் கடிந்து பேசுவதும் உத்தேசியம் என்பது உணர்த்தப்படுகிறது. வல்லீர்கள். . .

நானேதானாயிடுக பிறர் குற்றத்தையும் தம்முடையதாக இசைவதை வைணவ லட்சணம் எனப்பட்டது. ஒல்லைநீ போதாய் - வைணவர்களைக் கணப்பொழுதும் பிரிந்திருப்பதும் கூடாது என்கிறது. உனக்கென்ன வேறுடையை பகவதனுவமும் பாகவதப் பீரீதிக்கு உறுப்பு என்கிறது. எல்லாரும் போந்தாரோ - வைணவர். அனைவரும் உத்தேசியர் என்கிறது. போந்து எண்ணிக்கொள் ஒருவர் குறைந்தாலும் அனுபவதிற்குக் குறை என்கிறது. வல்லானை - தங்களுக்கு ஏற்றபகவத் விஷயத்தைப்பாடி வைணவர்களை மகிழச்செய்வதே பாகவதகிருத்தியம் எனப்பட்டது.

## பதினாறாம் பாசுரம்

* நாயகனாய் நின்ற நந்தகோபனுடைய
கோயில் காப்பானே! கொடித்தோன்றும் தோரண
வாயில் காப்பானே! மணிக்கதவம் தாள் திறவாய்
ஆயர் சிறுமியரோமுக்கு அறைபறை
மாயன் மணிவண்ணன் நென்னலே வாய் நேர்ந்தான்
தூயோமாய் வந்தோம் துயிலெழப் பாடுவான்
வாயால் முன்னம் முன்னம் மாற்றாதே அம்மா! நீ
நேய நிலைக்கதவம் நீக்கேலோ ரெம்பாவாய்.

(பொருள்) தலைவராக இருக்கின்ற ஸ்ரீநந்தகோபாருடைய அரண்மனையைக் காப்பவனே! கொடிகள் காணப்படுகின்ற தோரணங்களை உடைய வாயிலைக் காப்பவனே! இடைச் சிறுமியரான எங்களுக்காக மணிகள் கட்டிய கதவின்தாளைத் திறப்பாயாக மாயனும், நீலரத்தினம் போன்ற திருநிறத்தை உடைவனுமான கண்ணன், ஒலிக்கின்ற பறையைக் (கொடுப்பதாக) நேற்றேவாக்குக் கொடுத்திருக்கின்றான். திருப்பள்ளியின்று எழும்படி பாடுவதற்காக பரிசுத்தர்களாக வந்துள்ளோம் சுவாமி! வாயினால் முதன் முதலில் தடுக்காதே, நீ (ஒன்றோடு ஒன்று) சேர்ந்ததான தன்மையை உடைய கதவைத் திறப்பாயாக.

(சிறப்புப்பொருள்)

கீழ்ப்பத்துப் பாட்டுகளினால் 10 பெண்களை உணர்த்தினபடியைக் கூறியது- திருவாய்ப்பாடியிலுள்ள பஞ்சலட்சம் குடிப் பெண்களையும் உணர்த்தியதற்கு இனங்குறித்தலாம் மக்கள் வாழும் பகுதியில் செல்வம் கொழிக்க வேண்டும். எனவே அங்குவாழும் பெண்களின் இளமைக்கோ அழகிற்கோ குறைவேது? இவ்ஆயர்பாடிப் பெண்கள் செல்வச்சிறுமியர்கள் அவர்களுக்குப் பொருள் செல்வமும் இறையருளும் ஒருங்கே பெற்றது அவர்கள் பேறு. எனவே அவர்கள் நேரிழை கொண்டவர்களாய், வாசநறுங்குழல் ஆய்ச்சியராய் திங்கள் திருமுகத்திராய் விளங்கினர். இதுமுதல் 7 பாசுரங்கள் ஆய்ச்சிறுமியர் எல்லாரும் திரண்டபின்பு கண்ணனை எழுப்பமுனைந்து, அங்கு உள்ளவர்களையும் கண்ணனையும் துயில் எழுப்புவதைக் காட்டும். முந்துற முன்னம் உணர்ந்தபெண்கள் உறங்குகிற மற்றபெண்களையும் உணர்த்தித் தம்முடன் கூட்டிக் கொண்டு எல்லாரும் பெருங்கூட்டமாகத் திரண்டு ஸ்ரீ நந்தகோபர் திருமாளிகை வாசலில் சென்று சேர்ந்து, திருக்கோயில் காப்பானையும் திருவாசல் காப்பானையும் நோக்கித் திருவாசல் காப்பு நீக்க வேண்டும் என்று இரக்கும்படியைக் கூறும் பாசுரம் இது.

கீழ் இரண்டாம்பாட்டில் செய்யாதன செய்யோம் என்று இவர்கள் செய்து கொண்ட உறுதிப்பாடு நடைமுறைப் படுத்தப்படுகிறது. இதில் எம்பெருமான் உகந்தருளிய திருப்பதிகளில் உட்புகும் போது, துவாரபாலகரிடத்து அனுமதி பெற்றுப் பின்பு புகவேண்டும் என்று சாத்திரங்களில் கூறப்பட்டுள்ள கருத்து ஆயர்சிறுமியராகிய இவர்களால் அறியப்பட்டது அன்று எனினும் ஞானிகளின் அனுட்டானம் இவர்களிடம் -வைணவக்குடும்பத்தில் வந்தவர்களாகையால் இயற்கையாகவே காணப்படுகிறது.

“வேதம் வல்லார்களைக் கொண்டு விண்ணோர் பெருமான் திருப்பாதம் பணிந்து“ என்றார் அன்றோ நம்மாழ்வாரும்.

இப்பாட்டில் முதலடி கோயில் காப்பானையும், இரண்டாமடி-வாசல் காப்பானையும் உணர்த்துகின்றது. கோபுரவாசல் போன்ற வெளிப்புறத்து வாசலைக் காப்பவன் - கோயில் காப்பான் என்றும், கொடிக்கம்பத்தின் அருகிலே உள்ள வாசல் போன்ற உட்புறத்து வாசலைக் காப்பவன் வாசல் காப்பான் என்றும் இங்குக் குறிப்பிடப்படுகின்றன.

நாயகனாய் நின்ற - என்பதை, கோயில்காப்பானுக்கு அடைமொழி ஆக்கினும் ஆகும். தமக்கு உதவி செய்பவனாகையால் ஆயச்சிறுமியர் இவனை நாயகன் என்றது முக்கியமான தலைவனைக் காட்டிலும் அவனுக்கு வழிகாட்டிகளே இவர்களுக்குச் சிறந்த தலைவர்கள் ஆதலால் ததீயரை முன்னிட்டே பகவானைப் பற்ற வேணும் என்ற சாத்திரப் பொருள் இங்கு வெளியாகிறது.

இனி பிரபத்தி செய்பவன் சேதனனாய், பேறு தருபவன் எம்பெருமானாய் இருக்க, பாகவதர்களை முன்னிடுவான் என்? எனில் அளவற்ற குற்றங்களைக் குறையறச் செய்த பாவி இன்று வந்து விழுகிறான் என்று அடியவனுடைய முன் நிலைகளை எண்ணி எம்பெருமான் சீற்றமுறவும் கூடும் ஆதலால் அங்ஙனம் சீற ஒண்ணாதபடி மறுக்க ஒண்ணாத மனிதரை இட்டுப் பொறுப்பிக்க வேண்டும், ஆதலால், இவ்ஆயர்குலப் பெண்கள் நந்த கோபரையும் கோயில் காப்பானையும் நாயகனாய் நின்ற என்ற அடை மொழியினால் சிறப்பிக்கின்றனர் என்க.

கண்ணபிரானின் கோயில் காப்பானே என்னாமல் நந்தகோபனுடைய கோயில் காப்பானே என்றது - பரமபதத்தில் எம்பெருமான் சுவதந்தரனாய் இருந்து பட்டபாடு தீர, நந்தகோபருக்குப் பிள்ளையாய்ப் பிறந்து பாரதந்திரியத்தைப் (பாரதந்திரியம்) - பிரபத்தி (சரணாகதி) தத்துவம் இருவகைப்படும். சேஷத்துவம் - பகவானுக்கு அருகில் இருந்து கைங்கரியம் செய்வது அனந்தன், கருடன், விஷ்வக் சேனர் போல. இது விலைப் பாலுக்குச்சமம் பாரதந்திரி மாவது - பகவானுக்கு அருகிலோ தொலைவிலோ அவனுக்காகவே, அவனிட்ட கட்டளையைத் தலைமேற் கொண்டு செய்வது. இலட்சுமணன் போல இது தாய்ப்பால் போன்ற சிறப்புக்குரியதாம்). பேணினன் ஆதலால் அவன்திருவுள்ளம் உவப்பதற்காக என்க. கண்ணபிரானுடைய கோயில் - என்றால் பாரதந்திரியம் பரிமளிக்க வழியில்லை.

இங்ஙனம் இவர்கள் அவனைப் புகழ்ந்து அழைக்க, அவன் மிகவும் உள்ளம் குளிர்ந்து கண்ணாலே புகுங்கள் என்று நியமனம் கொடுக்க, அவ்வாசலால் புகுந்து உள்ளே சென்று தோரண வாசல் காக்கும் முதலியை உணர்த்துகின்றனர், கொடித் தோன்றும் என்று தொடங்கி. இனி இருவரும் ஒருவரே என்று கருதுதலும் ஒக்கும்.

மணிக்கதவம் - அவன் தன்னைக் கண்டார் மற்றொன்றினைக் காணா நெஞ்சுடையராகும்படி பண்ணும் மணிவண்ணனாய் இருப்பதுபோல இதுவும், தன்னைக் காண்பார் அவனையும் நினையாதபடி செய்யும் மணிக்கதவமாய் இருக்கிறது.

மணிக்கதவம் தாள் திறவாய் - என்று இப்பெண்கள் கூப்பிட்டவுடன் அவன் பயன் நிறைந்த இந்நாட்டிலே நடுநிசியில் வந்து திறக்க அழைக்கும் நீங்கள்யார்? என்று கேட்டான். பயத்தை நீக்குபவன் இருக்கும் இடத்தில் அஞ்ச வேண்டிய காரணம் என்ன? என்று இவர்கள் கேட்க, அது கேட்ட அவன், யுகம் திரேதாயுகமாய், காலம் நற்காலமாய், தகப்பனாராகிய தசரதன் சம்பரனை அழித்தவனாய், பிள்ளைகள் நால்வரும் ஆண்புலிகளாய், அவர்கள் தாம் வழியே போய் வழியே வருபவர்களுமாய், ஊரும் ஒருவராலும் போர் செய்து வெல்ல முடியாத அயோத்தியாய் இருந்தமையாலே இராமாவதாரத்திலே அச்சம் அற்று இருந்து. ஆனால் காலம் கலியுகத்தை நெருங்கும் துவாபரயுகமுடிவாய், தகப்பனார் பசும்புல்லையும் அழுத்தி மிதியாத பரம சாதுவான நந்த கோபராய், பிள்ளைகள் சிறுவராய், தீம்பு செய்வோராய் (குறும்பு) இருப்பிடம் இடைச் சேரியாய், அதுதான் கம்சனுடைய அரசுக்கு மிகவும் அருகிலே இருப்பதாய், அவனுக்குக் கப்பம் கட்டும் ஊராய் அவன்தான் பரம சத்துருவாய், எழும் பூண்டெல்லாம் அசுரமயமாய் இருக்க, அச்சம் இன்றி இருக்க முடியுமோ? என்றான். அது கேட்ட இவர்கள் எங்களுக்கு அஞ்சவேணுமோ? நாங்கள் பெண்பிள்ளைகள் அல்லவோ? என்ன, அதற்கு அவன், அப்படியா? சூர்ப்பணகை பெண்பிள்ளையன்றோ? அவள் நலிந்தது ஒரு மாளிகையும் வாசல் காப்பாரும் இல்லாமையால் அன்றோ? என்ன, அதற்கு இவர்கள், அவள் இராட்சசி, நாங்கள் இடைப் பெண்கள், அவளுக்குச் சமமாக எங்களைக் கருதலாமோ? என்றனர். அதற்கு அவன், ஆய்ப் பெண்களா? பூதனை ஆய்ப்பெண்ணல்லவா? அவள் செய்த தீமையை நீங்கள் அறியவில்லையோ? இடைச்சிகளுக்கன்றோ மிகவும் அஞ்சவேண்டும் என்ன, அதற்குப் பதிலாக ஆயர் சிறுமியரோம். என்றனர் எட்டும் இரண்டும் அறியாத எங்கள் பருவத்தைப் பாராய் பூதனையைப் போல தனித்துவரவில்லை, அஞ்சு இலட்சம் குடிப் பெண்கள் எல்லாரும் கூடியன்றோ வந்தது, என்று ஆயர் சிறுமியரோம் என்கிறார்கள் என்பது ஆறாயிரப்படி அருளிச்செயல். இது கேட்ட அவன்

சிறுமியராக இருந்தால் என்ன? அசுரத்தனமான தொரு கன்று வந்து அழிக்கப்பார்த்தது அன்றோ? எனவே வந்த காரியத்தைச் சொல்லுங்கள், வார்த்தையில் அறிகிறோம், என்றான். அதற்கு இவர்கள் அறைபறை, என்றனர், நோன்புக்குப்பறை வேண்டி வந்தோம் என்றபடி. அது கேட்ட அவன், அதுவாகில் பெருமான் திருப்பள்ளி உணர்ந்து எழுந்த பின்னர் விண்ணப்பம் செய்து தருகிறோம், நில்லுங்கள், என்றான். அதற்கு இவர்கள் நென்னலே வாய்நேர்ந்தான் அப்பெருமான் எங்களுக்குப் பறைதருவதாக அருளிச் செய்தான் என்றனர்.

(மாயன் - இடைச்சிறுமியர்க்கு உரிமையானவன், மணிவண்ணன் அப்படி இல்லாவிடினும் விடமுடியாத வடிவழகு உடையவன்)

அதுகேட்ட அவன், எங்களை இங்கு வைத்ததற்கு ஒரு பயன் வேண்டாவோ? வந்தவர்களின் இயல்புகளை ஆராய வேண்டி நியமிக்கப் பெற்றுள்ள நாங்கள் உங்கள் உள்ளக் கருத்தை ஆராயாமல் விடமுடியாது என்றான். அதற்குப் பதிலாக இவர்கள் தூயோமாய் வந்தோம் என்றனர் அதுகேட்ட அவன், உங்கள் தூய்மையை நாடறியுமாறு ஏற்ற அடையாளம் சொல்லுங்கள், உங்கள் ஆற்றாமையைக் கண்டால் ஒருபறை பெற்றுப்போக வந்தோராகத் தோன்றவில்லை என்றான். அதற்கு விடையாகத் துயிலெழப் பாடுவான் - வந்தோம் என்கின்றனர்.

இவர்களுடைய பாவசுத்தியை அறிந்திருந்தும் இவர்களுடைய இனிய பேச்சை இன்னும் சற்று நேரம் கேட்க வேண்டும் என்று இவர்களை மேலும் தடுக்க நினைத்தான். குறிப்பறிவதில் வல்லவர்கள் ஆகையாலே அறிந்து வாயால் முன்னம் முன்னம் மாற்றாதே என்கிறார்கள். நெஞ்சாலேசில நினைத்தாய் ஆகிலும், வாயாலே நெருப்பைச் சொரிந்தது போல மறுக்க ஒண்ணாது என்றார்கள். அம்மா! நீ எங்களுக்குச் சுவாமி அல்லையோ! அவனையும் எங்களுக்குக் காட்டித்தருபவன் ஆகவே மேலாக இருப்பவன் அன்றோ நீ என்றனர். இப்படி இவர்களுடைய ஆற்றாமையைக் கண்டவுடன் இனி இவர்களைத் தடுத்தால் உயிருக்குத் துன்பம் ஏற்படும் நிலை உண்டாகும் என்று பார்த்து, நான் உங்களைத் தடுக்கவில்லை, நீங்களே கதவைத் தள்ளிக் கொண்டு புகுங்கள் என்றான். அதற்கு இவர்கள் இக்கதவு உன்னைக் காட்டிலும் எம்பெருமானிடம் மிகவும் அன்பு கொண்டு அழுத்தமாக

இருக்கின்றது. அபலைகளான எங்களால் இது திறக்க இயலாது, நீயே திறப்பாய் என்கிறார்கள். (திருவாய்ப்பாடியில்) அறிவற்ற பொருளாகிய கதவு கூட கண்ணனிடம் அனுகூலமாய் இருப்பதே!))

நந்தகோபனுடைய - என்ற இடத்து வெண்டளை பிறழ்ந்து வந்தது. இங்ஙனம் தளை தட்டாமைக்காக நந்த கோபன்னுடைய என்று விரித்தல் விகாரமாக்கி உரைக்க வேண்டா. வெண்டளையில் வரும் கலிப்பாவில் சிறுபான்மை மாறிவருதலும் உண்டு என்று யாப்பருங்கல விருத்தியுள் கூறப்பட்டுள்ளது.

பாவை நோன்பு நோற்கப் புகுவோர் அனைவரும் கூடி ஆற்றங்கரையை அடைய வேண்டும். ஆனால் இங்கு இவர்கள் நந்தகோபருடைய திருமாளிகையை அடைகின்றனர். இதனால் நோன்பு நோற்பது என்பது ஒரு காரணமே தவிர உண்மையான நோக்கம் கண்ணபிரானின் திருவடிகளை அடைதலே, என்பதை நாம் உணரமுடிகிறது. நீங்காத தெய்விகக் காதல் தாகம் கொண்ட கோபியர்கள் கண்ணனுடன் கலந்து அனுபவிக்கும் பேரின்பத்திற்கு (மார்கழி) நீராட்டம் என்று பெயர்.

(உள்ளுறை) எல்லாப் பாகவதர்களும் திரண்டு, ஆசார்யனை நெருங்கிச் சென்று ஆசார்யசம்பந்தத்தை உண்டாக்கப் புருஷகாரமாய் (தகவுரை கூறுவோர்) இருப்போரை உணர்த்துதல் ஆசரியனைத் தொழுவதற்கு முன் அவனிடத்துத் தம்மைச் சேர்ந்தாரையும் பணிவது பெரியோர் செயல் என்பது இங்கு விளங்கும். கோயில் காப்பான் - திருமந்திரத்தை அதிகாரிகள் அல்லாதார் காதில் படாதபடி பாதுகாப்பவன். வாசல் காப்பான் - அகார, நம, சப்தார்த்தங்களைக் காப்பவன்.

நேயநிலைக் கதவம் நீக்கு - கதவுகள் இரட்டையாய் இருப்பதுபோலத் திருமந்திரமும், துவயமும், சரமச்சுலோகமும் இரட்டையாய் இருப்பதனாலே அவற்றைக் கதவாக உருவகித்து அவற்றின் பொருள்களை உபதேசித்து அருள வேண்டும் என்கிறது.

திருமந்திரமானது - பிரணவம், மந்திரசேஷம் என்று இரட்டை, துவயமானது - பூர்வவாக்கியம், உத்திரவாக்கியம் என்று இரட்டை, சரமசுலோகமானது - பூர்வார்த்தம், உத்தரார்த்தம் என்று இரட்டை.

**" பத்துடை அடியவர்க்கு எளியவன்; பிறர்களுக்கு அரிய வித்தகன்......."** — **திருவாய்மொழி 1:3:1**

## பதினேழாம் பாசுரம்

அம்பரமே தண்ணீரே சோறே அறம் செய்யும்
எம்பெருமான் நந்தகோபாலா எழுந்திராய்
கொம்பனார்க் கெல்லாம் கொழுந்தே குலவிளக்கே
எம்பெருமாட்டி யசோதா அறிவுறாய்
அம்பரம் ஊடறுத்து ஓங்கி உலகளந்த
உம்பர் கோமானே உறங்காது எழுந்திராய்
செம்பொற் கழலடிச் செல்வா பலதேவா
உம்பியும் நீயும் உறங்கேலோ ரெம்பாவாய்.

(பொருள்). ஆடையையும், தண்ணீரையும், சோற்றையும் தருமம் செய்கின்ற எமது தலைவனே! நந்தகோபனே! எழுந்திருப்பாயாக, கொம்பை ஒத்த (இளைத்துள்ள) வர்களான பெண்களுக்கெல்லாம் கொழுந்து போன்றவளே! எமது தலைவியே! யசோதையே! எழுந்திராய், ஆகாயத்தை இடம் அறும் படி செய்து உயர்ந்து உலகங்களை அளந்து கொண்ட தேவர்களுக்குத் தலைவனே! தூங்காமல் எழுந்திராய், செம்பொன்னாலாகிய வீரக்கழலை அணிந்த பாதங்களை உடைய ஸ்ரீமானே! பல தேவனே! உன்தம்பியும் நீயுமாக தூங்காமல் எழுந்திரு.

(சிறப்புப் பொருள்) திருவாசல் காக்கும் முதலிகளின் அனுமதி கொண்டு உள்ளே புகுந்த ஆய்ச்சிகள் ஸ்ரீநந்தகோபாரையும் யசோதைப்பிராட்டியையும் கண்ணபிரானையும், பலராமனையும் திருப்பள்ளி உணர்த்தும் பாசுரம், இது.

கணவருடைய படுக்கையையும் குழந்தையினுடைய தொட்டிலையும் விடாத தாயைப்போல் என்றும் ஸ்ரீநந்தகோபரையும் கண்ணனையும் விடாத யசோதைப் பிராட்டியைப் போல என்றும் (முழுட்சுப்படியில்) அருளிச்செய்தபடி, முதற்கட்டில் நந்தகோபரும், இரண்டாம் கட்டில் யசோதைப் பிராட்டியும், மூன்றாம் கட்டில் கண்ணபிரானும், நான்காம் கட்டில் பலராமனும் பள்ளி கொள்வது முறையாதலால், அம்முறையை அடியொற்றி உணர்த்தியவறு, ஒருவரை ஒருவர் எழுப்பி, பட்ட பாட்டை எல்லாம் எல்லாரும் கூடிப்படுகிறார்கள்.

வேதம் வல்லாரைக் கொண்டு விண்ணோர் பெருமான் திருப்பாதம் பணிய வேணும் - என்னும் சிறந்த பொருளை இங்கும் மேற்கொண்டு காட்டுகிறார்கள். அவனை ஆய்ப்பாடிப் பெண்கள் களவு காணாமல் காவலிடுகிறார்கள்.

உள்ளே இருப்பது பெருஞ்செல்வமாய், தாம் (வளர்த்து) எடுத்த பேராளனுமாய், நிதி எடுத்தவருமானால் நோக்காமல் இரார் அன்றே என்பது ஆறாயிரப்படி

இதில், முதல் இருஅடிகள் நந்தகோபரை உணர்த்தும்.
அம்பரமே தண்ணீரே சோறே அறம் செய்யும் எம்பெருமான் நந்தகோபாலா ;

அம்பரம் - இங்கு ஆடை என்று பொருள். 5-ஆம் அடியில் வானம் என்றுபொருள். உடலுக்கு அவசியமான ஆடைகளையும், உயிர்வாழ அடிப்படையான தண்ணீரையும், வளர்க்கும் சோற்றையும் வேண்டுவார்க்கு வேண்டியபடி, புகழைப் பயனாகக் கருதாமல் கொடையையே பயனாகப் பேணிக் கொடுக்கின்றமை விளங்கும்.

எமக்கு உண்ணும் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணன் என்னும்படியான கண்ணபிரானை எமக்கு உதவப் போகிறவனே! என்ற புகழ்ச்சியும் தோன்றும்.
நந்தகோபாலன் இவரைப்பற்றி 5 பாசுரங்களில் குறிப்பிடப் பட்டுள்ளது.

பாசுரம்-1 = கூர்வேல் கொடுந்தொழிலன் - மங்களாசான பரத்துவம் பேசப்பட்டது

16 = திருவாய்ப் பாடிக்குத் தலைவர் என்று பெருமை.

17 = இப்பாசுரத்தில் அவருடைய நிகரற்ற வள்ளல் தன்மை பேசப்படுகிறது.

18 = அடுத்தபாசுரத்தில், ஓடாத தோள்வலியன் என அவருடைய வலிமை சொல்லப்படுகிறது.

21 = ஏற்ற கலங்கள் - என்னும் பாசுரத்தில் வள்ளல் பெரும் பசுக்களை மிகுதியாக உடையவர் எனப்படுகிறார்.

இப்பாசுரத்தில் குறிப்பிட்டுள்ளபடி இவர் ஆடை, நீர், அன்னதானம் செய்பவராக ஒரு புராணத்திலும் குறிப்பிடப்படவில்லை, சுவாமி தேசிகன் இயற்றிய யாதவாப்புதய

காவியத்தில் கண்ணன் தனக்கு மகனாய் பிறந்த மகிழ்ச்சியில் கற்பகத் தருபோல தானங்கள் செய்ததாகக் கூறப்பட்டுள்ளது. தந்தையிடமிருந்த இக்குணங்கள் மகனிடமும் வந்தன எனலாம்.

1. ஆடை தானம் திரௌபதிக்கு வழங்கியது

2. நீர் வழங்கியமை பாரதப் போரில் குதிரைகள் நீர் விடாய் கொண்டு தவித்த போது அருச்சுனன் வேண்ட, பெருமான் கடினமான நிலத்திலும் நீர் நரம்பு அறிந்து வருணாஸ் திரத்தைச் செலுத்தி, நீரைக் கொணர்ந்து பாண்டவர்தம் குதிரைகளின் விடாயை நீக்கினான்.

3. அன்னதானம் காட்டில் பத்தவிலோசனத்தில் முனிவர்தம் பத்தினியர் மூலமாக, தன்னேராயிரம் பிள்ளைகளுக்கு அன்னதானம் செய்தது.

இவ்வாறு நந்தகோபரை, எழுப்பி அவரது அனுமதி பெற்று யசோதைப் பிராட்டியை எழுப்புகின்றனர். தேவகி முதலிய பெண் இரத்தினங்களுள் தலை சிறந்தவர் யசோதை.

"திருவிலேன் ஒன்றும் பெற்றிலேன் எல்லாம்
தெய்வ நங்கையசோதை பெற்றாளே" என்று தேவகி கூறுவதைக் காண்க.

கொழுந்து செடிக்கு ஒரு தீங்கு நேர்ந்தால், கொழுந்தில் முதலில் வாட்டம் பிறப்பதுபோல ஆய்க்குலப் பெண்களுக்கு ஒரு கேடு வந்தால் முந்துற யசோதை இடம் வாட்டம் காணப்படுவது பற்றிக் கொழுந்தே! எனப்பட்டாள்.

குலவிளக்கு ஆயர் குலத்தினில் தோன்றும் அணிவிளக்கையும் விளங்கச் செய்த விளக்கு அவள்.

எம்பெருமாட்டி எமது தலைவியே (யசோதாய்) அறிவுறாய் (உணர்ந்து எழுவாயாக) நந்தகோபரை எழுந்திராய் என்றும் இவளை அறிவுறாய் என்றும் சொல்வதால் இவள் நெஞ்சிலே உணர்த்தி உண்டானால் நமக்கு அவனைப் பெறலாவது எளிது என்று மகிழ்வுடன் உணர்த்துகின்றனர்.

யசோதாய் கண்ணன் வெண்ணெய் உண்ட வயிற்றுக்கு என்ன தீங்குவருமோ! என்று அஞ்சிய யசோதையே!

மாணிக்கம் கட்டி வயிரம் இடைகட்டி
ஆணிப் பொன்னால் செய்த வண்ணச்சிறுத் தொட்டிலில் -

கண்ணனைஇட்டுத் தாலாட்டிய யசோதையே !
அம்புலிகாட்டி, அம்மம் உண்ண அழைத்த அசோதையே!
நீராட அழைத்த யசோதையே!
குடந்தைக் கிடந்த எம்கோவே குருக்கத்திப் பூச்சூட்ட
வாராய்! என்று அழைத்த அசோதையே!

ஆயர்பாடி விளக்கே! விளக்கு பிறருக்கு ஒளி கொடுத்துத் தன்னையும் அந்த ஒளியிலே காட்டிக் கொள்வதுபோல, தான் பிறந்த ஆயர்குலத்திற்குப் பெருமை சேர்த்து, தன்னையும் அதில் ஈடுபடுத்திக் கொண்டவளான யசோதையே! எங்கும் நிறை பரம்பொருள் உன்னை அம்மா! என்றழைத்திடும் பேறு பெற்ற யசோதையே!

நாங்கள் வந்துள்ள காரியத்தை நீயே காட்டி வைக்க வேண்டும். என இவர்கள் வேண்ட, யசோதையும் இவர்கள் உள்ளே புகுவதற்கு இசைந்தமை தோற்ற இருக்க, 3-ஆம் கட்டில் புகுந்து கண்ணபிரானை உணர்ந்துகின்றனர். அம்பரம் ஊடு அறுத்து ஓங்கி உலகளந்த உம்பர்கோமானே!

வானத்தை இடம் அறும்படி செய்து உயர்ந்து உலகங்களை அளந்துகொண்ட தேவர்களுக்குத் தலைவனே! இப்போது இவ்வரலாற்றை இவர்கள் எடுத்துக் கூறுவது-வேண்டாதார் தலையிலும், வேண்டாவென மறுத்தவர் தலையிலும் திருவடியை வைத்தருளின் நீ, திருவடிகளில் விழுந்து யாசிக்கும் எங்களை அடிமை கொள்ளாது ஒழிவது எங்ஙனே? என்னும் கருத்தினால் என்க.

இவ்வாறு திருப்பாவையில் திரிவிக்கிரம அவதாரம் 3 இடங்களில் குறிப்பிடப்படுகிறது. 1-10 பாசுரங்களில் 3-ஆம் பாசுரத்தில் ஓங்கி உலகளந்த உத்தமன் என்று வருகிறது. 11-20 பாசுரங்களில் இப்பாசுரத்தில் (16) வருகிறது. 21-30 பாசுரங்களில் அன்று இவ்வுலகம் அளந்தாய் என்று (24) வருகிறது.

திருப்பாவை ஒரு வேள்வி. வேள்விக்குக் கபாலம் வேண்டும். அதில் புரோடாசத்தை (மாவுப்பொருள்) வைத்து நெய்தடவிச் சமர்ப்பிப்பர். 3 பத்தும் 3 கபாலங்கள் ஆசாரியன் அருள் - நெய், யாகத்தில் ஒவ்பொரு கபாலத்தைச் சமர்ப்பிக்கும் போதும் திரிவிக்கிரமனைத் துதித்தல் மரபு.

உறங்காது எழுந்திராய் ஒரு கணப்பொழுதும் கண்ணுறங்காது சேவித்துக் கொண்டிருந்த நித்திய சூரிகளைத் துடிக்கவிட்டு, எம்மை விரும்பி இங்கு வந்த நீ எங்களுக்கு முகம் காட்டாமல் உறங்கி எங்களையும் துடிக்க விடவேண்டாம் என்பதாம்.

இவர்கள் இங்ஙனம் இருந்து எழுப்பவும், அவன் இவர்கள் நம்பிமூத்தபிரானை (பலராமன்) எழுப்பாமல் நம்மை எழுப்புகின்றனர் ஆதலால் முறை கெடச் செய்தார்கள், ஆனபின்பு இவர்களுக்கு நாம் முகம் கொடுப்பது தகுதி அன்று என்று பேசாமல் கிடந்தான். இவ்ஆய்ச்சிகள் இங்கிதம் அறிய வல்லவராதலால் அக்கருத்தினை உணர்ந்து முதலில் அண்ணனை எழுப்பாமல் முறை கெட உணர்த்தினோமே! என்று வருந்தி கடை இரு அடிகளால் பலராமனை உணர்த்துகின்றனர்.

செம்பொற் சழலடிச்செல்வா! மக்கள் அறுவரைக் கல்லிடை மோத, தனக்குப் பின் கண்ணன் அவதரித்த, தான் முந்துறத் தோன்றிய பொற்கால் நலத்தை உடையவனே! இளைய பெருமாள் இராமபிரானுக்குப் பின் பிறந்து பெற்ற செல்வம், முன் பிறந்து பெற்றவனன்றோ நீ! பலதேவனுக்குச் செல்வமாவது - கண்ணபிரானுக்கு அடிமை செய்யப் பெறுகை.

உம்பியும் நீயும் உறங்கேல்! உலகில் படுக்கையில் பள்ளிகொள்வார் உறங்குவது கண்டோம், ஆனால் படுக்கையும் கூட உறங்குவதைக் கண்டிலோம் ஆகையால் அவனுக்குப் படுக்கையான நீயும், எங்களுக்குப் படுக்கையான அவனும் உறங்காது உணர வேண்டும் என்பது சுவையான செய்தி ஆகும். (ஆதிசேடனின் அம்சம் பலராமன், ஆதிசேடன் பெருமானுக்குப் படுக்கையாக இருப்பதால் இவ்வாறு கூறினார்) அவன் பாரதந்திரியத்தாலே கட்டிக் கொண்டுகிடக்கும். இவன் ஆற்றாமையாலே கட்டிக் கொண்டுகிடக்கும்! பிராட்டியைப் பிரிந்து இராமபிரான் நெடுநாள் இருந்தார் இளைய பெருமாளப் பிரிந்து அமுதுசெய்திலர்.

மேலும் உன்தம்பியையும் நீஎழுப்பி நீயும் உறங்காது இருக்க வேணும் என்னும் பிரார்த்தனை விளங்கும். உம்பி - உன்தம்பி என்பதன் மரூஉ. அவன் படுக்கையான நீ உணர்ந்து, எங்கள் படுக்கைகையயும் உணர்த்தி எங்களுக்குத் தாராய்-குகன், சுக்கிரீவன், அனுமன், வீடணன் ஆகிய எல்லார்க்கும் இளையபெருமாள் தான் புருஷகாரம்.

கண்ணனைப் பெற்ற தாயாகிய தேவகியின் கருப்பத்தில் 6மாதமும், பின்பு வசுதேவரது மற்றொரு மனைவியாகிய ரோகிணிவற்றில் மாயையினால் சேர்க்கப்பட்டு 6 மாதமும் இருந்து கண்ணனுக்கு முன்னே பிறந்ததால் பலதேவன் கண்ணனுக்கு அண்ணனாவான்.

உள்ளுறை

1. நந்த கோபர் ஆசாரியன். அம்பரம் - ஆகாயம், பரமபதத்தை விளங்கச் செய்தல்

நீர் - விரஜைநதி நீராட்டத்தைச் செய்விப்பவன்

சோறு - பிரம்மமே, பிரம்மானுபவம் செய்விப்பவர்.

2. யசோதை திருமந்திரம் மந்த்ரோ மாதா, குரு, பிதா. தாய் குழவியை வயிற்றில் அடக்கி இருப்பதுபோல, திருமந்திரம் பகவானைத் தன்னுள்ளே அடக்கி இருக்கும்.

3. கண்ணன் திருமந்திரார்த்தம், பெருமான் எங்கும் நிறைந்திருப்பவன் என்பதே நாராயண மந்திரார்த்தம் இங்குக் குறிக்கப்பட்டது.
மந்திரத்தை மந்திரத்தால் மறவாதென்றும் வாழுதியேல் வாழலாம் - என்று திருநெடுந்தாண்டகத்தில் திருமங்கை மன்னர் குறிப்பிட்டு, அடுத்த பாசுரத்தில் (ஒண்மிதியில் புனல் உருவி) திருமந்திர அர்த்தமான திரிவிக்கிரம அவதாரத்தையே குறிப்பிட்டார்.

4. பலராமன் திருமந்திரார்த்தசாரம். நின்திருவெட்டெழுத்தும் கற்று நான் உற்றதும் உன்னடியார்க் கடிமை - என்று திருமங்கை மன்னர் திருமந்திரத்தின் சாரமாகக்காட்டியது பாகவதர்க்கு அடிமை செய்வது. உம்பியும் நீயும் உறங்கேல் - என்று ஒன்று சேர்த்துச் சொன்னது பகவத் பாகவத அடிமையாகும் இரண்டும் ஒன்றை விட்டு ஒன்று பிரிந்திரா தென்ற தத்துவத்திற்கு விளக்கமாகும்.
உள்ளுறை. இவ்வுலகினைத் தன் திருவடிகளின் கீழே சேர்த்துக் கொண்ட நித்தியசூரிகளின் தலைவனே! சம்சாரிகளின் உறக்கம் தீர்க்க அவதரித்த நீ உறங்காது இருக்க வேண்டும்.

அம்பரம்-என்பது ஆன்மா பெற வேண்டிய பகவந்முக விகாசம். தண்ணீர் அதை வளர்க்கவல்ல நான் தலைவன்! என்னும் புத்தி நீங்குவது. சோறு அதனால் வரும் கைங்கரியம். இம்மூன்றையும்

அளிப்பவன் ஆசாரியன்அப்படிப்பட்ட ஆசாரியனைப் பற்றித் திருமந்திரத்தின் பொருளை உணர்ந்து எம்பெருமானுக்கு அந்த ரங்கரை முன்னிட்டு எம்பெருமானை உணர்த்துதல் சேதனனுக்கு உரிய இயல்பு என்பது உள்ளுறை.

## பதினெட்டாம் பாசுரம்

* உந்து மதகளிற்றன் ஓடாத தோள்வலியன்
நந்த கோபாலன் மருமகளே! நப்பின்னாய்!
கந்தம் கமழும் குழலீ! கடை திறவாய்
வந்தெங்கும் கோழி அழைத்தனகாண் மாதவிப்
பந்தல்மேல் பல்கால் குயிலினங்கள் கூவினகாண்
பந்தார் விரலி! உன் மைத்துனன் பேர்பாட
செந்தாமரைக் கையால் சீரார் வளை ஒலிப்ப
வந்து திறவாய் மகிழ்ந் தேலோ ரெம்பாவாய்.

(பொருள்) மதநீரைப் பெருக்குகின்ற யானையை உடையவனும் (போரிலே ஒருவருக்கும்) பின்னிடாத தோள்வலியை உடையவனுமான ஸ்ரீ நந்தகோபரது மருமகளே! நறுமணம் வீசுகின்ற கூந்தலை உடையவளே! நப்பின்னையே! கதவைத் திற, கோழிகள் எப்புறத்திலும் வந்து கூவின, குருக்கத்திக் கொடியாலாகிய பந்தலின் மேலே குயில் கூட்டங்கள் பல தடவை கூவினகாண், (கண்ணபிரானோடு விளையாட உரிய) பந்து பொருந்திய கைவிரல்களை உடையவளே! உனது கணவன் புகழை (உன்னுடன்) பாடும்படி மகிழ்ந்து வந்து, சிறப்புப் பொருந்திய வளை குலுங்கி ஒலிக்க, செந்தாமரை மலர் போன்ற கைகளினால் (கதவைத் திறப்பாயாக.

(சிறப்புப் பொருள்) மணமகளின்றித் திருமணத்திற்கு ஏற்பாடு செய்வதுபோல, முக்கிய தேவியான நப்பின்னைப் பிராட்டியைப் பற்றாமல், வழிப்போக்கரைப் போன்ற வாயில் காப்பானையும், நத்தகோபனையும், பலதேவனையும் பற்றுவதால் பயன்யாது? பிராட்டியை முன்னிடாமல் பகவானைப் பற்றினால் இராவணனைப் போலத் தீமை அடைவர் என்று கருதி, இக்கிருஷ்ணாவதாரத்திற்கு சேர நப்பின்னைப் பிராட்டியை இப்பாசுரத்தாலே எழுப்புகிறார்கள்.

எம்பெருமானைப் பற்றுவார்க்கு ஒரு தகவுரை கூறுவோர் தேவை (புருஷகாரி) அது போலப் பிராட்டியைப் பற்று வார்க்கும் ஒரு புருஷகாரம் வேண்டாவோ? எனில், வேண்டா, அவளுடைய கருணைதானே அவளைப் பற்றுவதற்கும் புருஷகாரமாகும். நெருப்பை ஆற்றுவதற்கு நீர் வேண்டும், நீரை ஆற்றுவதற்கு நீரே போதும் அன்றோ?

எம்பெருமானைப் பற்றும் போது பிராட்டிமுன்னாகப் பற்ற வேண்டும் என்று பிரமாணம் உள்ளது, இப்போது இவர்கள் நப்பின்னையைப் பற்றுவது ஏன்? எனில், கிருஷ்ணாவதாரத்திற்கு இவள் பட்டத்தரசி ஆதலால் இவளைப் பற்றுகின்றனர் என்க.

பரத்துவத்தில் ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவி ஆகிய நாச்சிமார்மூவரையும், வியூகநிலையால் நாச்சிமார் இருவரையும் (ஸ்ரீ,பூ, தேவிகள்) இராமாவதாரத்தில் பெரியபிராட்டியார் ஒருவரையும், ஸ்ரீவராக அவதாரத்தில் பூமிப் பிராட்டியையும் கிருஷ்ணாவதாரத்தில் நப்பின்னைப் பிராட்டினையும் முன்னிடுவது வழக்கமாகும்.

<u>நப்பின்னை</u>

நீளை, பிஞ்ஞை, உபகேசி - என்னும் திருப்பெயர்களும் இவளுக்கு உண்டு. உப்பக்கம் நோக்கி உபகேசி தோள் மணந்தான் - திருவள்ளுவமாலை.

ஆயர் மடமகள் பின்னை - பெரியாழ்வார். யசோதைப் பிராட்டியின் சகோதரரான கும்பர் என்பவரின் மகள் இவள் என்பர் ஸ்ரீ பிள்ளைலோகம் ஜீயர்.

**கொல்லேற்றுக் கோடஞ்சுவானை மறுமையும்**
**புல்லாளே ஆயர் மகள்** - கலித்தொகை -103. எருதினை அடக்கு பவனை (ஏறுதழுவுதல்) ஆயர் குலப்பெண் மணப்பது வழக்கம்.

இமிலேற்று வன் கூன் கோட்டிடை
ஆடினை கூத்து ஆயர்தம் கொம்பினுக்கே - திருவிருத்தம்.

திருமாலுக்கு உடனமர் காதல் மகளிர் திருமகள் மண்மகள் ஆயர் மடமகள் என்றிவர் மூவர் உரியர் - திருவாய்மொழி.

இதில் கிருஷ்ணவதாரத்தில், ஆயனாகி ஆயர் மங்கை வேய தோள் விரும்பினாய் - என்றார் திருமழிசை ஆழ்வார்

தன்துணை ஆயர்பாவை நப்பின்னை தனக்கு இறை - பெரியதிருமொழி

வண்டுழாய் மாலையை மாயவன் மேலிட்டுத்
தண்டாக் குரவை தானுள் படுவாள் - கொண்டசீர்
வைய மளந்தான் தன் மார்பில் திரு நோக்காப்
பெய்வளைக் கையாள் நப்பின்னை தானாம் - சிலப்பதிகாரம்.

மாயவன் திருமகளை நோக்காமைக்குக் காரணம் இவளே.

பின்னை (ந. சிறப்புப் பெயர் உணர்த்துவதோர் இடைச்சொல், நக்கீரன் என்பது போல) யுடன் கண்ணன் நிகழ்த்திய செயல்களைப் பழைய தமிழ்மக்கள் நாடகமாக நடித்து வந்தனர். ஆயர்பாடியில் தாதெரு மன்றத்தில் யசோதைப் பிராட்டியும் பிறரும் காண, கண்ணனும் பலராமனும் பின்னையை நடுவில் நிறுத்தி ஆடிய அற்புதக் குரவை தலைசிறந்த நாடகமாகும்.

மாமணி வண்ணனும் தம்முனும் பின்னையும்
ஆடிய குரவையிஃதாமென ஏத்தியும் - மணிமேகலை.

கண்ணபிரான் பின்னையின் இலவமலர் போன்ற மென்மை மிக்க வாய் அமுதம் உண்டவன் - என்கிறது சிந்தாமணி.

நிலமகட்குக் கேள்வனும் நீணிரை நப்பின்னை
இலவலர்வாய் இன்னமிர்தம் எய்தினான் அன்றே - சிந்தாமணி

ஏர்ப்பின்னை தோள்முன் மணந்தான் - திருக்கோவையார்

பின்னை நம்பும் புயத்தான் - தேவாரம்

நெஞ்சில் கறை கொண்ட கஞ்சனைக் காய்ந்த நிமலன் நங்கள்
பஞ்சித் திருவடிப் பின்னைதன் காதலன் - இராமாநுச நூற்றந்தாதி - 28

அர்ச்சாவதாரங்களில் (கண்ணபிரானுக்கு) உருக்குமிணிப் பிராட்டியே முக்கிய தேவியாக திவ்விய தேசங்களில் சேவை சாதித்தாலும், ஆழ்வார்களின் அருளிச் செயல்களில் உருக்குமிணியைப் பற்றிய பேச்சு 3,4 இடங்களில் மட்டுமே உள்ளது. நப்பின்னையைப் பற்றியே பலநூறு இடங்களில் உள்ளது. ஆனால் ஸ்ரீவிஷ்ணுபுராணம், ஸ்ரீபாகவதம் முதலிய நூல்களில் பின்னையைப் பற்றிய குறிப்பு இல்லை. வடநாட்டில் இராதையைப் போற்றுவர். தேசிகனுடைய யாதவாப்யுதயத்தில் பின்னை குறிப்பிடப் பெறுகிறாள். இந்நூலிலும், பட்டர் அருளிய நீளாதுங்கஸ்தநகிர் - என்னும் திருப்பாவைத் தனியனிலும் பின்னையை நீளா - என்று கூறியிருத்தலால் இதுவே இவளுடைய வடமொழித் திருநாமம் என்று அறிய முடியகிறது.

இவளை மணப்பதற்காக இவள் தந்தை (கும்பர்) கன்யாசுல்கமாகக் (மணம்முடிக்க வேண்டின் செய்து முடிக்க வேண்டிய செயல் பற்றிய நிபந்தனை) குறித்தபடி யாவர்க்கும் அடங்காத அசுரத் தன்மைபெற்ற ஏழுஎருதுகளையும் கண்ணபிரான் ஏழு திருவுருக் கொண்டு சென்று வலியடக்கித் தழுவினன் என்று புராணம் கூறும்.

நிறையினால் குறைவில்லா நெடும்பணைத்தோள் மடப் பின்னை
பொறையினால் முலையணைவான் பொருவிடை ஏழ்
அடர்த்துகந்த . . .

என்றதனால் இவள் கொங்கையோடு அணைவதற் கென்றே கண்ணபிரான் ஏழ்விடை அடங்கச் செற்றனன் என்க.

உந்து மதகளிற்றன் . . . எதிர்க்கின்ற மதக்களிற்றை உடையவன், நாட்டில் எவர்க்கும் இல்லாத தோள்வலியை உடையவன் என்றும் முதல் அடிக்குப் பொருள் கூறலாம். ஆயர் சிறுமியர், கண்ணபிரானுக்கு என்ன தீங்கு வருகிறதோ? என்று மிகவும் அச்சம் கொண்டு அப்பரமனது நன்மையையே எப்பொழுதும் நாடுபவர்கள் ஆதலால், கம்சனுடைய நகருக்கு அருகில் உள்ள ஆய்ப்பாடியிலிருந்தும், அவனால் நெருங்கியாதொரு தீங்கும் செய்ய முடியாதபடி காக்க வல்ல பெருவலிமைபடைத்துள்ளான் என்று நந்த கோபாலனுடைய வலிமையைப் பாராட்டி, உந்து மதகளிற்றன் ஓடாத தோள்வலியன் நந்தகோபாலன் என்கின்றனர் மதம் உந்து களிற்றன், என இயைத்து, மதத்தைப் பெருக்கும் களிறு போன்றவன் என்பதாகும். இனி மதத்தைப் பெருக்கும் களிறுகளை உடையவன் என்று பொருளாய், யானைமிகுதியைக்கூறிவாறாம். ஆயர் குலத்தவரான நந்த கோபர் யானைகட்டி வாழப்பெற்றாரோ? எனில், வசுதேவரும் இவரும் கலந்து நட்புடன் வாழ்வதால் அவரிடத்துள்ளவை இவரிடத்தும், இவரிடத்துள்ளவை அவரிடத்தும் இருக்கும் என்க. வாரணமாயிரம் சூழ வலம் செய்து என்னும் பாசுரம். இங்கு அனுசந்திக்கத் தக்கதாம். ஓடாத தோள்வலியன் - நாட்டிலே நடையாடாத தோள் வலியை உடையவன் என்றும் பொருள் கொள்ளலாம்.

நந்தகோபாலன் மருமகளே! பின்னை கும்பர் மகளாய் இருக்க அவளைக் கும்பர்மகளே! என்று அழைக்காமல், நந்த கோபாலன் மருமகளே என அழைத்ததற்குக் காரணம் யாதெனில், நப்பின்னை

இளமைமுதலே இங்கே வளருவதாலும், தனது தந்தையை மறந்து விட்டதாலும், புகுந்தவீட்டு வாழ்வையே பெருக்க மதித்து நந்தகோபருடைய சம்பந்தத்தைத் தனக்குப் பெறாப் பேறாக நினைத்திருப்பதனாலும் என்க.

இவர்கள் இங்ஙனம் அழைத்தபின்னும், அவள் கண்ணன் பிறந்த பின்னர் நந்தகோபருக்கு மருமகளாகாதவள் திருவாய்ப்பாடியில் எவள்? இப்போது இவர்கள் அழைப்பது நம்மைத்தான் என்று அறிவது எங்ஙனம்? என எண்ணிப் பேசாது கிடந்தாள். இதனை அறிந்த அவர்கள் நப்பின்னாய் எனப்பெயர்கூறி அழைக்கின்றனர்.

இங்ஙனம் ஆய்ச்சிகள் விளக்க, அது கேட்ட நப்பின்னை, கிருஷ்ணனுாபவம் நான் ஒருத்தியே செய்கிறேன் என்றும், கண்ணனுடன் நாமும் கல்வி புரியுமாறு இவள் கருணை புரிந்திலள் என்றும் இவ்ஆய்ச்சியர்க்கு நம்மேல் சிறிது சீற்றம் இருக்கக் கூடும் ஆதலால் இப்போது இவர்களுக்கு மறுமொழி கூறாதிருப்போம், என்று எண்ணி மீண்டும் பேசாமல் கிடக்க கந்தம் கமழும் குழலீ! என்கின்றனர்.

இவர்கள் இங்ஙனம் சொல்லக்கேட்ட நப்பின்னை, மலரிட்டு நாம் முடியோம் என்று முதலில் செய்த சபதத்தை நாம் மீறிக்கிடக்கும் படியை இவர்கள் உணர்ந்தனர் போலும் என்று அஞ்சி மீண்டும் பேசாமல் கிடக்க, கடைதிறவாய் என்கிறார்கள். அனைவருமாகச் சேர்ந்து பாவைநோன்பு நோற்கத் தொடங்கிய போது மேற் கொண்ட உறுதியை மீறி பூமுடித்தது போல, நாங்களும் எங்கள் சென்னிப்பூவை (கண்ணனை) அணிந்து சொள்ளும்படி கதவைத் திறந்து விடுக என்றபடி. அப்பரிமள வெள்ளம் வெளிப்புறப்படுமாறு கதவைத்திறந்து விடுக என்றும் பொருள் கொள்ளலாம்.

இதனைக் கேட்ட நப்பின்னை, இங்ஙனம் நடுசியில் வந்து எழுப்புவது ஏன்? பொழுது விடிய வேண்டாவோ கதவைத் திறப்பதற்கு? என்ன, இவர்கள் பொழுது விடிந்து விட்டது. என்ன, அவள் விடிந்தமைக்கு அடையாளம் சொல்லுங்கள் என்ன, இவர்கள், கோழி அழைத்தமையை அடையாளமாகக் கூறுகிறார்கள்.

கோழிகூப்பிட்டன என்னாமல் வந்து அழைத்தன என்றது தொடை தட்டி எழுப்புவாரைப் போல எங்கும் வந்து கோழி

கூவாநின்றன என்ற நயம் தோன்ற. கோழி - சாதி ஒருமை. ஒருகோழி எங்கும் ஒக்க ஏக காலத்தில் கூவ இயலாமையால்.

ஆறாயிரப்படி அருளிச்செயல்

கோழிகூவென்னுமால் - என்று உனக்குவயிறு எரிவதற்கு உடல் அல்லாமையாலே தெரியாதே என்று இதன் கருத்தாவது.

கோழிகூவென்னுமால் தோழிநான் என் செய்வேன்
ஆழிவண்ணர் வரும் பொழுதாயிற்று கோழி கூவென்னுமால்
-பெரிய திருமொழி.10:10:6

கண்ணபிரான் முதலில் சாமக் கோழி கூவியதும் தான் குறித்த பெண்ணுடன் கூடி, மீண்டும் அக்கோழி கூவினவாறே அவளை விட்டுப் பிரிவது என்று ஒருநியதி உண்டு. இதை அறிந்த பரகால நாயகி (திருமங்கை மன்னர் பெண்ணாகப் பாவித்துப் பேசும் நிலை) தன் தோழியை நோக்கி, கோழி கூவுவதால் கடல் வண்ணன் என்னோடு கூட வரும் பொழுது ஆயிற்று என்று மகிழ்ந்து சொன்னபடி. அவ்வளவில் இவன் கண்ணனுடன் கூடல் நிகழ்ந்த காலம் குறைவாகத் தோன்றியதால் அதற்குள் மீண்டும் கோழிகூவ, ஐயோ! நான் என்செய்வேன்? கோழிகூவினால் கண்ணன் ஓடிப் போய் விடுவானே என்று வருந்திக் கூறிய வாறு.

இவ்வாறு வருந்த வேண்டியது கீழ்க்கூறிய நியதிப்படி கண்ணன் நடக்கும் போதன்றி, ஒரு பொழுதும் அவனைப் பிரியாமல் அனுபவிப்பவர்க்கு வருந்தக் காரணம் இல்லையே இந்நப்பின்னைப் பிராட்டி கிருஷ்ணானுபவத்தில் இடையீடு இல்லாதவள் ஆதலால், இவள் கோழி கூவென்னுமால் என்று வயிற்றெரிச்சல்பட வேண்டியவள் அல்லள் என்று ஆறாயிரப் படி உரையின் கருத்தாகும்.

இதுகேட்ட நப்பின்னை சாமக் கோழிகளின் கூவுதல் பொழுது விடிவுக்கு அடையாளமாகாது, அவை சற்றுப் போது கூவிப் பின் உறங்கும், இங்ஙனம் அவை சாமந்தோறும் கிளர்ந்தடங்கும், இனி வேறு அடையாளம் உண்டாயின் கூறுங்கள் என்ன, மாதவிப்பந்தல்மேல் . . . காண்.

குருக்கத்திப் பந்தலின்மேல் கிடந்துறங்கிய குயிலினங்கள் பல முறை கூவினமையை அடையாளமாகக் கூறுகின்றனர் பலகால் குயிலினங்கள் கூவின காண் என்றால் போதுமே மாதவிப்பந்தல் மேல் எனக் கூறியதற்குக் கருத்து யாதெனின், படுக்கையின்

வாய்ப்பாலே அவை பொழுது விடிந்தமையையும் உணராமல் உறங்க வேண்டியிருக்க உணர்ந்து எழுந்தன என்றால், பொழுது நன்றாக விடிந்ததாக வேண்டாவோ? என்றவாறு அதுமேலேகூவ, நாங்கள் கீழே கூவா நின்றோம் என்றனர்.

இதுகேட்ட பின்னை, இவ்அடையாளம் மட்டும் குறை வில்லாததோ? கொத்தலர் காவின் மணித்தடங்கண்படை கொள்ளும் இளங்குயிலே என் தத்துவனை வரக் கூகிற்றியாகில் தலையல்லால் கைம்மாறிலேனே- நாச்சியார் திருமொழி.
என்று உறங்கும் குயில்களையும் கிளப்பிக் கூவச் சொல்லி வருத்துகிறவர்களன்றோ? இவர்கள் சொன்னபடி அவை கூவாதொழியில்

**இன்று நாராயணனை வரக் கூவாயேல் இங்குத்து**
**நின்றும் துரப்பன்** - என்று அவற்றைச் சோலையிலிருந்தும் துரத்தி விடுவதாகச் சொல்லி அச்சமுறுத்துகிறவர்களன்றோ இவர்கள். ஆன பின்பு, இவர்கள் ஊரில் இருப்பதையே கூலியாகக் கொண்டு அவை கூப்பிட்டன வேதவிர இக்கூவுதல் ஓர் அடையாள மாகக் கொள்ளத் தக்கதன்று என்று எண்ணிப் பேசாமல் கிடந்தாள். கிடக்கவே, மீண்டும் அவளைப் பந்தார் விரலி என்று விளிக்கின்றனர்.

கண்ணபிரானும் நப்பின்னைப் பிராட்டியும் இரவில் பந்தடித்து விளையாட, அவ்விளையாட்டில் பெருமான் தோற்றானாக, நப்பின்னை தனக்கு வெற்றியைத் தந்த அப்பந்தைக் கையால் அணைத்துக் கொண்டே கிடந்து உறங்க, அதனைச் சாலக வாசலால் கண்ட இவர்கள் பந்தார்விரலி, என்கின்றனர், நாங்களும் பந்துபோல் ஓர் அறிவுற்ற பொருளாகப் (அசேதன வஸ்து) பிறந்திருந்தோமாகில் எங்களையும் நீ உன்கையில் அடக்கிக் கொள்வாயன்றோ? என்னும் கருத்தும் இதில் தோன்றும்.

அவன் இவளுக்குப் போக உபகரணம், பந்து லீலா உபகரணம், ஒருகையில் நாரம், ஒரு கையில் நாராயணன், ஒரு கையில் செல்வம், ஒருகையில் செல்வத்திற்கு உரியவன் (விபூதிமான்) தலைவன் ஒருகையிலே, சேஷம் ஒருகையிலே.

பின்பு தாம் வந்த காரியத்தைக் கூறுகின்றனர், உன்மைத்துனன் பேர் பாட என்று. நீயும் அவனும் மைத்துனமை

கொண்டாடி ஒன்றுக்கு ஒன்பது சொல்லி - அதாவது ஆட்டத்தில் உன்னிடம் தோற்ற அவனை நீ கேலியாகப் பேசிட, அவனும் உன்னிடம் வாதம் செய்து பேசிட, அந்நிலையில் நாங்கள் உன் கட்சியில் நின்று துணையாக அவனைக் கேலியாகப் பேசிடவும் நாங்கள் அவன் தோல்வியையும், உன் வெற்றியையும் கொண்டாடி மகிழவும் வேண்டும் அல்லவா? அதற்காகவாவது கதவைத்திற என்கின்றனர். (பெருமானும் பெருமாட்டியும்) இருவரும் ஒன்றாய்ச் செல்லுமளவும் உடன் செல்லவும், பிரிந்தபோது தாய் பக்கலில் சேய்கள் நிற்பது - என்பது நாலாயிரப்படி.

இது கேட்ட உபகேசி, இயந்திரத்தினால் கதவைத் திறக்கும்படி வைத்திருக்கிறேன், உபாயமாகத் திறந்து கொண்டு உள்ளே வாருங்கள் என்ன, அது கேட்ட ஆய்ச்சிகள், நாங்கள் சுய முயற்சியினால் பேறு பெற நினைத்து உள்ளோமா? உன்னாலே பெற இருக்கிறவர்கள் அன்றோ? உன்கைபார்த்திருப்போர் அன்றோ? நாங்கள் திறந்து கொண்டு புகவல்லோம் அல்லோம், உன் தன் கையில் உள்ள வளைகள் நன்கு ஒலிக்க, அவ்வொலியைக் கேட்டு எங்கள் நெஞ்சு குளிரும்படி நீயே எழுந்து வந்து திறக்க வேணும் என்கின்றனர்.

செந்தாமரைக்கை - இயற்கையாக உள்ள சிவந்த நிறத்திற்குமேல் பந்து பிடித்ததனாலும் மிக்க செம்மையுடைய கை.

சீரார்வளை, வளைக்குச் சீர்மையாவது என்றும் கழலாது இருக்கப்பெறுவது. ஒரு முறையாவது பிரிவு நேர்ந்தால் அன்றோ என்னுடைய கழல் வளையை தாமும் கழல்வளை ஆக்கினரே' என்றும் வருந்த வேண்டுவது. நப்பின்னை என்றும் சேர்ந்திருப்பவள் ஆகையாலே சீரார்வளைக் கையளாய் இருப்பாள் அன்றே, இவ்வளையின் ஓசையைக் கேட்டுக் கண்ணனும் உணர்ந்தானாய், தாங்களும் வாழ்ந்தாராகக் கருதி 'ஒலிப்ப' என்கிறார்கள்.

கண்ணனோடு சேர்ந்திருப்பதற்குத் தடையாக ஒண்ணா தென்று பின்னை கிடந்தபடியே கதவைத் திறக்கமுயல,அதை அறிந்த இவர்கள், 'எங்களுக்காக நீ நாலடி நடந்து வந்தாய்' என்னும் பரிசை நாங்களும் பெறுமாறு எழுந்து வந்து திறக்க வேணும் என்பார். 'வந்து திறவாய்' என்கின்றனர். மகிழ்ந்து-'பாழும் இடைச்சிகள் நீண்ட நேரமாகக் கத்துகின்றனரே, கதவைத் திறந்து ஒழிவோம்' என்று

தருமத்திற்காகத் திறவாமல், திருவுள்ளம் உவந்து திறந்து அருள வேண்டும் என்று பிரார்த்தித்த வாறாம்.

'கந்தம் கமழும் குழலீ !' என்ற தால் மூக்கும், 'பேர்பாட' என்றதால் நாவும், 'வளை ஒலிப்ப' என்றதால் செவியும், 'வந்து திறவாய்' என்றதால் கண்ணும், தமக்கு உரிய புலனை அனுபவிக்கச் செய் என்று வேண்டிய வாறாம். நான்கு பொறிகளைக் கூறியது மெய்க்கும் இனங்குறித்தலாம். (செந்தாமரைக் கையாவது-ஞானம், 'ஞானக்கை தா' என்றார் அன்றோ நம்மாழ்வாரும். (திருவாய் 2:9:2).

'செந்தாமரைக் கையால் - 'மாசுச' என்னும் (பெருமாள்) கைபார்த்திருப்பவர்களோ நாங்கள்? நீங்கள் செய்த பாவத்துக்கு அஞ்ச வேண்டா என்கிறது பெருமாளுடைய 'அஞ்சேல்' என்ற திருக்கை. பகவானுடைய மேன்மைக்கு அஞ்ச வேண்டா என்கிறது பிராட்டியின் திருக்கை. அவனும் ஆசைப்படும் கை அன்றோ? 'கைமேல் என் கைவைத்து' (நாச்.திருமொழி 6-9) என்று பெருமானின் தாமரைக் கைக்கு மேலே இருக்கும் கை என்பது உரையாகும்.

'இது எம்பெருமானார் சிறப்பாக உகந்த பாட்டு' -என்பர் அரும்பத உரையாசிரியர்கள்.

இதுபற்றி இருவேறு நிகழ்ச்சிகள் சொல்லப்படுகின்றன:

1. 'எம்பெருமானார் மாதுகரத்துக்காகத்(பிட்சை ஏற்க) திருப்பாவை அனுசந்தானத்துடன் பெரிய நம்பி திருமாளிகையை நோக்கி! எழுந்தருள, பெரிய நம்பி திருமகளான அத்துழாய் திருக்காப்பு நீக்கிய அளவிலே இப்பாட்டுவர' வந்து திறவாய் என்பதற்கு ஏற்ப வந்ததால் அத்துழாயைப் நப்பின்னைய் பிராட்டியாகவே அனுசந்தித்து ஈடுபட்டார் என்பர். ஆகவே இது உடையவர் உகந்த பாசுரமே.

2. நம்பிள்ளைகளின் சீடரான பின்பழகிய பெருமாள் ஜீயர் அருளிய வார்த்தமாலை 206 ஆம் வார்த்தை:

உடையவர் இப்பாசுரத்தை அனுசந்தித்துக் கொண்டு திருக்கோட்டியூர் நம்பி திருவாசலிலே (சீரார் வளை ஒலிப்ப வந்து திறவாய்) என்ற இடத்தை அனுசந்திக்கும் போது நம்பி திருமகளார் தேவகிப்பிராட்டி என்பவர் திருக்கதவைத் திறந்து கொண்டு புறப்பட, உடையவர் விழுந்து தண்டனிட்டுக் கிடக்க, அவர் நெரித்துக்

கொண்டு உள்ளே ஓடிப்புக, 'நம்பி' இது என்பெண்ணே? 'என்ன, 'என்னை' எம்பெருமானார் தண்டனிட்டார் என்ன, 'அதுக்கு பயப்பட வேணுமோ? என்று கூறி, உடையவர் உள்ளே புகுந்தருளியவாறே, 'இளையாழ்வீர் ! அனுசந்தாநம் உந்துமத களிற்றனோ? என்றருளிச் செய்தார் என்று பிள்ளையருளிச் செய்வர்.

வடிவழகிய நம்பிதாசர் இயற்றிய குருபரம்பராபிரபாவம்:

'மாதுகரத் தெழுந்தருளி வரும் போதன்றி போம் போதும்
ஒதும் கோதை திருப்பாவை உரையோடுலா வித் திரிபவரும்
வேதம் வல்ல திருக்கோட்டி நம்பிமனையில் மெய்ஞ் ஞானப்
போதமுடையார் ஆங்கொருநாள் புக்கார் உந்துமத களிற்றில்

என்று வருவதால் இந்நிகழ்ச்சியே ஏற்கத்தக்கது என்பர், திருச்சி ஸ்ரீ கிருஷ்ண சுவாமி அய்யங்கார் அவர்கள்.

<u>உள்ளுறை:</u> ......கோழி அழைத்தன காண்-சாத்விக வேளையான விடியலில் பாகவதர் எழுந்திருந்து பகவத் கைங்கரியத்திற்காக ஒருவரை ஒருவர் எழுப்புகின்றனர். மாதவிப்பந்தல்......காண்-வேதாந்தங்களிலே வேத அர்த்தங்களை அனுபவிக்கும் நாதமுனிகள் போலும் பரம பாகவத சமூகங்கள் சத்துவகுணம் தலையெடுத்த பின்பும் உன்னைக் காணாமையாலே நாக்கு ஒட்டினமை தோற்றப் பலகாலும் கூவுகின்றன. சீரார்வளை ஒலிப்ப-நிரந்தர பகவத் சம்பந்தத் தாலே பூரணங்களாய் பகவத் சம்பந்தங்களைக் குறிக்கும் இரகசியார்த்தங்கள் ஒளிவீச (வந்துதிறவாய்) - (நம்முடைய முயற்சியை விரும்பாமல் நீயே வந்து சொரூப உபாய புருஷார்த்த விரோதி விஷயமான தத்தத ஞானத்தைப் போக்காய். (மகிழ்ந்து)புருஷார்த்தம் உன்னுடையதாக வேண்டும்.

## பத்தொன்பதாம் பாசுரம்

குத்து விளக்கெரியக் கோட்டுக்கால் கட்டில்மேல்
மெத்தென்ற பஞ்ச சயனத்தின் மேலேறிக்
கொத்தலர் பூங்குழல் நப்பின்னை கொங்கைமேல்
வைத்துக் கிடந்த மலர்மார்பா வாய்திறவாய்
எத்தனை போதும் துயிலெழ ஒட்டாய் காண்
எத்தனை யேலும் பிரிவாற்ற கில்லாயால்
தத்துவம் அன்று தகவேலோ ரெம்பாவாய்.

(பொருள்)

குத்துவிளக்கானது எரிந்து கொண்டிருக்க, யானைத்தந்தத்தால் செய்த கால்களையுடைய கட்டிலில், மெத்தென்று இருக்கிற பஞ்சினாலாகிய மெத்தையின் மேலே ஏறி, கொத்தாக மலர்கிற மலர்களை முடித்த மயிர்முடியையுடைய நப்பின்னையினது கொங்கையில் வைத்துக்கொண்டு தூங்குகின்ற பரந்த மார்பை உடையவனே! வாய் திறந்து ஒரு வார்த்தை சொல்வாய், மை தீட்டிய பெரிய கண்களை உடையவளே ! நீ உன் கணவனை எவ்வளவு நாழிகையானாலும்தூக்கத்தினின்றும் உணர்ந்து எழுந்திருக்க சம்மதியாது இருக்கின்றாய் காண் ; ஒரு நிமிட காலம் என்றாலும் கண்ணபிரானைப் பிரிந்து இருத்தலைப் பொறுக்கும் வல்லமை அற்று இருக்கிறாய். (நீ இவ்வாறு இருப்பது) உண்மையாக (உனக்குத்) தகுதியன்று. (ஒட்டுதல்-சம்மதித்தல்)

(சிறப்புப் பொருள்)

கீழ்ப்பாட்டால் நப்பின்னைப் பிராட்டியை உணர்த்திச் "சீரார் வளையொலிப்ப வந்து திறவாய்" என வேண்டினவாறே அவள் கதவைத் திறப்போம் என்று எழுந்து புறப்பட, அது கண்ட கண்ணபிரான் 'நம்மைப் பற்றினாரை இவள் தன் அடியாராக அபிமானிப்து போல, நாமும்இவளைப் பற்றினாரை நம்மடியாராக அபிமானிக்க வேண்டும் அன்றோ? ஆகவே நம்முடையாரான இவ்ஆய்ச்சிகளுக்காக இவள் முற்பட்டுக் காரியம் செய்தாளாகக் கூடாது ; நோக்கிக் கடைதிறவாய்' என்ற இவர்களுக்கு நாம் முற்பட்டுக் காரியம் செய்தோமாக வேண்டும்; அதனால்வரும் புகழ்ச்சியை நாம் பெற வேணும் எனக் கருதித் தான் சடக்கென எழுந்து நப்பின்னையைக் கதவு திறக்க ஒட்டாமல் மற்கட்டாக் கட்டிப் பிடித்து இழுத்துப் படுக்கையில் தள்ளித் தானும் மயங்கி, அவள் மேல் விழுந்து, அவளுடைய திருமேனியைத் தொடுவதால் தானும் மயங்கி, ஆய்ச்சிகள் வந்த காரியத்தையும் மறந்து கிடக்க, இவர்கள் அவனை எழுப்பின அளவில், நப்பின்னை, 'நம்முயற்சியைத் தடைசெய்து ஆய்ச்சிகளின் வெறுப்புக்கு நம்மை உறுப்பாக்கின இவனை வாய்திறக்க ஒட்டுவதில்லை' என்று அவனை விடை சொல்லவும் வல்லமை அறும்படி சிக்கெனக் கட்டிக் கொண்டு கிடக்க, இவர்கள் அந்த நப்பின்னை தன்னையே மீண்டும் உணர்த்தும் பாசுரம் இது. இவ்வாறு மீண்டும் இவளை உணர்த்துவதும் கண்ணபிரானை உணர்த்துவதற்காகவே என்க.

குத்து விளக்கெரிய-என்றது நம்மைப்போல 'பொழுது விடியிற் செய்வது என்?' என்று அஞ்சாமலும், இருளைத் தேட வேண்டாமலும் விளக்கின் ஒளியில் கிடந்து கண்ணன் முகத்தைக் கண்டு களிக்கப் பெறுகின்ற இந்நப்பின்னை என்ன நோன்பு நோற்றாளோ? என்னும் வியப்பை விளக்கும். இவ்விளக்கு விருப்பமான இடத்தில் பேர்த்து வைப்பதற்குரிய விளக்கு. நந்தகோபன் உந்துமத களிற்றனாக் கூறப்பட்டான் ஆதலால் அவனது மாளிகையில் கோட்டுக்கால் கட்டில் இருக்கத் தடையில்லையே.

<u>பஞ்சசயனம்:</u> அழகு, குளிர்ச்சி, மென்மை, மணம், வெண்மை-என்கிற ஐங்குணங்களின் அமைப்பு-சிறந்த சயனத்தின் இலக்கணமாதல் அறிக. இக்குணங்களில் மென்மையும் சேர்ந்திருக்க, மெத்தன்ன-என்று தனியே கூறியது சிறந்த குணமாதலால் என்க. இனி, தளிர், மலர், பஞ்சு, மெல்லிய கம்பளம், பட்டு என்னும் இவ்வைந்து பொருள்களால் செய்யப்பட்ட சயனம் என்றும் பொருள் கொள்வர் சிலர்.

கொத்தலர் பூங்குழல் நப்பின்னை: இதனால் அவளுடைய கூந்தலின் சிறப்பு கூறியவாறு. அரும்புகளைப் பறித்துக் குழலிலே சூடினால் அவைதன் நிலத்தில் போல அலரப்பெற்ற கூந்தலையுடைய நப்பின்னை என்றபடி.

'நீ எழுந்து வராவிட்டாலும் இருந்தபடியாகவே' வருந்த வேண்டா, உமது காரியத்தை முடிப்போம்' என்ற வார்த்தையையாவது சொல்லலாமே, அதுவும் செய்யவில்லையே' -என்ற கருத்து 'வாய் திறவாய்' என்பதில் தோன்றும். 'திறக்கிறவர்களையும் திறக்க ஒட்டாமல் நீயும் கொங்கையின் கீழே அமுக்குண்டால் கிடந்த இடத்தே கிடந்து' மாசுச.' என்னவும் அரிதோ?-என்பது (ஆறாயிரப்படி) அழகியமணவாளப் பெருமாள் நாயனாரின் உரை.

'மலர்மார்பா' வாய்திறவாய் என்ற சொல்லமைதியால், 'நீ உன் மார்பை நப்பின்னைக்குத் தந்தாலும், வாயையாகிலும் எங்களுக்குத் தரலாகாதோ?' என இரக்கின்றமை தோற்றும் என்ப, இவ்வாறு இவர்கள் சொல்லக்கேட்ட பெருமான் 'இவ்ஆய்ச்சிகள் மிகவும் நொந்தனர் போலும், இங்ஙனம் இவர்களை வருத்துவது தருமமன்று;

'இதோ வந்து கதவைத் திறக்கிறேன்' என்று ஒரு வார்த்தை சொல்வோம் என்று திருவுள்ளம் இரங்கி வாயைத் திறக்கத் தொடங்கிய அளவிலே நப்பின்னை, 'அவர்களுக்காகக் கதவைத் திறக்க எழுந்து சென்ற நம்முடைய முயற்சியைத் தடுத்த இப்பெருமானது முயற்சியை நாம் நிறைவேற ஒட்டுவோமோ? என்றெண்ணி கண்ணன் வாய் திறக்க ஒண்ணாதபடி கழுத்தைக் கட்டி அமுக்கிக் கொண்டுகிடக்க, அதனைச் சாலகவாசலாலே கண்ட ஆய்ச்சிகள் நப்பின்னையைப் பார்த்து, 'அடியார் காரியத்தை முடிப்பதற்கென்றே கங்கணம் கட்டியிருக்கும் நீயும் இங்ஙனம் செய்வது தகுதி அன்று காண்' என்கிறார்கள் பின் நான்கடிகளால்.

மைத்தடங்கண்ணினாய் -'மையிட்டெழுதோம்' என்று முதலில் செய்த நியமத்தை மீறி நீ கண்ணில் மையிட்டாயாகில் நாங்களும் உன்னைப் போல்மைத்தடங் கண்ணிகளாகும்படி காரியம் செய்வதன்றோ உனக்குக் கடமை? என்பதாம்.

'நீ உன் மணாளனை எத்தனைபோதும் துயிலெழ ஒட்டாய் காண்' -'நப்பின்னாய் ! கண்ணன் உனக்கு மணவாளனானது ஐந்து இலட்சம் பெண்களுக்கெல்லாம் அனுகூலமாய் இருக்கு மென்று நினைந்திருந்தோம் ; பொதுவாக உண்ணவேண்டியதை நீ உனக்கே அடிமையாக்கி வைத்துக் கொண்டு அப்பால் சிறிதும் நெகிழ ஒட்டாமல் செய்கின்றாயே ! ' என்ற மனவேதனை தோன்றும். மற்றும் துயிலெழ ஒட்டாமைக்கும், பிரிவாற்றகில்லாமைக்கும் காரணம், 'தொட்டகை விட்ட அளவிலே நப்பின்னையின் உடம்பு நிறம் மாறிப் பசப்பூர்ந்து வெளுத்துவிடும் ஆதலின்' என்பது ஆறாயிரப்படி உரை.

இங்கு, "புல்லிக்கிடந்தேன் புடைபெயர்ந்தேன் அவ்வளவில்
அள்ளிக் கொள்வற்றே பசப்பு"

என்றும் குறள் கருத்து நோக்கத்தக்கது. 'காதலரைத் தழுவிக்கிடந்தேன், சிறிது விலகினேன், அவ்வளவில் அள்ளிக் கெள்வது போலப் பசலை என் உடம்பு முழுவதும் பரவிநின்றது' என்பது இதன் பொருள்.

"ஊருண் கேணி உண்டுறைத் தொக்க
பாசியற்றே பசலை, காதலர்
தொடுவுழித் தொடுவுழி நீங்கி
விடுவுழி விடுவுழி பரத்தலானே"

என்ற குறுந்தொகைப் பாடலும் இங்கு ஒப்பு நோக்கத் தக்கது. இதன் கருத்து, 'ஊரிலுள்ள மக்கள் உண்பதற்குரிய நீரையுடைய குளத்தினுள் தொக்கிக் கிடக்கின்ற பாசி போன்றது பசலை நிறம்; (ஏனெனில்) நீரைத் தொட்டஇடத்தில் பாசிநீங்கியும் விட்ட இடத்தில் பாசி படர்ந்தும் இருப்பது போலக் கணவன் தொடும் இடங்களில் எல்லாம் பசலை நீங்கியும், தொடாது விடும் இடங்களில் பசலை பரவியும் இருத்தலால் என்க.

தத்துவம் அன்று தகவு அன்று - புருஷகார பூதையான உனது இயல்புக்கும் ; கண்ணனை எங்களுக்காக எழுப்பாமல் இருக்கிற இது தகுதியன்று; உனது கிருபா குணத்துக்கும் தகுதியன்று, தகவு தத்துவம் அன்று-என இயைத்து, உனக்கு நீர்மை உண்டென்பது உண்மையன்று,

உள்ளுறை:

பஞ்சசயனம்-அர்த்தபஞ்சகம். இது ஒவ்வொரு திருமால் அடியாரும் அறிய வேண்டிய முக்கியமான ஐந்து பொருள்களாகும்.

அவையாவன:-

1. பரமாத்தம சொரூபம் (அ) ஈசுவர சொரூபம்-என்ற மிக்க இறைநிலை
2. ஜீவாத்ம சொரூபம் - என்ற உயிர்நிலை
3. முக்தியளிக்கவல்ல உபாயங்களாகிய தக்க நெறிகள்
4. பரம்பொருளை அடைய முடியாமல் தடுக்கும் இடையூறுகளாம் ஊழ்வினைகள் (ஜீவாத்ம விரோதிகள்)
5. பரமாத்மானுபவம் என்னும் வாழ்வினை (அ) முக்தி

குத்துவிளக்கு-ஞானம் ஒளிவிட;

இப்பாசுரத்தால், 'என்னடியார் அது செய்யார்' என்று பெருமான் பரிவன் ; பிராட்டியும் பரிவாள் ; இவ்வாறு ஒரு வரிலும் ஒருவர் முந்திப் பரிகின்ற இருவருடைய இயல்பும் நன்கு வெளியாகும். நப்பின்னை..... மலர்மார்பன்-பெருமான் பிராட்டியின் பக்திக்கு வசப்பட்டு அவள் சொல்லியபடி நடக்கும் பரதந்திரனாவன் என்பதாம்.

## இருபதாம் பாசுரம்

முப்பத்து மூவர் அமரர்க்கு முன் சென்று
கப்பம் தவிர்க்கும் கலியே ! துயிலெழாய்
செப்பமுடையாய் ! திறலுடையாய் ! செற்றார்க்கு
வெப்பம் கொடுக்கும் விமலா ! துயிலெழாய்
செப்பன்ன மென்முலை செவ்வாய் சிறுமருங்குல்
நப்பின்னை நங்காய் ! திருவே ! துயிலெழாய்
உக்கமும் தட்டொளியும் தந்துன் மணாளனை
இப்போதே எம்மைநீ ராட்டேலோ ரெம்பாவாய்.

(பொருள்) முப்பத்து மூன்று பேரைத்தலைமையினராகவுடைய (முப்பத்து முக்கோடி) தேவர்களுக்கு (ஆபத்து நேருவதற்கு) முன்னமே போய் (அவர்களுக்கு வரக்கூடிய) நடுக்கத்தை (வரவொட்டாமல்) போக்குகின்ற மிடுக்கனே ! நித்திரை நீங்கி எழுந்திருப்பாயாக; (பக்தர்களைக் காக்க வல்ல) நேர்மையுடையவனே! (தீயோரை அழிக்கும்) வல்லமை உடையவனே ! பகைத்தவர்க்கு துக்கத்தைத் தருகின்ற குற்ற மற்றவனே ! துயில் எழாய் ; பொற் கலசங்களைப் போன்ற மென்மையான தனங்களையும், செந்நிறமான வாயையும் சிறிய (நுண்ணிய) இடையையுமுடைய இலட்சுமி போன்றவளே ! நப்பின்னைப் பிராட்டியே! துயில் எழுவாயாக ; (நோன்பிற்கு வேண்டிய) திரு ஆலவட்டத்தையும் (விசிறி) கண்ணாடியையும், உன்னுடைய கணவனையும் (எங்களுக்குக்) கொடுத்து இப்போதே எங்களை நீராடச் செய்வாயாக.

(சிறப்புப் பொருள்) : ஆயர்குலப் பெண்கள் நப்பின்னைப் பிராட்டியைத் தமது வருத்தம் தோன்ற 'தத்துவமன்று தகவு' என்று கூறியதனால்,அவள் பேசாமல் கிடக்க, கண்ணனையே எழுப்பிப் பார்ப்போம் என்று அவனது புகழை விரிவாகச் சொல்லித் துயிலெழுப்ப, அவனும் பேசாமல் கிடந்ததால், நப்பின்னையை வெறுத்துக் கூறவே இக்கண்ணன் ஒரு கால் ரோஷம் கொண்டு வாளாவிருத்தல் கூடும்; ஆகவே அப்பிராட்டியையே புகழ்ந்து கோபத்தைத் தணிவித்து அவள் மூலமாகவே நம்முடைய விருப்பத்தைப் பெறுவோம் என்று அவளுடைய ஆத்ம குணங்களையும் தேக குணங்களையும் கூறி அப்பிராட்டியையே துயில் உணர்த்துகின்றனர் இப்பாசுரத்தில்.

முப்பத்து மூவரமரர் : வகுப்பு ஒன்றுக்கு ஒரு கோடியாய், 33 கோடி தேவர்கள் என்றபடி. வசுக்கள் 8 பேர் ; உருத்திரர் 11 பேர் ; ஆதித்தியர் 12 பேர் ; அசுவனி தேவதைகள் இருவர். ஆக அமரர் முப்பத்து மூவராய், முக்கியரான அவர்களைக் கூறியது மற்றுள்ளாரையும் கூறியவாறாகவும் கொள்க.

'முப்பத்து மூவர்.......கலியே' -என இவர்கள் கண்ணனை நோக்கி விளித்ததற்கு இருவகையான கருத்துக்கள் கூறுவர்.

(தேவர்கள்)'ஆண்புலிகளாயும், மிக்க வலிமையுடையவராயும், சுய காரியவாதிகளாகவும், தங்கள் காரியம் முடிந்த அளவிலே உன்னையே எதிர்ப்பவர்களாயும், உன்னை எழுப்பி எதிரிகளின் அம்புக்கு இலக்காக்குபவர்களாயும், கொன்றாலும் இறவாதவராயும், உன் வடிவழகின் அனுபவத்தையே இன்பமாகக் கொள்ளாமல் அமிழ்தத்தை இன்பமாக விரும்புபவர்களாயும், துன்பம் ஏற்பட்டால் நீக்கிக் கொள்ள வல்லவராயும் உள்ள தேவர்களுக்கோ நீ உதவு புரிய வேண்டுவது ?'

(நாங்கள்) வலிமையற்ற பெண்களாயும், "உமக்கே நாம் ஆட்செய்வோம்" என்று உன் திறத்தில் கைங்கரியத்தையே புருஷார்த்தமாக உடையேமாயும், "எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்தன்னோடு உற்றோமே ஆவாம் " என்று காலதத்துவம் உள்ள அளவும் உனக்கு அணுக்கராயும், "அடிபோற்றி ! திறல்போற்றி ! புகழ்போற்றி ! குணம் போற்றி ! கையில் வேல் போற்றி ! " என்று இப்படி மங்களாசாசனம் செய்வதையே இயல்பாக உடையேமாயும், 'அங்கண் இரண்டும் கொண்டு எங்கள் மேல் நோக்குதியேல், எங்கள் மேல் சாபம் இழிந்து ' என்று உன் திருவருள் ஒன்றையே ஆசைப்பட்டிருப்போமாயும், உன்னை ஒருநொடிப் பொழுது பரியில் நீர்நீத்த மீன்போல் துடித்து முடியக் கடவேமாயும், 'உண்ணும் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணன்,' என்று இருப்பவர்களுமான எங்களைக் காத்தருளுவதன்றோ உனக்குப் பெருமை ஆகும்' என விநயம் (பணிவு) தோற்றக் கூறுதல் ஒரு கருத்தாம்.

இங்ஙனம் அளவற்ற ஆண்புலிகளைக் காத்து நீ படைத்த புகழ்முழுவதும், இன்று நீ எம்மை நோக்காத மாத்திரத்தால் இழக்கப்பட்டதேயாம் என மிடுக்காகக் கூறுவதும் ஒரு கருத்தாம்.

அமரர்-என்றும் இறவாதவர் ; கம்பம்-நடுக்கம் ; இங்கு எதுகை நோக்கிக் கப்பம் என வலித்தல் விகாரமாயிற்று.

செப்பம் உடையாய் - செப்பம் திரிகரண நேர்மை (மனம், வாக்கு, உடல்) அதாவது இவை மூன்றும் ஒன்றுபட்டிருத்தல். செப்பம்-செம்மை; அதாவது கருத்தும், சொல்லும், செயலும் தம்முள் மாறுபடாமை என்று பரிமேலழகர் கூறுவார்.

வெப்பம்-ஜீரம் ; அதாவது பய ஜீரம் ; மலம்-குற்றம் ; விமலன்-குற்றம் அற்றவன் ; 'விமலா துயிலெழாய் ' என்று வேண்டியபோதும், அவன் வாய் திறந்து ஒரு பேச்சுப் பேச வல்லமையற்றுக் கிடக்க, மீண்டும் நப்பின்னையை உணர்த்தத் தொடங்கினர் பின்னடிகளால்.

செப்பன்ன மென்முலை-தனங்களுக்கு வன்மையைச் சிறப்பாகக் கூறுதல் கவிமரபாயிருக்க, இங்கு மென்மையைச் சிறப்பித்துக் கூறக் காரணம், இவை ஒரு கணப்பொழுதும் இன்பப் பிரிவை பொறுக்க இயலாதன என்பது பற்றி.

'திருவே துயிலெழாய்' -பிராட்டியின் திருநாமத்தை நீ ஏற்றிருப்பதற்கு இணங்க அவளுடைய குணங்களும் உனக்கு வர வேண்டும் அன்றோ ? அவள் அடியவருக்காகப் பத்து மாதம் பிரிந்து ஊணும் உறக்கமும் அற்றுச் சிறையில் அகப்பட்டுப் பட்டபாடுகளை நீ படவேண்டா ; எங்களுக்காக இப்போது துயில் எழுந்தாயாகில் போதும் என்கின்றனர்.

'துயிலெழாய்' என்பதைக் கேட்ட பின்னை, 'ஆய்ச்சிகாள்' நான் உறங்கவில்லை ; கண்ணபிரானால் உங்களுக்குப் பெறுவிக்க வேண்டியவற்றை எண்ணிக் கொண்டிருக்கின்றேன் ; நான் எழுந்து செய்ய வேண்டுவதென்ன? சொல்லுங்கள் என்ன, 'நோன்புக்கு வேண்டிய உபகரணங்களை எல்லாம் தந்தருளி, உன் மணாளனையும் எங்களையும் நீராட்டுவிக்க வேணும் என வேண்டுகின்றனர். நீராட்டு-கூடியிருக்கச் செய் என்பதாம். மணாளனை-மணாளனொடு ; உருபு மயக்கம். அன்றி, மணாளனையும் எம்மையும் என்றும் பொருள் கொள்ளலாம்.

விசிறியும் கண்ணாடியும் தரும்படி வேண்டிய இது -மற்றும் வேண்டியவை எல்லாவற்றையும் விரும்பியதற்கு இனங்குறித்தலாம். இப்போதே-இக்கணம் தப்பினால் பின்பு ஊராரும் இசையார் ; நாங்களும் உயிர் வாழ்ந்திருக்க மாட்டோம் என்பதாம்.

எம்மை-என்று விரகம் தின்ற உடம்பைக் காட்டுகிறபடி.

உள்ளுறை: பிரிவில் ஆற்றமாட்டாத எங்களுக்கு அகங்கார மமகார நீக்கத்தையும் (யான் எனது என்னும் செருக்கு) சொரூப ஞானத்தையும் தந்து உனக்கு அடங்கிய ஈசுவரனை எங்களோடு சேர்ப்பிக்க வேணும் என்பதாம்.

மிக்க பெருந்திரளான ஞானிகளுக்கு பிரகிருதித் தொடர்பால் அஞ்ஞானம் உண்டாவதற்கு முன்னமே அவர்களுக்கும் அஞ்ஞானத்தை வரவொட்டாமல், தடுப்பவனே ! என்பது முதல் இரு அடிகளின் தேர்ந்த பொருள்.

"உளன்கண்டாய் நல்நெஞ்சே ! உத்தமன் என்றும்
உளன்கண்டாய் உள்ளுவார்உள்ளத்து உளன்கண்டாய்...."
-முதல் திருவந்தாதி -99

## இருபத்து ஒன்றாம் பாசுரம்

ஏற்ற கலங்கள் எதிர்பொங்கி மீதளிப்ப
மாற்றாதே பால் சொரியும் வள்ளல் பெரும் பசுக்கள்
ஆற்றப் படைத்தான் மகனே அறிவுறாய்
ஊற்ற முடையாய் ! பெரியாய் ! உலகினில்
தோற்றமாய் நின்ற சுடரே ! துயிலெழாய்
மாற்றார் உனக்கு வலி தொலைந்து உன் வாசற்கண்
ஆற்றாது வந்து உன் அடி பணியுமா போலே
போற்றியாம் வந்தோம் புகழ்ந்தேலோ ரெம்பாவாய்.

(பொருள்) (பாலைக் கறக்குமாறு) கொண்ட பாத்திரங்கள் (நிறைந்து) மேலே எதிராகப் பொங்கி வழியும்படியாக இடைவிடாமல் பாலைச் சுரந்து தருகின்ற உதார குணத்தையுடைய பெரிய பசுக்களை மிகுதியாக உடைய நந்தகோபரது பிள்ளாய் ! எழுந்திருப்பாய் ; (அடியாரைக் காப்பதில்) முயற்சி உடையவனே ! (வேதங்களாலும் காணமுடியாத) பெருமை உடையவனே ! உலகினில் திருவவதரித்து ஒளிவடிவானவனே ! துயில் எழுவாயாக ! பகைவர் உன்னோடு எதிர்ப்பதற்கு வலிமை ஒழிந்து எதிர்த்து நிற்கமுடியாமல் உன்வாசலிலே வந்து உனது திருவடிகளை வணங்கும் விதம் போல

நாங்களும் (உன்னைக்) கொண்டாடிக் கொண்டு (உனக்குப் பல்லாண்டு பாடி வந்தோம்.

(சிறப்புப் பொருள்)

கீழ்ப்பாட்டில் நப்பின்னைப் பிராட்டியை எழுப்பிய பின்னர், அவள் உணர்ந்து எழுந்து வந்து, 'தோழிகளே ! நான் உங்களில் ஒருத்தி அன்றோ ? உங்கள் காரியத்தைக் குறைவில்லாமல் முடித்து வைக்கின்றேன் ; நீங்கள் சிறிதும் வருந்த வேண்டா ; நாம் எல்லாரும் கூடிக் கண்ணபிரானை வேண்டிக் கொள்வோம் வாருங்கள்' என்ன, அங்ஙனமே நப்பின்னைப் பிராட்டியும் உட்பட அனைவருமாகக் கூடிக் கண்ணபிரானின் வீரத்தைச் சொல்லிப் புகழ்ந்து அவனை உணர்த்தும் பாசுரம் இது.

முதல் இரண்டரை அடிகளால் நந்தகோபருடைய செல்வத்தைப் புகழ்கின்றனர். கீழ், 17, 18 பாசுரங்களில் நந்த கோபருடைய அறநெறித் தலைமையும் தோள்வலி வீரமும் புகழப்பட்டன. இதில் அவருடைய கறவைச் செல்வத்தின் சீர்மை கூறப்படுகிற தென்று உணர்க. இவர்கள் பலமுறையும் கண்ணன் எம்பெருமானை அழைக்கும் போது 'நந்தகோபன் மகனே ' என்று அழைப்பதற்குக் கருத்து யாதெனில், பரமபதத்தில் இருப்பை நீக்கி, பனிக்கடலில் பள்ளிகோளைப் பழகவிட்டு, நீ இத்திருவாய்ப் பாடியில் நந்தகோபருக்குப் பிள்ளையாய்ப் பிறந்தது இவ்வாறு கிடந்து உறங்கவோ? எங்கள் குறையைத் தீர்ப்பதற்காக அன்றோ) நீ அறிவொன்றும் இல்லாத ஆய்க்குலத்தில் பிறந்தது ; ஆன பின்பு, நீ பிறந்த செயலை நோக்கவேண்டாவோ ? என்றபடி.

'ஏற்ற கலங்கள்' என்ற சொல்லாற்றலால், கலம் இடுவாருடைய குறையே அன்றி இட்ட கலங்களைப் பசுக்கள் நிறைக்கத் தடையில்லை என்பதும், சிறிய கலம் பெரிய கலம் என்னும் வேறுபாடின்றிக் கடலை முகந்து ஊற்றினாலும் நிறைக்கத் தடை இல்லை என்பதும் பெறப்படும்.

எதிர் பொங்கி மீதளிப்ப-ஒரு முறை காம்பைத் தொட்டுவிட்டாலும், காம்பின் பெருமையாலே ஒரு பீறிலே கலங்கள் நிறைந்து பால் வழிந்தோடினாலும், காம்பின் கடுப்பாலே மேன்மேலும் சொரியும் ஆதலால் எதிர்பொங்கி மீதளிக்கும்.

மாற்றாதே பால் சொரியும்-என்ற சொல் நயத்தால், 'இட்ட கலங்கள் நிரம்பின இனிக்கலம் இடுவாரில்லை' என்று பால் சொரிவதைப் பசுக்கள் நிறுத்தாவாம் என்றவாறு.

வள்ளல் பெரும் பசுக்கள் -வேண்டிய போதெல்லாம் சிறுபிள்ளைகளும் கறக்கலாம்படி பாலைமிகுதியாகத் தருவன. வள்ளல்தன்மை-வேண்டுவார்க்கு வேண்டியதை மாறாமல் கொடுக்கும் தன்மை. மேலும் கண்ணனைப் போல, பெண்ணுக்கும் பேதைக்கும் அணைக்கலாம்படி அடக்கமாய் இருக்கை. கண்ணன் தொட்டுத் தடவுவதால் வளரும் பசுக்கள் ஆதலால் அவனோடு ஒக்கப் பெருத்திருக்கை.

ஆற்றப் படைத்தான் மகனே ! அறிவுறாய் - நீ உன் தந்தையாருடைய செல்வத்தை நினைத்தாயானால் அச்செல்வச் செருக்காலே உணர்ந்து எழுந்திருக்க வேண்டியதில்லை. பரமபதத்தையும் பாற்கடலையும் விட்டு இங்குத் திருவாய்ப்பாடியில் நீவந்தது செல்வச் செருக்குக் கொண்டு கிடந்து உறங்குவதற்கோ ? உன்னை அடைந்தார் குறையைத் தீர்ப்பதற்குஅன்றோ ? ஆனபின்பு இங்ஙனம் உறங்கலாமோ? என்பது குறிப்பு.

அறிவுறாய்- 'என்று இவர்கள் எழுப்பவேண்டும்படி அவன் உள்ளே செய்கிறதென் எனில், தனக்கு இத்தனை பெண்கள் கைப்பட்டவர்கள் என்றும், இனி இத்தனை பெண்களைக் கைப்படுத்த வேண்டும் என்றும் ஆராய்ந்து கொண்டு கிடக்கிறான் என்று அறிக' -என்பது ஆறாயிரப்படி.

அறிவுறாய்-எல்லாம் உணர்ந்தபெருமானையும் உணர்த்த வேண்டும்படி இருக்கும் நிலைமை.

இவர்கள் இங்ஙனம் புகழ்ந்து உணர்த்துவதைக் கேட்ட பெருமான் இப்புகழ்ச்சி எதற்காக?இப்படிப்பட்ட கறவைச் செல்வம் இவ் ஆய்ப்பாடியில் யார்க்கில்லை?இது நமக்கு ஏற்றமோ?என நினைத்து வாய்திறவாதிருக்க, இவர்கள் மீண்டும் சில பெருமைகளைக் கூறி உணர்த்துகின்றனர். உலகினில் தோற்றமாய் நின்ற சுடரே-காதால் கேட்டதோடு நில்லாது பலபடியாகத் திடுவவதரித்து அதனால் மிகுதியாக உலகில் விளங்குகின்ற திருக்கலியாண குணங்களை உடையவனே ! எம்பெருமானுடைய

அவதாரங்கள் கருமத்தினால் அல்லாமல் விருப்பத்தினால் ஆவதால், அவ் எம்பெருமானுக்கு மேன்மையையே உண்டாகும் என்க. 'நிலை வரம்பில பலபிறப்பாய் ஒளிவரும் முழுநலம். (சம்சாரிகளைப் போலப் பிறக்கப் பிறக்கக் கரை ஏறுவதன்றி சாணையிலிட்ட மாணிக்கம்போல ஒளிவிட்டிருப்பதால், அவ்எம்பெருமானுக்கு மேன்மையே உண்டாகும் என்பதாம்.

ஊற்றம்-வேதங்களில் ஊன்றி இருத்தல் ; ஊற்றம் - திண்மை.

மனிதரால் இயற்றப்படாத வேதத்திற்குப் பொருளாய் இருக்கின்ற திண்மையை உடையவனே ! அடியாரை நோக்குவதில் ஊற்றம் உடையவனே ! என்றும் பொருள் கொள்ளலாம்.

பெரியாய் ! - அளவற்ற வேதங்கள் எல்லாம் கூடிக் கூறிய போதும் எல்லை காண ஒண்ணாத பெருமையை உடையவனே !

உலகில் தோற்றமாய் நின்ற சுடரே ! - பிறக்கப் பிறக்க சம்சாரிகள் ஒளி மழுங்கப் பெறுவது போலன்றி, இவனுடைய பிறவி ஒளியை மிகுவிப்பதால் 'சுடரே ! எனப்பட்டது. இன்னார் தூதன் என நின்றான்' -என்றபடி அடியாரிடம் உள்ள பேரன்பினால் வந்த ஒளியை உடையவனே ! என்றும் பொருள். துயிலெழாய் - நீ இப்பொழுது துயில் எழாவிட்டால் நீ பிறந்து படைத்த செல்வமும் குணங்களும் எல்லாம் மழுங்கிப் போய்விடும் காண் ; மிகவும் அருமைப்பட்டு அவற்றைச் சம்பாதித்த நீ ஒரு நொடிப் பொழுதில் எளிதாக அவற்றை இழவாமல் அவை நிறைவேறும் படி திருப்பள்ளி உணர்ந்தருளாய் என்பது உள்ளுறை.

இவர்கள் இங்ஙனம் வேண்டக் கேட்ட பெருமான், 'ஆய்ச்சிகாள் !' நல்லது ; நாம் எழுந்திருக்கிறோம் ; நீங்கள் வந்தபடியை ஒரு பாசுரமிட்டுச் சொல்லுங்கள் என்று நியமிக்க, இவர்கள் தாங்கள் வந்தபடிக்கு ஒரு எடுத்துக்காட்டு தந்து கூறுகின்றனர். 'மாற்றார் உனக்கு என்று தொடங்கி மூன்றடிகளால்.

'உன் பகைவர்கள் உன் வலிக்குத் தோற்று உன் காலில் வந்து விழுவது போல, ஆசை உயிரை முடிய ஒட்டாமையால் எங்கள் இயல்பைப் பாராமல் குணங்களுக்குத் தோற்று, ஆற்றாமை இருந்த இடத்தே இருக்க ஒட்டாது எங்களைத் தள்ள உனக்கு மங்களா

சாசனம் செய்பவர்களாய் வந்தோம் என்பதாம்.

வலிதொலைகையாவது-வணங்காமுடிகளாய் இருப்பதற்கு உறுப்பான முரட்டுத் தனத்தை முடித்துக் கொள்வது.

ஆற்றாது வந்து-இராமபிரான் பிரமாஸ்திரம் தொடுத்துவிட வேண்டும்படி பிராட்டி விஷயத்தில் மிகவும் அபசாரப்பட்டு எத்திசையும் உழன்றோடி எங்கும் புகலற்று இளைத்து விழுந்த காகம் போல் வந்து என்பதாம்.

பணியுமாறு போலே > பணியுமாபோலே என்று 'ஆ' குறைந்து நின்றது, ஆறு-வழி ; யாம் வந்தோம் - பகைவர் உன்னுடைய அம்புக்குத்தோற்று அது பிடரியைப் பிடித்துத் தள்ளத் தள்ள வந்ததுபோல, நாங்கள் உன்னுடைய அழகு, எளிமை முதலிய குணங்கள் பிடித்திழுக்கும் அன்புக்குத் தோற்றுவந்தோம் என்க.

போற்றி, புகழ்ந்து, வந்தோம்-பெரியாழ்வாரைப் போலவும் வந்தோம் ; அல்லாதாரைப் போலவும் வந்தோம் ; நாங்கள் செய்வதெல்லாம் செய்தோம் ; நீ பெறினும் பெறு ; இழக்கிலும் இழ என்று - என்பது ஆறாயிரப்படி. போற்றுகையாவது - திருப்பல்லாண்டு பாடுகை ;

<u>உள்ளுறை:</u>

உபதேசத்துக்கு ஏற்றவராகி, தமது உபதேசத்தாலே முழுமையான ஞானம் உள்ளவர்களாய், பகவத் குண அனுபவத்தாலே சிறந்திருக்கும் சீடர்களை மிகுதியாகப் படைத்த ஆசாரியரிடம் அன்புள்ளவனே ! அடியார்க்கு அருளும் தன்மையை அவதாரத்தில் வெளியிடுபவனே ! பகைவர் அம்புக்குத் தோற்றுக் காலில் வந்து விழுவதுபோல நாங்கள் உன் குணங்களுக்குத் தோற்று, பிறர்க்கு அடிமை செய்வதும் அகப்புறப் பற்றுகள் நீங்க, நீயே அடையத் தக்க பேறு எனவும், அதற்குரிய வழி எனவும் அறுதியிட்டு பெருவிருப்பாலே உனது வாசலிலே மங்களாசாசனம் செய்து வந்து அடைந்தோம். ஆகையால் சிந்தையை விட்டு,பாதுகாக்கப்படும் பொருளாகிய எங்களைக் காப்பாயாக என்பதாம்.

## இருபத்து இரண்டாம் பாசுரம்

அங்கண்மா ஞாலத் தரசர் அபிமான
பங்கமாய் வந்துநின் பள்ளிக் கட்டிற்கீழே
சங்க மிருப்பார்போல் வந்துதலைப் பெய்தோம்
கிங்கிணி வாய்ச் செய்த தாமரைப் பூப்போலே
செங்கண் சிறுச் சிறிதே எம்மேல் விழியாவோ
திங்களும் ஆதித் தியனும் எழுந்தாற்போல்
அங்கண் இரண்டும் கொண்டு எங்கள் மேல் நோக்குதியேல்
எங்கள்மேல் சாபம் இழிந்தேலோ ரெம்பாவாய்.

(பொருள்) அழகிய இடமுடையதான பெரிய பூமியைஅரசாட்சி செய்த அரசர்கள் (இவ்வுலகம் நம்முடையதென்று கொண்டிருந்த) மமகாரம் (புறப்பற்று) நீங்கப் பெற்று நீ பள்ளி கொண்டிருக்கிற கட்டிலின் கீழே திரள் திரளாக (அந்தரங்கமாக)இருப்பவர் போல, (நாங்கள் உன் குணங்களிலே ஈடுபட்டு நீ உள்ள இடத்தைத் தேடி) வந்து (எல்லாரையும் எழுப்பிய சிரமம் பயனடையும் படி) உன்னைக் )கிட்டப் பெற்றோம். சிறிதே மலர்ந்த தாமரைப் பூப்போலே சிறிது சிறிதாக (வாத்சல்ய குணம் தோன்றும்படி) சிவந்துள்ள உன் திருக்கண்கள் (அடியவரான) எங்கள்மேலே விழித்தலாகாதோ? சந்திரனும் சூரியனும் (ஒரு சேரத்) தோன்றியது போல (கருணையையும் சீற்றத்தையும் ஒருங்கே கொண்ட) அழகிய திருக்கண்கள் இரண்டையும் கொண்டு எங்களிடத்துள்ள பாவம் (பிரிவுத் துயரம்)இழிந்து போகும்படி எங்கள் மேல் அருள்செய்வாயாக.

(சிறப்புப் பொருள்) கீழ்ப்பாட்டில்,! 'மாற்றார் உனக்கு வலி தொலைந்து ' -முதலிய கருத்துகளால் தாங்கள் போக்கற்று வந்ததைக் கூறின இடத்தும், 'இன்னமும் இவர்களுடைய உள்ளக்கருத்தை அறியக் கடவோம்' என்று கண்ணபிரான் பேசாமல் கிடக்க, அது கண்ட ஆய்ச்சிகள், 'பெருமானே ! இப்படியோ இன்னும் உன் திருவுள்ளத்தில் ஓடுவது ? எமக்கு நீதான் புகலாகாது ஒழிந்தாலும் வேறொரு புகலைத் தேடி ஓடாதபடி வேறு புகலற்றவராய் வந்து அடிபணியநின்ற எங்களை நீ அருள் செய்தருள வேண்டும் என்று வேண்டும் பாசுரம் இது. (நிறைந்து-நிறைந்திடும்-என 3 ஆம் பாசுர ஈற்றடியில் பொருள் கொண்டதுபோல, இப்பாட்டின் ஈற்றடியிலும் 'இழிந்து' என்பதை 'இழிந்திடும்'

என்னும் வினைமுற்றின் குறையாகக் கொள்ள வேண்டும்.) ஒரு நாயகமாய் உலகம் முழுவதையும் தம்முடையது என்று அபிமானத்து ஆண்ட அரசர்கள், எதிரிகளால் தாக்கப்பட்டு அரசாட்சி முழுவதையும் தோற்று, மமகாரமெல்லாம் நீங்கித் தம்முடைய செல்வச் செருக்கு ஒழிந்ததால் தத்துவ ஞானம் தலை எடுக்கப் பெற்று ! ஸ்ரீமந் நாராயணனே நமக்குப் புகல் என்னும் உறுதியான எண்ணத்தை அடைந்து, ஏகாந்தமாக நீ எழுந்தருளி இருக்கிற இடத்தில்; வந்து கிடப்பர் ; அது போல, நாங்கள் உனது குணங்களுக்குத் தோற்று பெண்மை என்னும் அபிமானம் நீங்கி நீ உள்ள இடத்திலே அந்தரங்கமாக வந்துவிட்டோம் ; நீ எங்களுடைய விரக தாபம் எல்லாம் தீரும்படி உனது திருக்கண்களால் மெல்ல மெல்லக் கடாட்சிக்க வேணும் என்று, இதனால் கண்ணபிரானை முன்பு எழுப்பிய இடைச்சிறுமியர் வேண்டுகின்றனர்.

அரசர்கள் அபிமானம் ஒழிந்த பின்பு தாம் தாம் இருந்த இடத்தே பகவானைத் தியானித்துக் கொண்டு இராமல் பெருமானுடைய பள்ளிக்கட்டில் கீழே திரளாக் கூடுவது-மீண்டும் யாரேனும் முடிசூட்டி அரசைப் பாதுகாப்பாய் என்று நம்மை வலியுறுத்தினால் என் செய்வது?என்கிற (பழைய எளிமையை நினைந்த) அச்சத்தினாலேயாகும். இனி, இங்குச் சொல்லப்படு-கின்றவர்கள்-கண்ணபிரானோடு எதிர்த்துப் போரிட்டு எதிரே நிற்க இயலாமல் சரணடைந்தவர் என்றும் கொள்ளலாம். அம்புக்குத் தோற்ற அரசர்கள் வேறு போக்கு இல்லாமையால் புகுந்தார்கள்; ஆய்ச்சியரோ குணத்துக்குத் தோற்று கைங்கரியத்துக்காகப் புகுகின்றார்கள் என உணர்க. பள்ளிக்கட்டில்-தூங்குமஞ்சம் ; சிங்காதனம் என்பர்.

ஆய்ச்சிகள் 'வந்து தலைப் பெய்தோம்' என்றதைக் கேட்ட எம்பெருமான், 'பெண்களே !' என்ன, உன்னுடைய திருவருள் பெற நினைத்தன்றோ நாங்கள் வந்தது ; அதைப் பெற வேண்டாவோ ? என்கின்றனர், 'கிங்கிணி வாய்ச் செய்த' முதலியவற்றால்.

ஒரே நேரத்தில் சூரியனும் சந்திரனும் உதித்தால் தாமரை மலர் பாதி மலர்ந்தும் பாதி குவிந்தும் இருக்கும் என்று கொண்டு, பெருமானுடைய திருக்கண்களுக்கு அந்நிலைமையை வேண்டுகின்றனர். இது இல்பொருள் உவமை ஆகும்.

கண்ணனுடைய திருக்கண்கள் அடியார்களுடைய குற்றங்களை நினைத்துப் பாதிமூடியும், அவர்களுடைய கூக்குரலைக் கேட்டுப் பாதி திறந்தும் இருக்கும் ஆதலால் அதற்கு இவ்வுவமை மிகவும் பொருந்துவதாகும். கிங்கிணி வாய்ச் செய்தல்-சிறிது அலர்தல். இது இப்பொருள் உடையதாதலை திருக்கோவையாரில், 'கிங்கிணிவாய்க் கொள்ளும் கள்ளகத்த கழுநீர் மலர் இவள்' என்ற இடத்துப் பேராசிரியர், 'சிறிதே மலரத் தொடங்கும் தேனை அகத்துடைய கழுநீர் மலர் இவள்' என எழுதிய உரையால் அறியலாம். கிங்கிணி-வாய்ப்புறம் சிறிது திறந்த ஒருவகைச் சதங்கை.

முதலிலேயே முழுமையாகத் திருவருள் செய்தருளினால் தாங்கப்போகாதென்று, பொறுக்கப் பொறுக்கத் திருவருள் செய்ய வேண்டும் என்கின்றனர். சிறுச்சிறிதே என்பதனால் முழுநோக்கமும் வேண்டும் என்பதில்லை என்று கருத்து.

இங்கு, 'சிறுச் சிறிதே' என்று சொல்லி வைத்து, மேல் 'அங்கண் இரண்டும் கொண்டு' என்று சொல்லுதல் பெருந்துமோ எனில், முழுநோக்கும் பொறுக்கும் அளவானவாறே 'இரண்டும்' என்று சொல்லுகிறார்கள் எனக் கொள்ள வேண்டுவது. 'விழியாவோ' என்ற சொல்லமைப்பை நோக்கும் போது, கோடையோடின பயிரிலே ஒரு பாட்டம் (மழைபெய்வது) என்பது போல, சாதகம் எனும் பறவை மழைத்துளியை ஆசைப்படுவது போலே இவர்கள் விருப்பம் இருந்தபடிஎன்னே ! என்ற ஆச்சரியமும், இரக்கமும் தோன்றுகிறது.

கிண்கிணிவாய் செய்த-இவ்விடத்து 'செய்த' என்பது உவமஉருபு. சாபம்-அனுபவித்தே தீர்க்க வேண்டும் படியான துக்கம்.

'கிங்கிணிவாய்.........விழியாவோ' -என்ற தொடருக்கு முழுநோக்கமும் வேண்டும் என்பதில்லை என்று கருத்து. 'சீற்றத் தோடருள் பெற்றவன்' என்றபடி அடியவரிடம் கருணையும், பகைவரிடம் சீற்றமும் ஒருங்கே தோன்றுவதால், 'திங்களும்..........எழுந்தாற்போல்' என்றார். கதிர் மதியம் போல் முகத்தான் என்றாற்போல இரணியனிடம் சீற்றம் செல்ல, பிரகலாதனிடம் அனுகூலமாய் கண்ணில் அன்பு இருந்தது அன்றோ? 'சிம்மம் ஆனையுடன் பேரிட்டாலும் குட்டிக்கு முலை கொடுக்குமாபோலே' என்பர் பட்டர்.

'எங்கள் மேல் சாபம் இழிந்து (நீங்கும்படி) அங்கண் இரண்டு கொண்டு நோக்குதியேல் (அதைப் பெறுவதற்காக) அங்கண்மா ஞாலத்தரசர்..........போல் வந்து தலைப்பெய்தோம் ; செங்கண் எம்மேல் விழியாவோ ? என்பது ஆறாயிரப்படி உரையாசியர் காட்டும் அன்வயம். சாபம் இழிந்து-சாபம் இழிந்துபோம் என்பதாம். பிரமசாபம் மார்பில் வேர்ப்பாலே போக்கலாம் ; தூர்வாசரின் சாபம் திருமகள் அருளால் போக்கலாம். கௌதமர் சாபம் காலில் பொடியால் போக்கலாம்; தக்ஷ சாபம் ஒரு தடாகத்திலே முழுக்கிட்டுப் போக்கலாம். எங்கள் சாபம் நீங்க இத்தனையும் வேண்டும் என்பதாம்.

வேறு தெய்வத்தை விரும்பாத வராய்க்கிட்டின எங்களுடைய தேக அபிமானத்தை நீக்கி, அடிமைப்பண்பை அறிவித்து எனக்கு நான் தலைவன் என்கிற எண்ணத்தையும் நீக்கி, உபாயாந்தரங்களை விட்டு எம்பெருமானான நீயே உபாயம் என்னும் ஞானத்தை உண்டாக்கி, பரனுக்கு வசப்பட்டிருக்கும் ஞானத்தைப் பிறப்பித்து, அதனால் உன் முக உல்லாசமான கைங்கரியத்தையும் உண்டாக்கி, இப்படி உன் மிகுந்த கருணையினாலே பரம பக்தியை முறையாக உண்டாக்கினாயானால் எங்களுடைய சம்சாரத்துக்கங்களும், உன்னை இழந்திருந்த துயரமும் நீங்கும் என்பதாம்.

"....வெள்ளத்தின் உள்ளானும் வேங்கடத்து மேயானும்
உள்ளத்தின் உள்ளான் என்று ஓர்."

-முதல் திருவந்தாதி-99

## இருபத்து மூன்றாம் பாசுரம்

மாரி மலைமுழைஞ்சில் மன்னிக் கிடந்துறங்கும்
சீரிய சிங்கம் அறிவுற்றுத் தீவிழித்து
வேரி மயிர்பொங்க எப்பாடும் பேர்ந்துதறி
மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டு
போதருமா போலேநீ பூவைப்பூ வண்ணா உன்
கோயில் நின் றிங்ஙனே போந்தருளிக் கோப்புடைய
சீரிய சிங்கா சனத்திருந்து யாம்வந்த
காரியம் ஆராய்ந் தருள் ஏலோ ரெம்பாவாய்.

(பொருள்) மழைக் காலத்திலே மலைக்குகையில் பொருந்தி படுத்து உறங்கும் பெருமையுள்ள சிங்கம் உறக்கம் தெளிந்து, நெருப்புப் பொறிபறக்க விழித்து, (தனது) மணமுள்ள உளைமயிர்கள் நெறிக்க நான்குபக்கமும் புடைபெயர்ந்து (உடம்பை) உதறி, பெருமை தோன்ற (உடம்பு) நிமிர்ந்து கர்ச்சனை செய்து (குகையிலிருந்து) வெளிப்பட்டு வெளிவருவது போல, காயா மலர் போன்ற நிறத்தவனே ! நீ உனது இருப்பிடத்தில் இருந்து (நாங்கள் இருக்கிற) இங்கே அருள் கொண்டுவந்து (பலவேலைப் பாடுகள்) பொருந்தியுள்ள சிறந்த சிங்காதனத்தில் வீற்றிருந்து நாங்கள் வந்து இருக்கிற காரியத்தை ஆலோசித்துக் கருணை செய்வாயாக.

(சிறப்புப் பொருள்) இவ்ஆய்ச்சிகள் 'சங்கம் இருப்பார் போல் வந்து தலைப்பெய்தோம்' என்று வேறு புகலற்று உன்னை நோக்கிவந்து விழுந்தோம் என்று கூறியதைக் கேட்ட பெருமான், கடுக உணர்ந்தருளி, 'பெண்களே ! மிகவும் வருந்தி இவ்வளவு தூரம் வந்தீர்களே ! உங்கள் இருப்பிடம் தேடி வந்து உங்களை நோக்குவதன்றோ எனக்குக் கடமை ! என் இயல்பை நீங்கள் நன்கு உணருவீர்கள் அன்றோ ! யாரேனும் பகைவர் கையிலகப்பட்டுத் துன்பப்பட்டு நம்மிடம்வந்து முறையிட்டால், நான் அவர்களுடைய வருத்த மிகுதியைக் கண்டு ஆ ! ஆ ! உங்களுக்கு ஒரு வருத்தம் வருவதற்கு முன்னமே வந்து உங்களை நோக்க வேண்டிய கடமையை உடைய நான் அங்ஙனம் முந்துற வரப்பெறாது ஒழியனும் வருத்தம் நேர்ந்த உடனே ஆகிலும் வந்து உதவப் பெறலாமே ; அங்ஙனமும் வந்து உதவப் பெற்றிலேனே ; வருத்தமுற்ற நீங்களே உற்ற வருத்தத்தை என்னிடம் வந்த முறையிட்டுக் கொள்ளும்படி நான் அன்னியனாய் இருந்து ஒழிந்தேனே ; என்னுடைய இக்குற்றத்தை நீங்கள் பொறுத்தருள வேண்டும் ' என்று அஞ்சி நடுங்கிக் கூறும் உங்களை நான் இவ்வளவு தூரம் வருந்தச் செய்தது பற்றிப் பொறைவேண்டுகிறேன். என் இயல்புகள் உங்களுக்குத் தெரிந்தவைதானே? இனி உங்கள் காரியத்தைக் குறைவில்லாமல் முடித்துத் தருகின்றேன் ; உங்களுக்கு நான் செய்ய வேண்டுவது என்? என்ன, அதனைக் கேட்ட ஆய்ச்சிகள், பெருமானே! எங்களுடைய மனக்கருத்து இப்படி இரகசியமாக விண்ணப்பம் செய்யக் கூடியதன்று ; பெரிய கோஷ்டியாக எழுந்தருளி இருந்து கேட்டருள வேண்டும் என்று (ஆஸ்தானத்தில்) திருவோலக்கத்தில் புறப்பாடு ஆக வேண்டிய கிரமத்தை விண்ணப்பம் செய்யும் பாசுரம் இது.

மழைக் காலத்தில் எல்லா இடங்களுக்கும் நீர்க்கோப்பாகும்படி மழை பெய்ய, வழிகளெல்லாம் சகதியாகி ஓர்இடம் விட்டு மற்றோர் இடம் செல்ல ஏற்றதாக இரா ; ஆதலால் அப்போது அரசர்களும் தத்தம் பகைவரிடமுள்ள பகையையும் மறந்து, சேனைகளைத் திரட்டிக் கொண்டு போர்புரியப் புறப்படுவதை நீக்கி நாலாறு மாதம் வரை அந்தப்புரத்தில், மன்னிக் கிடப்பர். இவ்வாறு மழைக் காலமானது பிரிந்தார் கூடும் காலமாயும், கூடினார் சுரதரசம் அனுபவிக்கும் காலமாயும் இருக்கும் ஆதலால் சிங்கங்களும் அக்காலத்தில் மலைக் குகைகளில் கிடந்து உறங்கும். அக்குகை வாசலில் ஆண்யானைகள் வந்து பிளிறினாலும் அவ்ஒலி செவிப்படாதவாறாகவே அவை கிடந்து, உறங்கும் ; மழைக்காலம் கழிந்த அளவிலே அவை உறக்கத்தை விட்டெழுந்து ; நம் எல்லைக்குள் புகுந்தாரார்? எனச் சீறிநோக்குவது போல் கண்களில் நெருப்புப் பொறி பறக்கும்படி விழித்து நாற்புறமும் நோக்கி, உளைமயிர்கள் சிலும்புமாறு சுற்றும் அசைந்து, உறங்கும் போது உறுப்புகளை முடக்கிக் கொண்டு கிடந்தமையால் உண்டான திமிர்ப்பு தீரும்படி உறுப்புகளைத் தனித்தனியே உதறி, உலாவுவதற்கு உடல் ஏற்ற தாகும்படி உடலை ஒன்றாக நிமிர்த்து (சோம்பல் முறித்து) மற்ற தீய விலங்குகள் கிடந்த இடத்தில் கிடந்தபடியே உயிர்மாய்ந்து முடியும்படி வீரகர்ச்சனை செய்து, பின்பு தன் இருப்பிடத்தை விட்டு, இயல்பாக உலாவுவதற்காக வெளிப்புறப்படுவது இயல்பு. அங்ஙனமே கண்ணபிரான் புறப்பட்டுச் சிங்காசனத்தேற எழுந்தருமாறு வேண்டுகின்றனர். சிங்கம் மலைக் குகைளில் கிடந்து உறங்குவது போல் இவ்யசோதை இளஞ்சிங்கம் நப்பின்னை கொங்கைமேல் வைத்துக்கிடந்த மலர்மார்பா என்றபடி அப்பிராட்டியினது உயர்ந்த தனங்களாகிய மலைச்சாரலில் கண்வளர்ந்தருளும்.

சிங்கம் பிறக்கும்போதே 'மிருகேந்திரன்', 'மிருகராஜன்' என்னும் சிறப்புப் பெயர்களைப் பெறுவது பற்றிச் சீரியசிங்கம் எனப்பட்டது. பெருமானும் நரசிம்ம அவதாரத்தில் போலச் சிலபாகம் சிங்கமாயும் சில பாகம் மனிதவடிவாயும் இருப்பதன்றியும், 'சிற்றாயர் சிங்கம்', 'எசோதை இளஞ்சிங்கம்' என்றபடி பூரண சிம்மமாக இருப்பதால் 'சீரிய' என்னும் அடைமொழி இவருக்கும் பொருந்தும் என்க.

அறிவுற்று-பூஅலர்ந்தாற் போலே காலத்திலே உணருவது, தீவிழித்து-கண்ணபிரான் ஆய்ச்சிகளின் கூக்குரலைக்கேட்டு உணர்ந்தனன் ஆதலால், 'இவர்கள் இங்ஙனம் கூக்குரலிடும்படி இவர்களுக்கு யாதால் என்ன துன்பம் நேர்ந்ததோ? ' என்று உடனே திருக்கண்கள் சீற்றம் தோன்றச் சிவக்கும் என்க. (அடியாருடைய பகைவரைப் பற்றிய சீற்றம்)

வேரிமயிர் பொங்க-சிங்கத்தின் சடைகளில் சாதிக்கு ஏற்றதொரு மணம் உண்டாதல் அறிக. கிடந்து உறங்கும்போது உளை மயிர்கள் நெருக்குண்டு அமுங்கிக் கிடக்கும் ஆதலால், உணர்ந்தவுடனே அவற்றை மலரச் செய்வது சாதி இயல்பு. அங்ஙனம் அவற்றை மலரச் செய்வதற்காக, எப்பாடும் பேர்ந்து உதறும். எப்பாடும்-எல்லாப் பக்கங்களிலும். பேர்ந்து-பெயர்ந்து. பெயர்தல் அசைதல். மூரி-சோம்பல்; மூரி நிமிர்ந்து-சோம்பல் தீரும்படி நிமிர்ந்து.

('கோயில் நின்றுமிங்ஙனே' என்ற பாடமும், 'சிங்காசனத்திலிருந்து' என்ற பாடமும் மறுக்கத் தக்கன வெண்டளை பிறழ நிற்றலால்)

முழங்கி-இதர துஷ்டமிருகங்கள் கிடந்த இடத்திலே முழுக்காயாக அவிந்து கிடக்கும்படி முழங்கி, மேகம் போன்ற பெருமானுடைய முழக்கம் எதிரிகளை மண் உண்ணும்படி பண்ணி, பெண்கள் வந்து எதிர் கொள்ளக் கூடியதாக இருக்கும்.

புறப்பட்டுப் போதருமாபோலே-மலைக் குகையிலிருந்தும் இப்படிப்பட்டதொரு சிம்மம் புறப்பட்டு வருவது போல இங்ஙனே வரவேண்டும் என்கிறார்கள். நடை அழகிலே எருதின் செருக்கும், யானையின் திமிர்ப்பும் (கர்வம்) புலியினுடைய சிவிட்கும் (கோபம்) சிம்மத்தினுடைய தேஜசும் தோன்ற வேண்டும். இவற்றையெல்லாம் நம்பெருமாள் நடையழகிலே காணலாம்.

பூவைப்பூ வண்ணா-கறவை காவலனாகிய கோபாலனின் நிறத்தொடு ஒக்கும் பூவாதலின் விதந்து கூறினார். அரசரைத் திருமாலுடன் ஒப்பிட்டுக் கூறுவர். அம்முறையில் 'பூவைநிலை' என்னும் புறப்பொருள் துறையில் புறப்பொருள் வெண்பா மாலையில் கூறப்படும்.

நீ உன் கோயில் நின்று இங்ஙனே போந்தருளி - உன்னுடைய திருக்கோயிலினின்றும் இவ்விடத்தே (ஆஸ்தானத்தில்) எழுந்தருளி.

கோப்புடைய சீரிய சிங்காசனத் திருந்து - பல வேலைப்பாடுகள் பொருந்தியுள்ள தர்மம் அதர்மம், ஞானம் அஞ்ஞானம், வைராக்கியம் அவைராக்கியம், ஐசுவரியம் அநைசுவர்யம்-என்கிற 8 கால்களை உடையதாய்த் திருமாமணி மண்டபத்திலே ஆதிசேடன் மீது இடுகிற தர்மாதிபீடம் என்பதுவே இங்கு கண்ணபிரானுக்குச் சிங்காதனமாக அமைந்துள்ளது. (மூவாயிரப்படி உரை)

போக காலத்தில் உல்லாச விசேஷத்தால் சொல்லும் வார்த்தையை மந்திரிகள் ஏற்கமாட்டார்கள் ; ஆகவே திருவோலக்க வார்த்தையே ஏற்கத்தக்கது என்பது.

யாம்வந்த காரியம்-இப்போதே இவர்கள் வந்த காரியம் இன்னதென்று இயம்பாது ஒழிவது ஏன்? எனின், முதலடியிலேயே சொல்லிவிட்டால் சுதந்தரனாகிய இவன் மறுத்தாலும் மறுக்கக் கூடும் என்றஞ்சி, இன்னும் நாலடி அருகில் சென்ற பின் விண்ணப்பம் செய்வோம் என்று இருக்கிறார்கள். அதாவது -'சிற்றஞ்சிறுகாலே' என்ற பாட்டில் விண்ணப்பம் செய்கிறார்கள். 'உன்றன்னோடு உற்றோமே ஆவோம் உனக்கே நாம் ஆட்செய்வோம், மற்றை நம் காமங்கள் மாற்று' -என்றது காண்க.

ஆராய்ந்தருள் -'பெண்காள் ! ஒருவரை ஒருவர் எழுப்பி, எல்லாரும் திரண்டு நம் வாசல் காப்பவனை எழுப்பி, ஐயரை எழுப்பி, ஆய்ச்சியை எழுப்பி, நம்மை எழுப்பி, அண்ணரை எழுப்பி, நப்பின்னையை எழுப்பி மீளவும் நம்மை எழுப்பி, மிகவும் வருத்தப்பட்டிருக்கிறீர்களே ! ' என்று திருவுள்ளம் பற்றிக்கருணை செய்தருள வேண்டும். என்பதாம் (ஆறாயிரப்படி உரை).

உள்ளுறை:

அனைவரும் உலவ இயலாத இரவுப் பொழுதில் அரண்மனையில் திவ்விய அந்தப்புரத்தில் ⁄ நப்பின்னைப் பிராட்டியோடு ஏக தத்துவம் என்னலாம் படி படுக்கையிலே சாய்ந்து உறங்கும் அவ்விருப்பில் தானே பகைவர் மண் உண்ணும்படி வீரத்திருமகளை உடையவனாய் காலம் உணர்த்த உணர்ந்து இருந்து அருகிருந்த நப்பின்னைப் பிராட்டிக்கும் அணுக ஒண்ணாதபடி குரூரமாகத் திருக்கண்களை விழித்துத் திருமேனியின் மணம்

மயிர்க்கால்களின் வழியே பரிமளிக்க, நாலுபாடும் ஒக்க எழுந்திருந்து அவயவங்களைத் தனித்தனியே உதறி நீண்டு நிமிர்ந்து சிம்ம நாதத்தைச் செய்து தண்டாகாரமாய் நீண்டு, பிண்டாகாரமாய் நிமிர்ந்து மிக்க பெருமையுடனே மகதாதி ரூபப் பிரகிருதியிலிருந்தும் வேறுபட்டு வருவதுபோலே, பூவைப்பூ வண்ணா நீ உன் திவ்விய அந்தப்புரத்திலிருந்தும் திவ்விய ஆஸ்தான மண்டபத்துக்கு எழுந்தருளி ஏழுலகும் தொழிலாக வகுப்புண்டதாய், நினைத்த காரியம் முடியும் படியான சீர்மையை உடைய சிம்மாசனத்திலே எழுந்தருளி இருந்து உனக்கு அடியவரான நாங்கள் வந்த காரியத்தை விசாரித்து அருளவேண்டும் என்பதாம்.

ஈசுவரனே உபாயம் என்கிற சித்தோபாயத்தை மேற்கொள்பவர்களுக்கு, ஆன்மீக நாட்டம் விஞ்சிய காலத்தில் விருப்பத்தைத் தலைக்கட்ட (முடிக்க) ஈசுவரன் தானே முந்திவருவான் என்ற பொருள் இதில் தோன்றும்.

---

"செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமாலே
நெடியானே ! வேங்கடவா ! நின் கோயிலின் வாசல்
அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்தியங்கும்
படியாய்க் கிடந்துன் பவள வாய் காண்பேனே."

- பெரு.திருமொழி.4:9

## இருபத்து நான்காம் பாசுரம்

* **அன்று இவ்வுலகம் அளந்தாய் ! அடிபோற்றி**
**சென்றங்குத் தென்னிலங்கை செற்றாய்! திறல்போற்றி**
**பொன்றச் சகடம் உதைத்தாய் ! புகழ் போற்றி**
**கன்று குணிலா எறிந்தாய் ! கழல் போற்றி**
**குன்று குடையா வெடுத்தாய் ! குணம் போற்றி**
**வென்று பகை கெடுக்கும் நின் கையில் வேல் போற்றி**
**என்றென்றுன் சேவகமே ஏத்திப் பறை கொள்வான்**
**இன்றுயாம் வந்தோம் இரங்கேலோ ரெம்பாவாய்.**

(பொருள்) (மகாபலி உலகங்களையெல்லாம் கவர்ந்து கொண்ட) அக்காலத்தில், இந்த உலகங்களை எல்லாம் அளந்து கொண்டவனே! (உனது) திருவடிகள் வாழ்க ; (இராவணன் உள்ள) அந்த இடத்திலே

நடந்து போய் தென்திசையில் இருக்கும் இலங்கையில் உள்ளாரை அழித்தவனே ! (உனது) மிடுக்கு வாழ்க ; சகடாசுரனை அழியும்படி காலால் உதைத்தவனே ! (உனது) புகழ் வாழ்க ; கன்றின் வடிவாய் வந்த வத்சாசுரனை எறிதடியாகக் கொண்டு (விளங்கனிவடிவாய் வந்த கபித்தாசுரன் மேல்) வீசியவனே ! (உனது) திருவடிகள் வாழ்க ; கோவர்த்தன மலையைக் குடையாக எடுத்துப் பிடித்தவனே ! (உனது) குணம் வாழ்க ! பகைவரை வென்று அழிக்கும் உன் கையில் உள்ள வேல் என்னும் ஆயுதம் வாழ்க ! என்று பலவற்றையும் சொல்லி, உனது வீரச் செயலையே துதித்து (நோன்புக்கு வேண்டிய) பறையைப் பெற்றுக் கொள்ள இப்போது நாங்கள் வந்தோம் ; (எங்கள் விஷயத்தில்) நீ மனம் இரங்குவாயாக.

(சிறப்புப் பொருள்) பாரதப் போரில் அருச்சுனன் 'இரண்டு சேனைகளின் நடுவே தேரைக் கொண்டு போய் நிறுத்து' என்ன, அங்ஙனமே செய்த பெருமான், பெண்களின் வேண்டுகோளை மறுக்கமாட்டான் ஆதலால் அவர்களின் பிரார்த்தனைக்கு இசைந்து, 'பெண்களே!' இதோ புறப்பட்டு வருகிறேன் என்று சொல்லித் திருப்பள்ளியறையிலிருந்தும் திவ்விய சிம்மாசனத்தளவும் வரத்தொடங்க, அது கண்ட ஆய்ச்சிகள், முன்பு தண்டகாரணிய வாசிகளான முனிவர் 'இராமபிரானைக் கண்ட அளவிலே அரக்கரால் தமக்கு நேரும் துன்பங்களை மறந்து மங்களாசாசனம் செய்யத் தொடங்கியது போல, இவர்களும் தங்களுடைய விருப்பங்களையெல்லாம் மறந்து 'இத்திருவடிகளைக் கொண்டோ இவனை நாம் நடக்கச்சொல்வது ! என வருந்தி, அத்திருவடிகளை எடுத்து முடிமேல் புனைந்து கண்களில் ஒற்றிக் கொண்டு, முன்பு உலகம் அளந்ததையும், சகடம் உதைத்ததையும் நினைந்து வயிறெரிந்து இத்திருவடிகளுக்கு ஒரு தீங்கும் நேராது ஒழிய வேண்டும் என்ற மங்களாசாசனம் செய்வதாய்ச் சொல்லும் பாசுரம் இது.

கண்ணபிரானைப் பிரிந்து வருந்தி, பெண்மையையும், இழந்து அவனுள்ள இடம் தேடிவந்த தங்களுக்காக அவன் தன் சீல குணமும் வடிவழகும் விளங்கப் பத்தெட்டடி நடந்து வந்தபோது, மகாபலியிடம் அகப்பட்டு அவனது விருப்பத்திற்கு இலக்கு ஆன பூமியை அவனிடத்தினின்றும் மீட்குமாறு மெல்லிய தனது திருவடிகளைக் கொண்டு காடும் ஓடையும் அளந்த செயல் நினைவிற்கு வருவதால், அக்காலத்தில் எவரும் மங்களாசாசனம் செய்யாத குறைதீர இப்போது மங்களாசாசனம் செய்கிறார்கள்.

அழகுக்கு இலக்கு ஆகாதவரை அம்புக்கு இலக்கு ஆக்கினமையில் ஈடுபட்டு 'தென்னிலங்கை செற்றாய் போற்றி ' என்றும், இராவணனைப் போல் அன்றித் தான் பகைவன் என்பதே தெரியாதபடி வந்தவன் ஆதலால் அதன் பிறகு 'பொன்றச் சகடம் உதைத்தாய் போற்றி' என்றும், அவ்வாறே இருவர் ஒரு சேர வந்ததால் அதனை அடுத்து 'கன்று குணிலா எறிந்தாய் போற்றி' என்றும் அனுகூலனான இந்திரன் பிரதிகூலனாக வந்ததனால் அதனை அடுத்து 'குன்று குடையா எடுத்தாய் போற்றி' என்றும், இவ்வாறு வீர சரிதத்தைச் சொல்லும் போது, 'அப்பெருமானது திருமேனிக்குக் கண் எச்சில் படப் போகிறதே' என்று அஞ்சி ஸ்ரீ கிருஷ்ணாவதாரத்தில் நிகழ்ந்த செயல்கள் எல்லாம் அப்பிரான் கொண்டுள்ள வேல் என்னும் ஆயுதமே செய்ததென்பார் 'கையில்வேல் போற்றி' என்றும் கூறினார்கள்.

சிறு குழந்தைப் பருவத்தில் ஒருவரும் உதவுபவர் அருகே இராத சமயத்தில் சகடாசுரனைத் தனக்குச் சிறிதும் வருத்தமின்றி அழித்தமையை நினைத்து 'புகழ் போற்றி' என்றும், விளாமரத்தின் மேல் கன்றை வீசி எறிந்தபோது சிறிது தூக்கி முடக்கினபடி வைத்துள்ள திருவடியின் அழகில் ஈடுபட்டு 'கழல் போற்றி' என்றும், பெருமானுடைய பெருமையை மறந்து அறிவீனனாய் இந்திரன் கல்மழையைப் பொழிவித்தபோது 'அனுகூலனுக்கு வந்த கலக்கமாகையால் தானே தெளிகிறான் ; இவனுக்குத் தீங்கு ஒன்றும் நாம் செய்யக் கூடாது' என்று பெருமான் திருவுள்ளத்தில் கொண்ட பெரும் பொறுமையில் ஈடுபட்டு 'குணம் போற்றி' என்றும் அருளிச் செய்தனர்.

'எவ்வாறு நடந்தனை' என்றபடி பரியும் தன்மை உள்ளவராதலால் திருவுள்ளம் புண்பட்டு 'அங்குச் சென்று' என்று கூறுகின்றார் எனலாம். கூர்வேல் கொடுந்தொழிலன் நந்தகோபன் மகனாகையால், இவனுக்கும் வேல் உளதாயிற்று.

'நாவினுக்கிடும் அறுசுவை போல இவர்கள் நாவினுக்கு' அடி போற்றி, திறல் போற்றி, கழல்போற்றி புகழ் போற்றி, குணம் போற்றி, வேல் போற்றி ! என்பன அறுசுவையாய் இருந்தபடியைச் சொல்லுகிறது - என்பது ஆறாயிரப்படி உரை.

ஒரு குறையுமின்றி விரும்புவதை எல்லாம் பெற்றிருப்பவனும் (அவாப்த ஸமஸ்தகாமனும்) எல்லாரையும் பாதுகாப்பவனுமான எம்பெருமானைக் கண்டால் தமக்கு வேண்டிய நன்மைகளை அவனிடம் பிரார்த்திக் வேண்டி இருக்க, தாம் அவனுடைய மங்களத்தைப் பிரார்த்திப்பது பொருந்துமோ ? எனில்- எம்பெருமானுடைய திருவருளால் கிடைத்த பக்தியினால் பரவசப்பட்டு அப்பெருமானுடைய எல்லாவல்லமையும் உடைமை (சர்வசக்தித்துவம்) முதலிய குணங்களையும் மறந்து, 'பகவானுக்குக் குறை ஒன்றும் இல்லாமல் இருப்பதே குறை ஒன் றும் இல்லாமை' என்று நினைத்துச் செய்வதனால் பொருந்தும்.

இவர்கள் தம்முடைய நன்மையை மறந்து எம்பெருமானுடைய நன்மையைப் பிரார்த்திக்கின்ற இது - அயோத்தியில் உள்ளார் தேவதைகளையும் உட்பட இரட்சித்துப் புகழ்பெற்ற ஸ்ரீ ராமபிரானது அழகு முதலிய குணங்களுக்குப் பாதுகாப்பைத் தேவதைகளிடம் வேண்டியதையும், சீதாகலியாணம் ஆன பின்பு அயோத்திக்கு மீண்டுவரும்போது பரசுராமன் எதிர்ப்படக் கண்ட தசரத சக்கரவர்த்தி ஸ்ரீராமனுடைய பல வீரச் செயல்களைக் கேட்டிருந்தும் பயப்பட்டு அப்பரசுராமனிடத்தில், அபயம் கொடுக்க வேண்டும் என்று வேண்டியதையும், விசுவாமித்திரரின் யாகத்தைக் காத்தது முதலிய பெருமாளுடைய வீரத்தை அறிந்திருந்தும் இராமபிரான் காட்டுக்கு எழுந்தருளியபோது கௌசலை அப்பிரானுக்கு மங்களத்தை வேண்டியதையும், தத்துவ ஞானமுள்ள முனிவர்கள் ஸ்ரீராமன் தண்டகாரணியத்துக்கு எழுந்தருளியபோது பெருமாளுடைய வடிவழகிலே ஈடுபட்டு மங்களாசாசனம் செய்ததையும் ஈசுவரனே தனக்கு மகனாய்ப் பிறந்திருக்கிறான் என்று அறிந்திருந்தும் ஸ்ரீவசு தேவரும் தேவகியும் கம்சனிடத்தில் அச்சத்தாலே 'சங்கு சக்கர தாரியாக இருக்கிற இந்த வடிவத்தை மறைக்க வேண்டும்' என்று வேண்டியதையும் போல்வதனால் பொருந்தும்.

ஈசுவரன் பாதுகாப்பவனும் தாம் பாதுகாக்கப்படும் பொருளுமாய் இருக்க அதற்கு மாறாக மங்களாசாசனம் செய்வது விபரீத ஞானம் அன்றோ?எனில் -கரும சம்பந்தத்தால் வரும் விபரீத ஞானம் விடத் தக்கதே அன்றி, எம்பெருமானுடைய சிறப்பான தன்மையைக் கண்டு வரும் இது சொரூபத்துக்கு ஏற்றதே. மேலும், தலைவனுக்கு மேன்மை உண்டாக வேண்டும் என்று எண்ணுதல்

அடியவனுக்குக் கடமை ஆதலால், தம்முடைய நன்மையை நாடாமல் மங்களா சாசனம் செய்தல் முறையே ஆகும். மற்றுள்ள ஆழ்வார்களைக் காட்டிலும் பகவானிடத்துப் பொங்கும் பரிவு கொண்டு மங்களா சாசனம் செய்ததனாலேயே பெரியாழ்வார் என்று பெயர் பெற்ற விஷ்ணுசித்தரது திருமகளார் ஆதலால், இவருக்கும் அவ்வாறான தன்மை உண்டாயிற்று.

பொன்ற -பொடிப்பொடியாம்படி ; புகழ்-பெற்ற தாயும் கூட உதவாத சமயத்தில் தன்வலியையே கொண்டு தன்னைக் காத்தமையால் வந்த புகழ்.

> 'ஈடும் வலியுமுடைய இந்நம்பி பிறந்த எழுதிங்களில்
> ஏடலர் கண்ணியினானை வளர்த்தி யமுனை நீராடப்போனேன்
> சேடன் திருமறுமார்பன் கிடந்து திருவடியில் மலைபோல்
> ஓடும் சகடத்தைச் சாடியபின்னை உரப்புவதஞ்சுவனே '

என்னும் பெரிய திருமொழிப் பாசுரம் (10:7:9) இங்கு நோக்கத் தக்கது.

குணில்-எறிகருவி ; பறை கொள்வான் இன்று யாம் வந்தோம் - என்றது எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன் தன்னோடு உற்றோமேயாவோம் உனக்கே நாம் ஆட்செய்ய வந்தோம் என்றபடி.

'வந்தோம்' -என்பதனால்-பேற்றிலுள்ள சுவையின் தூரியத்தையும் 'இரங்கு' என்பதால்!-பேற்றுக்குச் சாதனமான பகவானது கருணையையும், ஏத்திப் பறை கொள்வான் என்பதால்-புருஷார்த்தமாகிய கைங்கரித்தையும் கூறிய வாறாயிற்று.

அவா மிகுதியாலே தாங்களே வந்த குற்றத்தைப் பொறுக்க வேணும் என்ற கருத்தும் 'இன்று யாம் வந்தோம் இரங்கு' என்றவிடத்தில் புலப்படும். இன்று+யாம்=இன்றியாம் ; யவ்வரின் இய்யாம் என்பது நன்னூல். பகையை-வென்று-கெடுக்கும் எனக் கூட்டுக. சகடம் பொன்ற உதைத்தாய் (பொன்ற-முடிய) எனக் கூட்டிப் பொருள் கொள்க) குணிலா எறிந்தாய்-எதிரிகளை இட்டு எதிரிகளை முடித்தபடி. குன்று குடையாய் எடுத்தாய்-இந்திரன் பெரும்பசியாலே வருந்து மாறு செய்து, அவன் கைவலிக்கும் அளவும் மழை பெய்விக்கச் செய்கிறான் ; கை சலித்தவாறு தானே ஓய்ந்து நிற்கிறான். கல்லால் கல்மழையைக் காப்போம் என்று நின்ற குணத்தைப் போற்றுகின்றனர். சவலைக் குழந்தை தன்னைக் கிள்ளப்

புகுந்தால் கை நொந்தவாறே விட்டுப் போகிற தென்று உடம்பு கொடுத்திருக்கும் தாயைப் போல-என்பது நாலாயிரப்படி உரை.

இன்று-இசைவு பிறந்த இன்று. நீ உறங்க நாங்கள் உறங்காமல் இருந்த இன்று. யாம்-உறவினரால் நெடுங்காலம் நலிவுபட்டு நாங்கள்; வந்தோம்; -எங்கள் ஆற்றாமையால் வந்த இழவெல்லாம் தீரவந்தோம்; இரங்கு-எல்லாம் பட்டுவந்தாலும் அவன் இரங்கினாலல்லது காரியமாகாது. இவர்களுக்கு இரங்குவது அவனுடைய இயல்பு ; அவனுக்கு என்வருகிறதோ ? என்று இரங்குவது இவர்களுடைய இயல்பு.

உள்ளுறை:

இவர்கள் வேண்டியபடியே அவன் திருப்பள்ளியறையில் நின்றும் திவ்விய ஆஸ்தான மண்டபத்துக்கு எழுந்தருள, அந்நடையழகிலே ஈடுபட்டு, வந்த வேலையை மறந்து மங்களாசாசனம் செய்கிறார்கள். 'ஏத்திப்பறை கொள்வான்' -என்கிற இடத்தில் ஏத்துகைக்கு அடிப்படை புருஷார்த்த லாபமாகையாலும், ஏத்தாதபோது புருஷார்த்தலாபம் இல்லாமையாலும் ஏத்துகையே புருஷார்த்தம் என்கிறது.

## இருபத்து ஐந்தாம் பாசுரம்

ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓரிரவில்
ஒருத்தி மகனாய் ஒளித்து வளர
தரிக்கிலா னாகித்தான் தீங்கு நினைந்த
கருத்தைப் பிழைப்பித்துக் கஞ்சன் வயிற்றில்
நெருப்பென்ன நின்ற நெடுமாலே ! உன்னை
அருத்தித்து வந்தோம் பறை தருதி யாகில்
திருத்தக்க செல்வமும் சேவகமும் யாம்பாடி
வருத்தமும் தீர்ந்து மகிழ்ந்தேலோ ரெம்பாவாய்.

(பொருள்) ஓர் இரவில் தானே (தேவகி என்ற) ஒருத்திக்குப் புதல்வனாய்த் தோன்றி வேறொருத்தியாகிய யசோதைக்குப் புதல்வனாய் மறைந்து வளர, (அவ்வாறு வளர்வதைக் கேட்டுப்) பொறுக்காதவனாய் (உன்னாலே நாசமடையப் போகின்ற) தானே (எப்படியாவது உன்னைக் கொல்ல வேண்டும் என்று) தீமையை எண்ணின கம்சனது எண்ணத்தைத் தவறச் செய்து (அவன்)

வயிற்றிலே நெருப்புக்குச் சமமாக (அச்சத்தை உண்டாக்கிக் கொண்டு) இருந்த (அடியவரிடத்துப்) பெருங்கருணை உள்ளவனே! உன்னை (புருஷார்த்தத்தை) யாசித்து நின்று கொண்டு வந்தோம். (எமது) வேண்டுகோளைத் தருவாயானால் (அதனைப் பெற்று) ஸ்ரீ மகாலட்சுமிக்குத் தக்க உனது செல்வத்தையும் (உனது) வீரியத்தையும் நாங்கள் சொல்லிப்பாடி வந்த சிரமமும் நீங்கி மகிழ்ச்சியடைந்து இருப்போம். (முதலடியில் பிறந்தோரிரவில் என்பது தெளிவு நோக்கி இங்ஙனம் பிரிக்கப்பட்டதாதலின், தளை தட்டாமை உணர்க)

(சிறப்புப்பொருள்) கீழ்ப்பாட்டில் மங்களாசாசனம் செய்த பெண்களை நோக்கிக் கண்ணபிரான், பெண்களே! நம்முடைய வெற்றிக்குப் பல்லாண்டுபாடுவது உங்களுக்குப் பிறவிப் பேறு ஆகும். இது கிடக்க, நீங்கள் இக்குளிரிலே உங்கள் உடலைப் பேணாமல் வருந்தி வந்தீர்களே! உங்களுடைய நெஞ்சில் உள்ள எண்ணம் வெறும் பறையோ?மற்றேதேனும் உண்டோ? எனவே, அதுகேட்ட பெண்கள், பெருமானே! உன்னுடைய குணங்களை நாங்கள் பாடிக் கொண்டு வருவதாலே ஒருவருத்தமும் படாமல் சுகமாக வந்தோம், பறை என்று ஒருகாரணத்தை, இட்டு நாங்கள் உன்னையே பெற எண்ணி நிற்கிறோம்! என்று விடை கூறுவதாக அமைந்துள்ள பாசுரம் இது.

அரியதொழில்களையும் எளிதாகச் செய்துமுடித்த உனக்கு எங்கள் வேண்டுகோளை முடித்திடுவது மிகவும் எளியதே என்னும் கருத்துப்படக் கண்ணனை விளிக்கின்றனர், முன் ஐந்தடிகளால்.

தேவகி மகனாய்ப் பிறந்து யசோதை மகனாய் ஒளித்து வளர - என்னாமல் ஒருத்தி. . . ஒளித்து வளர என்றது - அத்தேவகி யசோதைகளின் சிறப்பைஉளப்படுத்தியவாறு. தேவகி கண்ணனைப் பெற்ற பாக்கியவதி, யசோதை கண்ணனை வளர்த்தெடுத்த பாக்கியவதி என்று உலகம் முழுவதும் புகழும் படியான அவர்களுடைய வீறுபாட்டை, ஒருத்தி என்ற சொல்நயத்தால் தோற்றுவிக்கிறபடி, ஒருத்தி ஸ்ரீமகாவிஷ்ணுவைப் புதல்வனாகப் பெறவேண்டும் என்று நோற்க, மற்றொருத்தி பிறந்த பொழுது முதல் அமையும் குழவிப் பருவத்துத் திருவிளையாடல்களை எல்லாம் அனுபவிக்க வேண்டும் என்று விரும்ப, திருமாலும் அவ்விருவருடைய கருத்தையும் ஒருங்கே நிறைவேற்றும்படி கண்ணபிரானாய்த் தேவகிக்குப் புதல்வனாய்த்தோன்றி குழவிப் பருவத்து விளையாடல்களின் இனிமை

எல்லாம் கண்டு அனுபவிக்கும் படி யசோதை இடத்து ஏழுபிராயம் வரையிலும் வளர்ந்தனன் என அறிக. அப்பிரான் அவதரிக்க ஏற்ற காலமாய் இருந்ததால், ஓரிரவு என்று கூறுகின்றனர். இனி, இன்னாள் என்று பெயர் சொன்னால் யாரேனும் எதிரிகள் அபிசாரம் செய்வார்களோ? என்ற அச்சத்தால் பெயர் சொல்லாது ஒருத்தி என்றும் கண்ணனை ஓரிடத்தில் இருக்க ஒட்டாது அலைத்த இரவு ஆதலால் வெறுப்பினால், ஓரிரவு என்றும் கூறியது எனினும் ஆம். கொல்ல நினைந்த என்னாது தீங்கு நினைந்த என்றது - கொடுஞ் சொல்லைச் சொல்ல வாய் கூசியதால் ஆகும்.

சர்வலோகங்களுக்கும் பிதாவானவன் ஒருத்தி மகனாவதே! தசரதர் தவம் செய்து மாணிக்கம்போல நான்கு பிள்ளைகளைப் பெற்றதுபோல, நால்வரும் கூடித்தவம் செய்து (வசுதேவர்-தேவகி, நந்தகோபன்-யசோதை) ஒரு மகனைப் பெற்றபடி.

நாய்க்குடலுக்கு நறுநெய் தங்காதாப் போலே, கம்சாதிகளின் துர்ப்பாக்கியம் பிரசவ கிருகத்திலே ஓரிரவு தங்கவிடவில்லை. சூதகம் 10 நாளாகிலும் பிறந்த கிருகத்திலே (ஈன் இல்) கிடப்பார்கள் உலகக் குழவிகள் என்றபடி. (நறு நெய் கலந்த சோற்றை நாயக்கு இட்டால் அச்சோற்றை நாய்கக்கி உமிழ்ந்து விடும்) (என்பது மூவாயிரப்படி உரை)

ஓரிரவில்-காலம் நடையாடாத பரமபதத்திலே இருந்து (சிறுகாலையிலா நிலையோ திரியா - என்பது கம்பராமாயணம்) காலம் நடையாடும் இவ்வுலகில் பெருமான் வந்து பிறப்பதே! ஒருத்தி இவனை மகனாகப் பெற வேண்டும் என்று விரும்ப அவருக்கு அவதாரரசத்தைக் கொடுத்து, இவருக்கு லீலாரசத்தை அனுபவிக்கச் செய்த படி. ஓரவதாரத்திலே யதுகுல உத்தமனாயும், யாதவவம்சச் செல்வனாயும் வந்து தோன்றியபடி. ஒருத்திமகனாய் - அவ்விடத்தில் தாயப்பால் அருந்தாமல் வந்ததால் அழுது முலைப்பால் குடித்த இடம் அன்றோ பிறந்த இடமாவது. ஆலயத்தைக் கட்டியவர்களைவிட, பழுதுபட்ட ஆலயத்தைப்புதுப் பித்தவர்களே பெருமைக்குரியவர் அன்றோ?

வானிடைத் தெய்வங்கள் காண, அந்தியம் போது அங்குநில்லேல், என்று அனுகூலர் கண்ணிலும் படவொண்ணாதபடி அடக்குவோர், பகைவர் கண்ணில் படஒட்டுவார்களோ? கண்ணா நீ நாளை தொட்டுக் கன்றின் பின்போகேல்போகேல் கோலம்

செய்திங்கே இரு-என்பாள் யசோதை. இவ்விடத்தில் கூரத்தாழ்வான், தொட்டில் குழவியாய் இருந்தபோதே பூதனை சகடாசூரன் முதலியோரை எளிதில் அழித்த பெருமிடுக்கனான பெருமான் கம்சனிடத்தில் அஞ்சி வளர்ந்தான் என்று சொல்ல இயலுமோ? ஆகவே ஒளித்தென்று-தன்னுடைய பெருமைகளை எல்லாம் மறைத்துக் கொண்டு என்றபடி-என்று அருளிச் செய்வார் அதிமாநுஷஸ்தவத்திலே. இவன் சர்வேஸ்வரனே என்று எல்லாரும் நன்றாக உனராதவாறு வளர என்பதாம்.

தரிக்கிலானாகி - நாரதர் முதலியோர் கம்சனிடம் சென்று உன்னுடைய பகைவன் திருவாய்ப்பாடியிலே வளருகின்றான் என்ன? அவன் அது கேட்ட அளவிலே நம் எதிரில் இல்லை, எங்கிருந்தால் என்ன? என்று இராமல் அப்பொழுதே தொடங்கித் தீங்கு செய்வதற்குக் காரணமான பொறாமையைச் சொல்லுகிறது.

தீங்குநிறைந்த - சகடம், கொக்கு, கன்று, கழுதை, குதிரை, விளாமரம் குருந்தமரம் முதலிய பல பொருள்களில் அசுரரை ஆவேசிக்கச் செய்தும், பூதனையை அனுப்பியும், வில்விழாவுக் கென்று வரவழைத்துக் குவலயாபீடத்தை ஏவியும், இவ்வாறாகக் கண்ணபிரானை அழிப்பதற்கு கம்சன்செய்த தீங்குகளுக்கு ஓர்வரையறை இல்லாமை உணர்க.

கருத்தைப் பிழைப்பித்து-எவ்வாறேனும் கண்ணனை முடித்துவிட்டு இறுதியில் அம்மான் என்னும் உறவு கொண்டாடி! ஐயோ! என்மருமகன் இறந்தொழிந்தானே! என்று கண்ணீர்விட்டு அழுது துக்கம் பாவிக்கக்கடவோம் என்று-நினைத்திருந்த கம்சனுடைய நினைவை அவனோடு முடியும்படி செய்தருளினன் என்க. பிழைப்பித்தல் - பிழையை உடையதாகச் செய்தல் பாழாக்கி என்பது தேர்ந்த பொருள்.

கஞ்சன் வயிற்றில் நெருப்பென்ன நின்ற நெடுமாலே! போய்ப்பாடுடைய நின்தந்தையும் தாழ்த்தான் பொருதிறல் கஞ்சன் கடியன், காப்பாருமில்லைக் கடல் வண்ணா! உன்னைத் தனியே போய் எங்கும் திரிதி என்றும், என் செய்ய என்னை வயிறு மறுக்கினாய் ஏதும் ஓர் அச்சமில்லை கஞ்சன் மனத்துக்கு உகப்பனவே செய்தாய் காயாம்பூ வண்ணம் கொண்டாய்! என்றும், வாழகில்லேன் வாசுதேவா! என்றும் கண்ணபிரானுடைய சேட்டைகளை நினைந்து

வயிறு எரிந்து கூறும் பெண்களுடைய வயிற்றிலிருந்த நெருப்பை எல்லாம் வாரிக் கண்ணபிரான் கஞ்சன் வயிற்றில் எறிந்தனன் போலும்!

இங்ஙனம் கண்ணனிடம் ஆய்ச்சிகள் உரையாட, அதுகேட்ட பெருமான் பெண்களே! நீங்கள் சொல்லியபடி நான் உங்களுக்குச் செய்ய வேண்டுவது என்ன? என்று கேட்க, மறு மொழிகூறுன்றனர்.

பெருமானே! எங்களுக்கு நீ பிறந்து காட்டவும் வேண்டாம், வளர்ந்து காட்டவும் வேண்டாம், உன்னைக் காட்டினால் போதும் என்ற கருத்துப்பட, உன்னை அருத்தித்து வந்தோம் என்கின்றனர். என்னை ஆக்கிக் கொண்டெனக்கே தன்னைத் தந்த கற்பகம் என்றபடி அடியார்க்கு நீ வேறொன்றைக் கொடுக்காமல் உன்னையே கொடுப்பவனாதாலில் நாங்கள் உன்னையே வேண்டி வந்தோம் என்றனர் இது கேட்ட கண்ணபிரான், பெண்களே! பறைகொள்வான் இன்று யாம் வந்தோம், என்று ஒருமுறை சொல்லுகிறீர்கள், உன்னை அருத்தித்து வந்தோம் என்று ஒருமுறை சொல்லுகிறீர்கள், இது என்ன! மாறுபாடாகப் பேசுகிறீர்களே என்று கேட்க இவர்கள் மீண்டும். பறை என்னும் சொல்லின் பொருளைச் சிற்றஞ்சிறுகாலை என்னும் பாட்டில்-பறை தருதியாகில் என்று அன்றோ இவர்கள் வெளியிடுகின்றனர்.

பறைதருகியாகில் - நாம் எம்பெருமானை வேண்டிக் கொள்ளுதலே பயனைத் தரும் என்பதில்லை, எம்பெருமானுடைய நினைவே பயனைவிளைப்பது என்னும் சாத்திரக்கருத்து வெளிப்படும். எத்தனையேனும் மேலானவர்களை எத்தனை பேனும் தாழ்ந்தவர்கள் திருவுள்ளமாகில் செய்தருளவேண்டும் என்று அன்றோ சொல்லுவது.

பெண்களே! உங்களுடைய கருத்தை அறிந்து கொண்டேன், நீங்கள் எவ்வாறு வந்தீர்கள்? வருகிறபோது மிகவும் வருத்தம் அடைந்தீர்களோ? என்று அன்புடன் கேட்க அடியோம் வாயாராப் பாடிக் கொண்டு வந்தோம் ஆகையால் எமக்கு ஒருவருத்தமில்லை என்கிறார்கள்.

இருப்போம்-என்ற சொல் இறுதியில் கூட்டிக் கொள்ளப்பட்டது. இனி ஒருத்திமகனாய்ப் பிறந்து . . நின்ற திருமாலே! திருத்தக்க செல்வமும் சேவகமும்யாம்பாடி வருத்தமும்

தீர்ந்து மகிழ்ந்து (மகிழுமாறு) பறைதருதியாகில் (அதைப் பெற்றுக் கொள்ளுமாறு) உன்னை அருத்தித்து வந்தோம் என்று கூட்டிப் பொருள் கொள்ளவும் ஆம். ( இது ஆறாயிரப்படி விரிவுரை )

<u>உள்ளுறை</u> நெடுமாலே! நீ புருஷார்த்தத்தைக் கொடுத்தாயானால் நாமும் உன்னையும் உன் குணங்களையும் அன்புக்குப் போக்குவீடாகப்பாடி, பட்டதுன்பமெல்லாம் தீர்ந்து மகிழக்கடவோம் என்கிறார்கள்.

தரிக்கிலானாகி சர்வேஸ்வரனுடைய பெருமையைப் பொறுக்காதவனான கம்சன் - அகங்காரம், அதன் வயிற்றில் நெருப்பைக் கொளுத்தியது போல ஒளிவிட்டு நின்றான். வருத்தம். உன்னைப் பிரிந்துபட்ட துன்பம் எல்லாம், தீர்ந்து மகிழ்ச்சியடைவோம் என்கின்றனர்.

இப்பாசுரம் ஸ்ரீ ராமனுஜரைக்குறிப்பதாகக் கொள்வர். கண்ணன் தேவகி மகனாய் பிறந்து யசோதை மகனாய் வார்ந்ததுபோல ஆசாரியர் காயத்திரியில் பிறந்து அஷ்டாட்சரத்தில் வளருவர். ஓரிரவில் ஒளித்துவரை-யாதவபிரகாசரோடு கங்கா யாத்திரை சென்ற உடையவர் யாத்திரையின் கள்ளமான மருமத்தை அறிந்து விந்தியமலைக் காட்டிலிருந்து தம்மை ஒளித்து ஓரிரவில் காஞ்சிபுரம் வந்து சேர்ந்தவரலாறு குறிக்கப்படுகிறது. தரிக்கிலானாகி.. நினைந்த - இவர் யாதவப்பிரகாசரிடம் வேதம் வாசித்த போது இவர் மகாமேதாவியாக இருப்பது கண்ட அவர் பொறுக்கமாட்டாமல் இவரைக் கங்கையிலே தள்ளி மாய்க்க வேண்டும் என்று தீங்கு நினைத்தார். பிழைப்பித்து. யாதவப்பிரகாசரின் கருத்தைத் தப்பிப்போகும்படி செய்தார். கம்சன் - கலிபுருஷன் உடையவர் அவதரித்தபின் கலிபுருஷன் மாண்டான், நெடுமாலே -அடியாரிடம் அன்புடையவர் திருத்தக்க செல்வம்-பிராட்டிபோலே நம் போல்வாரைத்தகவுரை கூறி எம்பெருமானடி சேர்ப்பவர். வருத்தமும்தீர்ந்து மகிழ்ந்து. துக்க நீக்கம்மட்டுமன்றி, கைங்கரியத்தால் உண்டாகும் ஆனந்த அனுபவம் சேர்ந்ததே வீடுபேறு இவ்வாறு ஸ்ரீஆண்டாள் தமக்குப்பின் அவதரிக்க உள்ள எம்பெருமானாரைத் தன் ஞானக் கண்ணால் அறிந்து பாடியதாக உள்ளுறைப் பொருள் கொள்வர்.

## இருபத்து ஆறாம் பாசுரம்

மாலே மணிவண்ணா மார்கழி நீராடுவான்
மேலையார் செய்வனகள் வேண்டுவன கேட்டியேல்
ஞாலத்தை எல்லாம் நடுங்க முரல்வன
பாலன்ன வண்ணத்துன் பாஞ்சசன் னியமே
போல்வன சங்கங்கள் போய்ப்பாடுடையனவே
சாலப் பெரும்பறையே பல்லாண் டிசைப்பாரே
கோல விளக்கே கொடியே விதானமே
ஆலின் இலையாய் அருள் ஏலோரெம்பாவாய்.

(பொருள்) அடியாரிடம் ஆசைப் பெருக்கை உடைவனே! நீலமணி போன்ற நிறம் உடையவனே! பிரளய காலத்தில் ஆலிலையில் கண்வளர்பவனே! பெரியோர்கள் செய்வனவற்றில் சேர்ந்த மார்கழியில் நீராடுவதற்கு வேண்டியவற்றை கேட்பாயானால் (சொல்லுகின்றோம்) (பகைவராய் உள்ள) மக்கள் எல்லாம் நடுங்கும்படி ஒலி எழுப்புகின்றனவும், பேரோசை உடையனவும், பால்போன்ற நிறத்தை உடையனவும், உனது பாஞ்ச சன்னியமென்னும் சங்கை ஒத்தனவுமான சங்கங்களும், மிகவும் பெரிய பறைகளும், பல்லாண்டு பாடுவோரும், அழகிய தீபங்களும், கொடிகளும் மேற்கட்டியும் (ஆகிய இவற்றை) கருணை செய்வாய் (கொடுப்பாயாக)

(சிறப்புப்பொருள்) பெண்களே! உன்னை அருத்தித்து (விரும்பி) வந்தோம் பறை தருதியாகில் என்றீர்கள், நம்முடன் கூடும் சுவையிலே விரும்பமும் மகிழ்ச்சியும் உடையவர்கள் வேறுவொன்றை விரும்பார், எனவே நீங்கள் சொன்னது யாது என்று அதில் ஓர் ஐயம் தோன்றுகிறது, அதாகிறது எது? அதற்கு மூலம் எது? அதற்கு வேண்டுவன எவை? அவற்றுக்குரிய எண்ணிக்கை என்ன? இவற்றை விளக்கமாகச் சொல்லுங்கள் என்று கண்ணபிரான் நியமித்தருள, அது கேட்ட ஆய்ச்சிகள், பிரானே! உன்முக ஒளியை வெளியிலே கண்டு உன்திருநாமங்களை வாயாரச் சொல்வதற்கு அடிப்படையாக இருப்பதொரு நோன்பை ஆயர் குறிப்பிட்டதால், உன்னுடன் சேர்ந்திருப்பதற்கு அது காரணமாய் இருப்பது கருதி இடையரிடம் நன்றி நினைவால் அந்நோன்பிலே இழிந்தோம், அதற்கு,

முன்னோர்கள் செய்து போருவது ஒன்று உண்டு, அதற்கு வேண்டும் உபகரணங்களான அங்கங்களும் இவை. அவற்றையும் தந்தருள வேண்டும் என்று வேண்டிக் கொள்ளும் பாசுரம் இது.

மாலே மாலெனக் கருமை பெருமை மையலுமாம் - என்பது நிகண்டு கரியவன், பெரியவன், பிரேமை உடையவன் என 3 பொருள் சளையுடையது மால் என்னும் சொல். கண்ணனென்னும் கருந்தெய்வமே! யாம் கடவுள் என்று இருக்கும் இவ்வுலகில் கடவுளர்க்கும் ஆம் கடவுளானவனே! அடியார் இடம் அன்புடையவனே(வியாமோகம்) என்று அழைத்தபடி.

மணிவண்ணா மணி-இரத்தினம், அது எவ்வளவு விலை உயர்ந்த தாயினும் முன் தானையில் முடிந்து ஆளலாம் படி இருக்கும்! இது போல் எம்பெருமான் எவ்வளவு மேன்மையாக இருப்பினும் அடியார்களுக்குக் கையாளாக இருப்பான். இரத்தினம் சாதாரணமாக எல்லாராலும் பெற முடியாது. பாக்கியம் செய்தவர்க்கே கிடைக்கும். எம்பெருமானும் அப்படியே. இரத்தினத்தை வைத்துக் கொண்டிடுப்பவனுக்குக் கண்ணுறக்கம் வராது.

பகவானைப் பெற்றவர்களும் உண்டோ கண்கள் துஞ்சுதலே என்னும்படி உறக்கமின்றி இருப்பார். 16 ஆயிரம் ரூபாய் விலையுள்ள தொரு இரத்தினமானது மீனவனிடம் கிடைத்தால் அது ஒரு வணிகன் கையிலே அற்ப விலைக்குமாறும். அதை வணிகன் அரசனுக்கு உயர்ந்தவிலைக்கே விற்றிடுவான். அதை வாங்கிய அரசன் மீனவனைப் போல அற்பவிலைக்கும் விற்காமல், வணிகனைப் போல் உயர்ந்த விலைக்கும் விற்காமல் தானே இன்புற அணிந்து கொள்வான். பகவான் விஷயத்திலும் இங்ஙனே காணலாம். பகவானிடத்தே சிலர் அற்ப பலனை விரும்புவர், சிலர் பரமபதம் விரும்புவர், எனக்குத் தேனே, பாலே, அமுதே, என்று சிலர் சொல்லி மிக இனிமையாக அனுபவித்துக் கொண்டிருப்பர்.

இவ்வாறு சொன்ன ஆய்ச்சிகளை நோக்கிக் கண்ணபிரான் என்னைத் துதிப்பது இருக்கட்டும், செய்தியைச் சொல்லுங்கள் என்ன, மார்கழி நீராடுவான் என்று தொடங்கினர். இது கேட்ட பெருமான் கேட்ட இதென்ன புதுமையாக இருக்கிறதே! நான் இதுவரை கேட்டதில்லையே, இவை குறித்துச் சாத்திரங்கள் எவற்றிலும் பாாத்ததில்லையே! என்று கூறியருளினான், தர்மம் அறிந்தவர்கள் செய்வதையே மற்றவர்கள் பின்பற்றுவார்கள் என்று

நீயே சொல்லியிருக்கிறாயே அதனால் செய்கிறோம் என்று ஆய்ச்சியர் கூறினர் சாஸ்திரங்களைக் காட்டிலும் சிஷ்டாசாரம் மேலான பிரமாணம் என்று பேதையரான நாங்கள் சொல்லியோ நிறைஞானத்தொருமூர்த்தியான நீ அறிய வேண்டும் என்றனர், அது கேட்ட பெருமான், நல்லது இதற்கு என்னென்ன வேண்டும். என்ன மார்கழி நீராட்டத்திற்கு, பகைவராய் இருப்பார் நடுங்கும்படி முழுங்கவல்ல சங்கமும், புறப்பாடு கொட்டப் பெரும்பறையும், புறப்படும் போது எதிரே நின்று கூப்பிடுவதற்காகப் பல்லாண்டு பாடுவோரும், ஒருவருக்கு ஒருவர் முகம் தெரியும் படி பிடிக்கும் கொடியும், நீராடப் போகும்போது தலையில் பனிவிழாமல் தடுக்கும்படி மேற்கட்டியும் ஆகிய இவைகளே, இவற்றைத் தருமாறு கருணை செய்வாய் என்று வேண்டுகின்றனர். வெளிப்படைப் பொருளில் இவை காத்யாயினியின் வழிபாட்டிற்கு வேண்டும் என்க. உள்ளுறைப் பொருளில் வெண்சங்கு போன்ற தூயமனத்தினராய் தூயோமாய் வந்த நாங்கள், உன்னைவிட்டகலாதிருக்க வேண்டும். ஆசாரிய பராமசாரியர்களின் புகழை எல்லாத்திசைகளிலும் பரப்பட வேண்டும், எம்பெருமானுக்குப் பெரியாழ்வார்போல, தேவரீருக்கு நாங்கள் உன்நாம சங்கீர்த்தனப்பல்லாண்டு பாடுவார்களாக ஆக வேண்டும். விளக்குளப்படி ஒளிவீசுகிறதோ அப்படியே நாங்களும் ஒளிவீசவேண்டும். பெரிய திருவடியைப் போலவும், திருவனந்தாழ்வானைப் போலவும் எல்லாதேச, எல்லாக்கால, எல்லாக் கைங்கரியபரர்களாக இருக்க வேண்டும், அதற்கு நீங்கள் உதவ வேண்டும் என்றனர்.

அவன் முன் நின்று கேட்கும் போதே கேட்டியேல் என்பான் என்? எனில் அவன் ஐந்து இலட்சம் குடிப் பெண்களுடைய கண், மார்பு, வடிவு இடை இவற்றில் ஈடுபட்டு, வைத்த விழிவாங்காமல் பார்த்திருக்கும் கண்ணன், தங்களுக்கு எல்லாம் கண்ணன் என்று ஞானம், பக்தி, வைராக்கியம் முழுமையாகப் பெற்ற ஜீவாத்மாக்கள் நமக்குக் கிடைத்திருக்கிறார்களே! என்று பெருமிதம் கொண்டு அந்த ஆனந்தத்தில் ஈடுபட்டு இருக்கிறான். (இங்கே ஞானம் என்பது கோபியரின் கண்களையும், பக்தி அவர்களின் தனங்களையும், வைராக்கியம் அவர்களின் இடையினையும் குறித்தன. ஞானம், பக்தி ஆகியவற்றைத் தாங்கக் கூடிய சக்திபடைத்ததாக வைராக்கியம் இருக்க வேண்டும், வைராக்கியமாகிய இடை சிறுத்திருந்தாலும் வலிமையோடு உறுதியானதாக இருப்பதால் மற்ற இரண்டையும் தாங்கிக் கொள்ள முடியும்)

சங்கை-முன்னே கூறியது மங்கலப் பொருள் ஆகையால், போய்ப்பாடு பேரொலி, புகழுமாம்.

இது கேட்ட கண்ணபிரான், பெண்களே! இவ்வளவு பொருள்களை நான் எங்ஙனே சேமித்துத்துத் தரவல்லேன்? இது எனக்கு மிகவும் அரிய செயலாயிற்றே! என, உன்னுடைய சிறிய வயிற்றிலே பெரிய உலகங்கள் எல்லாவற்றையும் வைத்து ஓர் ஆலந்தளிரிலே கிடந்து அகடிதங்களைச் (பிறரால் செய்ய முடியாத அரிய செயல்களை) செய்யவல்ல உனக்கும் கூட அரிய தொன்று உண்டோ? என்னும் கருத்தப்பட ஆலின் இலையாய் என்று அழைக்கின்றனர். ஈண்டு,

**நளிர்மதிச் கடையனும் நான் முகக்கடவுளும். . .**
**ஒருபொருள் புறப்பாடின்றி முழுவதும்**
**அகப்படக் கரந்து ஓராலிலைச் சேர்ந்த எம்**
**பெருமாமாயன் – என்றதை நினைக்க**

(திருவாசிரியம்!அடி63-70)

இப்பாசுரத்தில் மேலையார் செய்வனகள் வேண்டுவன என்பது உயிரான சொல்தொடராகும்.

யத்யதாசரதி ச்ரேஷ்ட ஸ்தத்ததே வேதரோ ஜன!
ஸ யத்ப்ரமாணம் குருதே லோகஸ்ததனுவ்ர்ததே !!
- பகவத்கீதை-அத்தியாயம் 3 - சுலோகம் 21.

மேலோன் எதைச் செய்கிறானோ அதையே மற்றமனிதர் பின்பற்றுகின்றனர்! அவன் எதைப் பிரமாணமாக்குகிறானோ அதையே உலகம் அனுசரிக்கிறது. என்பது இதன் பொருள். இதை அடியொற்றியே ஆண்டாள் இப்பாசுரத்தை அருளிச் செய்தாள்.

இச்சுலோகத்தின் இரண்டாம் அடிக்கு உரைசெய்த ஆதிசங்கரர் மேலோராய் இருப்பார் யாதொன்றைப் பிரமாணமாகக் கொள்ளுகிறார்களோ, அதையே உலகமும் கொள்கிறது என்றார். மத்வரும் இவ்வண்ணமே பொருள் உரைத்தார். ஆக இவர்கள் யத். பிரமாணம் என்று பிரித்துப் பொருள் கொண்டனர். உடையவரோ, இவ்வாறு பிரிக்காமல் பொருள் கொண்டார். அதாவது பெரியோர்கள் மேற்கொள்கிற கருமத்தையே பிறரும் மேற்கொள்கின்றனர் என்று இந்த அளவு மட்டும் சொன்னால் போதாது, அவர்கள் அக்ககருமத்தை எந்த அளவில் மேற்கொள்கிறார்களோ அந்த அளவிலே பிறரும்

மேற்கொள்ளுகிறார்கள் என்றும் சொல்லவேண்டியது அவசியமாதலான் அதற்கு ஏற்ப எம்பெருமானர் உரையிட்டார். இக்கருத்து மற்றவர்களுக்குத் தோன்றாமல் உடையவருக்குத் தோன்றியது எவ்வாறெனில், திருப்பாவை ஜீயர் என்று புகழப்பட்டு இருந்தமையினாலேயாம். இப்பாசுரத்தில் மேலையார் செய்வனகள் கேட்டியேல் என்னும் அளவே போதுமாய் இருக்க, இடையில் வேண்டுவன என்றொரு சொல் சேர்த்திருப்பது குறிப்பிடத்தக்கது. சாத்திரங்களில் எவ்வளவோ செயல்களை மேற்கொள்ளுமாறு கூறப்பட்டிருக்கும் அவற்றை யெல்லாம் சீடர்கள் மேற்கொள்ளார். வேண்டாதவற்றை விட்டு வேண்டுவன செய்வர் மேலையார் என்னும் இக்கருத்தில் இப்பாசுரம் முகிழ்த்தது. இதற்குஏற்ப உரையிட வேண்டும் என்றே சூடிக் கொடுத்தவர் தொல்லருளால் வாழ்கின்ற வள்ளல் இராானுசன் கீதைச் சுலோகத்திற்குப் பெரியாழ்வார் திருவடிகளில் ஆண்டாள் கேட்டபொருள் இதுவே என்று அறுதியிட்டு ஆண்டாள் காட்டிக் கொடுத்த பொருளையே தமது உரையிலிட்டார். இது இப்பாசுரத்தின் உயிர்நிலைக் கருத்தாகும்.

உள்ளுறை:

பகவானை அடைவதற்கு வேண்டும் சாதனங்களை வேண்டிக் கொள்ளுதல் அவ்வாறு வேண்டும் போது.

ஸர்வ தர்மான் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ!
அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷயாமி மா சுச, !!

- பகவத்கீதை அத்.18.சுலோ 66.

பொருள்

தர்மங்களை எல்லாம் அறவே விட்டுவிட்டு என்னைச் சரணடைக. பாவங்கள் அனைத்தினின்றும் உன்னை நான் விடுவிப்பேன், வருந்தாதே. சரமசுலோகத்தில் மாம் (என்னை) என்பதால் விளங்கும் எளிமையை மாலே! மணிவண்ணா! என்ற விளியினாலும் அஹம் என்ற இடத்து (நான்) ஏற்படும் வேறொரு துணை வேண்டாத உபாயத்வத்தை ஆலின் இலையாய் என்ற விளியானாலும் தெரிவிக்கின்றனர். சங்கின் ஓசை - ஓங்காரமென்று பிரசித்தமாகையால், சங்கம் என்பது ஓங்காரத்தில் அர்த்தமான கேஷத்வ ஞானத்தையும் (நாம் அப்பரம்னுக்கு அடிமை) அதற்கு அடுத்துள்ள பறை -நமப் பொருளான பாரதந்திரிய ஞானத்தையும் (அதாவது பகவானுக்கு அருகிலோ தொலைவிலோ அவனுக்காகவே

அவன் இட்ட கட்டளையைத் தலைமேற்கொண்டு தொண்டு செய்வது) பல்லாண்டு இசைப்பார் என்பது - சாத்விகர்களுடன் பழகுவதையும், விளக்கென்றது - பகவத்சேஷத்துவத்தையும் ஒளிவீசச்செய்யும் பாகவத சேஷத்துவத்தையும், கொடி - சேஷத்துவ லட்சணமான கைங்கரியத்தையும், விதாநம் அக்கைங்கரியத்தின் பயன் அனுபவிப்பவன் நான் என்ற புத்தியின் நிவ்ருத்தியையும் குறிக்கும் என்பர்.

இல்லாததை உண்டாக்கலாமோ? என்ன - (ஆலின் இலையாய்) முன்பு இல்லாததை உண்டாக்கினவனல்லையோ? (அருள்) அருள் உண்டானால் செய்யத் தடையில்லை என்பதாம்.

---

"நீரகத்தாய் ! நெடுவரையின் உச்சிமேலாய் !
நிலாத் திங்கள் துண்டத்தாய் ! நிறைந்த கச்சி
ஊரகத்தாய் ! ஒண்துறைநீர் வெஃகாவுள்ளாய்
உள்ளுவார் உள்ளத்தாய் ! உலகமேத்தும்
காரகத்தாய் ! கார்வானத் துள்ளாய் ! கள்வா !
காமருபூங் காவிரியின் தென்பால் மன்னு
பேரகத்தாய் ! பேராதென் நெஞ்சினுள்ளாய்
பெருமான் ! உன்திருவடியே பேணினேனே."

-திருநெடுந்தாண்டகம்-8

## இருபத்து ஏழாம் பாசுரம்

* கூடாரை வெல்லும் சீர்க் கோவிந்தா! உன் றன்னைப்
பாடிப் பறைகொண்டு யாம்பெறு சம்மானம்
நாடு புகழும் பரிசினால் நன்றாக
சூடகமே தோள்வளையே தோடே செவிப்பூவே
பாடகமே என்றனைய பல்கலனும் யாம் அணிவோம்
ஆடை உடுப்போம் அதன்பின்னே பாற்சோறு
மூடநெய் பெய்து முழங்கை வழிவார
கூடி இருந்து குளிர்ந்தேலோ ரெம்பாவாய்

(பொருள்) பகைவரை வெல்லுகின்ற குணத்தையுடைய (சிறப்பை உடைய) கோவிந்தனே! (நீயும் நாங்களும்) சேர்ந்திருந்து, மனம் குளிர்ந்து, நாட்டில் உள்ளவர் கொண்டாடுகின்ற தன்மையாக

சூடகமும், தோள்வளையும், தோடும், கர்ணப்பூவும் (காதுப்பூ) பாடகமும் என்று சொல்லப்படும் இவை போன்றனவான பல ஆபரணங்களையும் (நீ அணிவிக்க) யாம் நன்றாக அணிந்து கொள்வோம், அதன் பின்னே (நீ உடுத்த) இனிதாகப் பட்டாடைகளை உடுத்துக் கொள்வோம், (பின்பு) பால் சோற்றை(த்தன் மிகுதியால்) மூடுமாறு நெய்யை வார்த்து (அச்சோற்றை) முழங்கைவழியாகப் பெருகும்படி (உண்ணுதலே) (உபேயமான-பயன்) உன்னைப் (பாடுவதே எங்களுக்குரிய பயனாகப் புகழ்ந்து) பாடி (விரதத்திற்கு வேண்டிய பறையைப் பெற்றுக் கொள்வதே (விரதத்தை மேற்கொண்டு முடித்து) நாங்கள் அடைய விரும்பிய சன்மானங்களாம்.

(சிறப்புப் பொருள்) கீழ்ப்பாட்டில் சங்குகளையும் பறைகளையும் பல்லாண்டிசைப்பாரையும் கோலவிளக்கையும் கொடியையும் மேற்கட்டியினையும் அருள வேண்டும் என்று விரும்பிய ஆய்ச்சியரை நோக்கிக் கண்ணபிரான், பெண்களே! நம்மோடு ஒத்த ஈசுவரன் ஒருவன் உண்டாகில் அன்றோ நம் பாஞ்சசன்னியத்தோடு ஒத்ததொரு சங்கு உண்டாவது, அன்றியும் சங்கங்கள் என்று பல சங்குகள் வேண்டும் என்று கேட்கின்றீர்கள், ஒன்றைத் தேடினோ மாயினும் பாஞ்சசன்னியத்தோடு ஒத்த பலசங்குகள் கிடையாவே, நம் பாஞ்சசன்னியத்தையும், புள்ளரையன் கோயில் வெள்ளைவிளிசங்கத்தையும், பசுக்கூட்டங்கள் மீளக் குறித்த சங்கத்தையும் தருகிறேன் கொள்ளுங்கள், இனி பறையைத் தருகிறேன், பெரும்பறை என்றீர்களாயின் நாம் இலங்கை பாழாளாகப் படை பொருதபோது நம் வெற்றியைச் சாற்றிட ஒரு பறை உண்டு, அதைத் தருகின்றேன், அதற்கு மேல் சாலப்பெரும் பறை என்றீர்களாயின், மிகவும் பெரியதான பறையாவது - நாம் ---- மகிழப்பறை ஒலிக்கக் குடக்கூத்து ஆடுகிறபோது நம் அரையிலே கட்டி ஆடியதொரு பறை உண்டு! அதைத் தருகிறேன், கொள்ளுங்கள், பல்லாண்டு பாடுவதற்கு உங்களுக்குப் பெரியாழ்வார் உண்டு. அவரைப் போலே அடியோமோடும் நின்னோடும் பிரிவின்றி ஆயிரம் பல்லாண்டு என்று உங்களையும் நம்மையும் சேர்த்துக் காப்பிடுவது அன்றியே பொலிக! பொலிக! பொலிக! என்று உங்களுக்கே காப்பிடும் நம்மாழ்வாரையும் கொண்டு போங்கள், இனி கோலவிளக்குக்காக ஈரிடத்தும் ஒளிவிடும் நப்பின்னையைக்

கொள்ளுங்கள் அதற்குமேல் கொடி வேணுமாகில் கருளக்கொடி ஒன்றுடையீர்! என்று நீங்கள் சொல்லும் பெரிய திருவடியைக் கொண்டு போங்கள், அதற்கு மேல் விதானம் (மேற்கட்டி) வேணுமாகில், நாம் மதுரையிலிருந்து இவ் ஆய்ப்பாடிக்கு வரும்போது நம் மேல் மழைத்துளி விழாதபடி தடுத்து மேல் விதானமாய் வந்த நம் ஆதிசேடனைக் கொண்டு போங்கள், இவ்வளவே அன்றோ நான் உங்களுக்குச் செய்ய வேண்டுவது? என்ன.

இது கேட்ட பெண்கள், பெருமானே! மார்கழி நீராடப் போவதற்கு வேண்டியவை இவை, நோன்பு நோற்று முடித்த பின்பு நாங்கள் உன்னிடத்துப் பெற வேண்டிய பல சன்மானங்கள் உள்ளன, அவற்றையும் நாங்கள் பெற்று மகிழும்படி அருள்புரிய வேண்டும் என்று பிரார்த்திக்கும் பாசுரம் இது.

கூடாரை செல்லும் சீர்க் கோவிந்தா! என்னும் விளி- கூடுபவரிடம் தோற்று நிற்பனே! என்ற கருத்தை வெளிப்படுத்தும், அடியார் திறத்திலே எல்லா நிலைகளாலும் - அதாவது ஒவ்வொருகுணத்தாலே அன்பர்களையும், பகைவரையும் வழிப் போக்கரையும் வேறுபாடின்றி எல்லாரையும் கூட்டிக் கொள்பவன். வெல்வது - என்பது அவர்களின் எண்ணத்தை மாற்றித்தன் வசப்படுத்திக் கொள்வது. அது தான் சீலம், சீர்மை முதலிய குணத்தால் முடிகிறது. சீலம் என்றால் என்ன? மேலானவர் தாழ்ந்தவர்களோடு. இரண்டறக் கலப்பதற்கு ஓர் அங்கமான குணமாகையாலே, அக்குணத்தைக் காட்டித் தன்னைத் தாழவிட்டுத் தன்னைக் கூடோம் என்பாரையும் தன் வசப்படுத்திக் கொள்ளும்குணமாகும். பிறவிப் பயனால் தன்னைக் கூடமாட்டோம் என்போரையும் தன்னுடைய இனிய அன்பினால் லீலைகளின் சாதுரியத்தைக் காட்டி அவர்களையும் கூடவைத்துக் கொள்ளும் வல்லமை படைத்தவன் நீ, மனவேற்றுமையினால் பகைமை கொண்டு தன்னோடு சேராதவர்களான பகைவரையும் தன்னுடைய அழகையும் வீரத்தையும் காட்டி, தன் அழகாலே வணங்க வைக்கும் குணம் படைத்தவன் நீ (இங்குஉடையவர் யாதவப்பிரகாசரையும், யக்ஞமூர்த்தியையும், பட்டர் நஞ்சீயரான மேல்நாட்டு வேதாந்தியையயம், நம்பிள்ளை - கந்தாடை தோழப்பர், நடுவில் திருவீதிப் பிள்ளையையும் அடிமை கொண்டு திருத்திப் பணி கொண்ட சரித்திரங்களை நினைவுபடுத்திக் கொள்ளலாம்)

கூடாரை வெல்லும்சீர் - பரசுராமன், இராவணன் முதலியோரை வென்ற வரலாறுகளை நோக்குக) மேலும் தன்னோடு கூடின சுக்கிரீவ மகாராஜருக்குப் பரவசப் பட்டு வழியல்லாவழியில் வாலியை அழித்ததையும், கிருஷ்ணாவதாரத்தில் பாண்டவர்க்குப் பரவசப்பட்டும், பொய் சொல்லியும், கபடங்கள் செய்தும் நூற்றுவரை முடித்தமையும் முதலானவை இங்கு அறியத்தாகும். இப்போது இவர்கள் இங்ஙனே விளித்தற்குக் காரணம் யாதெனில் நீ எங்களுடைய மழலைச் சொற்களுக்குத் தோற்று நாங்கள் வேண்டியபடியே பறை முதலியவற்றை எல்லாம் கொடுத்தருளியவன் அல்லையோ? என்னும் கருத்தைக் காட்டுவதற்கு என்க.

ஆறாயிரப்படி உரை: (வெல்லும் சீர்) எல்லாரையும் வெல்வது குணத்தாலே ; கூடுவாரைச் சீலத்தாலே வெல்லும் ; கூடாதாரை வீரத்தாலே வெல்லும். வீரம் அம்புக்கு இலக்காக்கும் ; சீலம் அழகுக்கு இலக்காக்கும் ; அம்புக்கு இலக்கானார்க்கு மருந்திட்டு ஆற்றலாம் ; சீலமும் அழகும் நின்று ஈராநிற்கும் ; அம்பு மேல் தோலோடு போம் ; அழகு உயிரையே அழிக்கும்.

கோவிந்தா: பகவானுக்கே நாராயணா என்று கூப்பிடுவதைக் காட்டிலும் 'கோவிந்தா' என்று கூப்பிட்டால்தான் தான் மகிழ்ச்சியாம். ஏனெனில் ஆய்ச்சியரோடு சாமானியமாய் இந்த உலகிலே அவன் பழகியபோது ஏற்பட்ட பெயர் அது. எல்லோருடனும் கலந்து பழக வேண்டும் என்ற நியையிலே வந்த. திருநாமம் அது ; எனவே அதைச் சொல்லும் போது தான் அவனுக்குப் பரம ஆனந்தம். நாராயணா - என்பது பரத்துவம். (மேன்மை) கோவிந்தா என்பது அவனுடைய எளிமை.

'கோ' என்பது -ஸ்வர்க, இஷீ, பசு, வாக், வஜ்ர, திக், நேத்ர, க்குணி, பூ, ஜலே-என்று பல பொருள் தரும் சொல் (நிகண்டு).

வித்-என்ற தாது (வேர்ச்சொல்) பல பொருளை உடையது.

1. ஸ்வர்க - ஸ்வர்கம், காம்-மோட்சத்தை, விந்தயதி-அடைவிக்கிறான்.

2. இஷீகாம் -பாணத்தை, விந்ததி-அடைகிறான்; விசுவாமித்திரரிடம் இருந்து அஸ்திரங்களைப் பெற்றான்.

3. பசு, கா - பசுக்களை, விந்ததி - அதன் தன்மையை, பெருமையை அடைகிறான்.

4. வாக், கோவி - வேதங்களால், வேத்யதே - அறியப்படுகிறான். வேத சப்தத்தை (அன்ன வடிவில்) பிரித்தெடுத்தவன். வேதத்தை (அயக்கிரீவ வடிவில்) ஒளிவிடச் செய்தவன்.

5. வஜ்ர-காம்-வஜ்ராயுதத்தை, விந்தயதி-அடைகிறான். (ததீசிவரலாறு).

6. திக் (திசை) காம் - திசையை, கச்சயதி - (தீயோரை அழிக்கச்) செலுத்துகிறான்.

7. நேத்ர, (கண்) - சூரிய, சந்திரர்களைக் கண்களாக உடையவன். சூரியக் கதிர்களுக்குள்ளே இருப்பவன்.

8. பூ - பூமி-இரணியாட்சனிடமிருந்து பூமியை அடைந்தது ; மகாபலியிடம் பூமியை யாசித்தது. பூமியை (மகா வராகமாக அவதரித்து) எடுத்து நோக்கியவன்.

9. ஜலே - நீரில் சென்று மச்சாவதாரத்தில் பூமியைப் பெற்றது. மேலும் காம் - பூமியை, தரதி - தரிக்கிறான் ; கூர்மாவதாரத்தில் பூமியைச் சுமந்தது ; கோவர்த்தனகிரியைத் தூக்கியது.

இத்திருநாமம் (27,28,29) ஆம் பாசுரங்களிலும் தொடர்ந்து வருகிறது.

கோவிந்தா : தன் வேலையைத் தான் செய்யச் சக்தியற்று, இவன் கை பார்த்து இருக்கும் பொருள்களிடத்திலே இவனுடைய அன்பு கரைபுரண்டிருக்கும்.

'திவத்திலும் (பரமபதத்தில் இருப்பதைவிட) பசுநிரை மேய்ப்பு உவத்தி செங்கனிவாய் எங்கள் ஆயர்தேவே' -என்கிறபடியே தன்னோடு ஒத்தவர்களுக்கு உதவும் இடமான பரமபதத்தைக் காட்டிலும், பசுக் கூட்டத்தை மேய்க்கும் போது மகிழ்ச்சி விஞ்சியிருக்கும்.

உன்றன்னைப்பாடி-முன் உன்னைப் பாடப்பெறாமல் இருந்த வருத்தமெல்லாம் தீரும் படி உன்னைப்பாடி, நாப்படைத்த பயன்பெற தலைவனான உன்னைப்பாடி. 'வாயினால் பாடி' என்றார்கள் முதலில். 'கேசவனைப் பாட', 'முகில் வண்ணன் பேர்பாட' 'மனத்துக்கு இனியானைப் பாட', 'மாயனைப் பாட',

'மைத்துனன் பேர் பாட', என்றுபாடுகையே - இவர்களுக்கு உயிர் மூச்சாய் இருக்கிறபடி. 'உன்னைப்பாடி என்னாமல் 'உன்தன்னைப் பாடி' என்றதற்குக் கருத்து - எங்களை நீ பாடவேண்டி இருக்க உன்னை நாங்கள் பாடுவதே என்பது. உன் பணியை நாங்கள் ஏறிவிட்டுக் கொள்வதே ! என்கின்றனர்.

'கிருஷ்ணன் பெயரைச் சொல்லுதல் கூடாது' -என்ற ஊரிலே இத்தனை நாள் அப்பெருமானது திருப்பெயரைச் சொல்லப் பெறாத துன்பமெல்லாம் தீரப்பாடப் பெற்றோம் என்ற உவப்புத் தோன்ற 'உன்றன்னைப் பாடி' என்கின்றனர்.

பறைகொண்டு-அப்பாட்டினால் தோற்ற உன்னிடத்துப் பறையைப் பெற்று யாம் பெறும் சம்மானம் மேலும் பெற வேண்டிய பரிசுகள் பல உள்ளன ; அவற்றையும் நீ குறையறப் பெறுவிக்க வேணும் என்கின்றனர்.

யாம் பெறு சம்மானம் -இப்பாட்டில் இவ்வடியைப் பற்றிய உபன்னியாசத்தை பட்டர் வெள்ளைத் திருமுற்றத்திலே இருந்து செய்துவரும்போது பெருமாள் பிரசாதம் வர, 'யாம் பெறு சம்மானம் வந்தது' என்று அருளிச் செய்தார் என்று ஐதிகம். அநாதி காலம் பட்ட அவமானங்களெல்லாம் நீங்கும்படி அவன் கொண்டாடும்படியைச் சொல்லுகிறார்கள்.

நாடுபுகழும் பரிசினால் - 'ஆ' பெண்கள் கண்ணபிரானைக் குறித்து நோன்பு நோற்றுப் பேறு பெற்றபடி என்னே ! என்று அனைவரும் கொண்டாடும்படி நீ எமக்குப்பரிசளிக்க வேண்டும் என்கின்றனர்.

**'நாடும் நகரமும் நன்குடன் காண நலனிடையூர்தி பண்ணி**
**வீடும் பெறுத்தித் தன் மூவுலகுக்கும் தரும் ஒரு நாயகமே'**

என்று இவன் தரும் பரிசுகள் நாடு நகரமும் அடங்கிய உலகமெல்லாம் புகழும்படி இருப்பவை அன்றோ?

நாடு புகழும்-என்று தங்களுக்குப் புகழ் வருவதற்குச் சொல்லுகிறார்கள் அன்று ; நாட்டாரும் இதைப் புகழ்ந்து வாய்படைத்த பலனைப் பெற்று உய்ய வேண்டும் என்று சொல்லுகிறார்கள். ஒரு தீயவனை அண்டிப் பெற்ற பொருளாகில் உலகம் இகழும்; மேலான பரம்பொருளை அண்டிப் பெற்றதாகையாலே உலகமெல்லாம் புகழ்கிறது.

நன்றாக அணிகையும் ஆடை உடுக்கையுமாவன- கொடுத்த முத்தாரத்தைப் பிராட்டியை இடுவித்துத் திருவடியை அலங்கரித்தாற் போலே, நப்பின்னைப் பிராட்டியை இடுவித்துத் தங்களை அலங்கரிக்கையும், தாங்கள் உடுக்க ஆரம்பிக்கும் போது ; 'நீங்கள் உடுத்தபடி அழகாக இல்லை' என்று சொல்லித் தானே உடுத்துவதும்.

சூடகமே: முதன் முதலிலே பிடிக்கும் கைக்கு இடும் ஆபரணம்.

கையில் அணிவிக்கும் பிற ஆபரணங்களாவன :

**'மத்தக மணியொடு வயிரம் கட்டிய**
**சித்திரச் சூடகம் செம்பொற் கைவளை**
**பரியகம் வால்வளை பவழப் பல்வளை**
**அரிமயிர் முன்கைக்கு அமைவுற அணிந்து**

- சிலப்பதிகாரம் கடலாடுகாதை.

தோல்வளையே-கையைப் பிடித்தவுடன் அணைக்கும் தோளுக்கு ஆபரணம்.

**"காமர் கண்டிகை தன்னொடு பின்னிய**
**தூமணித்தோள்வளை தோளுக் கணிந்து"**

சிலப்பதிகாரம். கடலாடுகாதை.

சுந்தரத் தோளுடையானும் ஆசைப்படுவதன்றோ இவர்களுடைய வேய் இருந்தடந்தோள்! பிரிவுநிலை நீங்கியதால் தோளில் வளை தங்கி நிற்கிறபடி.

தோடே, செவிப்பூவே: அணைத்தவுடன் அவனுடைய தோளுக்கும் இவர்களுடைய காதுக்கும் ஆபரணங்கள் இருக்கிறபடி. 'பொற்றோடு பெய்து' -என்று முன்பே தோடு இட்டிருந்த போதும் இவன் இட்டால் ஒழிய இட்டதாக இராது இவர்களுக்கு. செவிப்பூவே-அணைத்தவுடன் நுகரத்தக்க மணத்தை உடைய கர்ணபுஷ்பம். (காதணி) பாடகமே-அணைத்துத் தோற்று இவன் கீழே விழுந்து பிடிக்கும் திருவடிகளுக்கு ஆபரணம். பாதகடகம்-என்னும் சொல் பாடகம் எனச் சிதைந்தது. (பரியகம் நூபுரம் பாடகம் சதங்கை அரியகம் காலுக்கு அமைவுற அணிந்து ' -என்பது சிலப்திகாரம்.

என்றனைய பல்கலனும் - இப்படிப்பட்ட பல ஆபரணங்களையும் நாங்கள் அணிவோம். இன்னவை என்று

எடுத்துக் கூறப்பட்ட இவ்ஆபரணங்களையும் இவைபோல்வன மற்றும் பல ஆபரணங்களையும் நீ உன் கையால் எங்களுக்குப் பூட்ட, நாங்கள் அணிந்து கொள்ள வேண்டும். ஆடை உடுப்போம்- அங்ஙனமே ஆடைகளையும் நீ உன் கையால் எங்களுக்கு உடுத்த, நாங்கள் உடுத்திக் கொள்ள வேண்டும் என்கின்றனர். அழகுக்காக அணிவது எனில் இவை விரும்பத்தகாதவை. நீயும் நப்பின்னைப் பிராட்டியும் அணிவிக்கையாலே சொரூபம் (ஆன்மாவின் தன்மைகளான சேஷத்துவமும் பாரதந்திரியமும்) நிறம் பெறுவதற்காக அணிவோம். பூட்ட வேண்டிய அவன் கூடி இராததால் 'மையிட்டு எழுதோம் மலரிட்டு நாம் முடியோம்' என்றனர் தொடக்கத்தில். இப்போது அவன் உடன் இருப்பதால், 'யாம் அணிவோம்' என்கின்றனர்.

பல்கலனும். ஆடையுடுப்போம்-இவர்கள் இவனை அனுபவிக்கும்போது ஆபரணங்களையும் ஆடைகளையும் சேர்த்தே அனுபவிப்பது போல, இவனும் ஆபரணங்களை அணிவித்தவுடன் ஆடை உடுக்கச் செய்து, அச்சேர்த்தி அழகை அனுபவிக்கிறபடி.

**"காறை பூணும் கண்ணாடி காணும் தன் கையில் வளை குலுக்கும்**

**கூறை உடுக்கும்"** -என்று அன்றோ தகப்பனாரான பெரியாழ்வாரும் இவர்களுடைய செயல்களைக் குறிப்பிட்டார்.

கோவிந்தா உன்றன்னைப்பாடி ஆடையுடுப்போம்

**"ஸங்க சக்கர கதாபாணே த்வாரகா நிலைய அச்யுத**

**கோவிந்த புண்டரீகாக்ஷ ரக்ஷமாம் ஸரணாகதம்"**

வியாசபாரதம் சபாபர்வம் 75:43.

என்று வெகுதூரத்திலிருந்து "கோவிந்தா !" என்ற திரௌபதிக்குப் புடைவை சுரந்த நீ அருகிலிருந்து கோவிந்தா ! என்றழைக்கும் எங்களுக்கு ஆடை அளிக்கமாட்டாயோ?

நன்றாக ஆடையுடுப்போம் - 'உடுத்துக் களைந்த பீதக ஆடை உடுத்து' என்கிறபடியே அவன் உடுத்துக் களைந்து அவனுடைய வேர்ப்பு மணத்தோடு கூடிய ஆடையை உடுக்கையே நன்றாக உடுக்கையாம்.

அதன் பின்னே - எளிய மனிதர்களையும் தெய்வங்களையும் பற்றினால் அவர்களிடமிருந்து ஒரு எளிய பொருளைப் பெறுவதும் கடினமாய் இருக்கும். சர்வேசுவரனைப் பற்றுவதாலே பெறும் பொருள்களுக்குக் கணக்கில்லாமல் பெருகுகிறது.

பாற்சோறு மூட நெய் பெய்து-இதுவரையில் அவனைப் பிரிந்து 'நெய்யுண்ணோம், பால் உண்ணோம்' -என்று இருந்தனர். மேலும் நோன்புமேற்கொண்ட தாலும் இருந்தனர். இவர்கள் உண்ணாமையாலே அவனும் நெய்யுண்ணா விரதம் பூண்டிருந்தான். ஆகவே ஆய்ப்பாடியில் நெய்யும் பாலும் மிதமிஞ்சிக் கிடந்தது. இப்பொழுது நோன்பு முடிவதால், இவனோடு சேரும் வாய்ப்பு கிடைத்ததால், பாலிலேயே சோறு ஆக்கி, அதில் சோறு மறையும்படி நெய்யையிட்டு அவனோடு கூடி உண்ண விரும்புகின்றனர். (சோறு மூட நெய் பெய்து). 'நெய்யிடை நல்லதோர் சோறு' -என்று தகப்பனார் அருளியபடியே நெய்யின் நடுவே சோற்றைத் தேடிக் கண்டு பிடிக்க வேண்டி இருத்தல்.

முழங்கை வழிவார-முழங்கை வழியாக நெய்யானது வழியும் படியாக. நம்பி திருவழுதி வளநாடுதாசர், 'இவர்கள் வாயில் நெய்படாதோ?' என்று பட்டரைக் கேட்க, (முழங்கையில் தானே வழிகின்றதே ஒழிய நெய் வாயில் புகாதோ என்று கேட்டார்) அவர் 'கண்ணனிடத்திலே கண்ணையும் நெஞ்சையும் பறிகொடுத்திருக்கும் இவர்களுக்குச் சோறு வாயில் பட்டாலன்றோ நெய் வாயில் படப் போகிறது' என்று கூறியருளினாராம்.

கூடியிருந்து- 'எந்நாள் வந்து கூடுவன்' என்று பிரிந்திருந்து பட்ட சிரமம் எல்லாம் போகும்படி கூடி. இருந்து-பல வாசல்களில் திரிந்து பட்ட வருத்தம் தீர இருந்து. குளிர்ந்து-பிரிவாலே காய்ந்து போன நெஞ்சம் குளிர வேணும். 'அஹ மந்நம் - அஹமந்நாத' (நான் எம்பெருமானுக்கு அன்னம் போல் இனிமையாய் இருப்பவன் ; (என்னைப்புசித்து உகக்கும் எம்பெருமானை என்று வேதத்தில் சொன்னபடியே சேதனனும், பரம சேதனனும் ஒருவர்க்கொருவர் இனிமையாக அன்றோ இருப்பது.

நன்றாகக் கூடி இருந்து குளிர்ந்து - 'மதி நிறைந்த நன்னாளிலே ' கூடி இருப்பதால் நன்றாகக் கூடி இருக்கிறபடி.

உன்றன்னைப் பாடி -கூடி-குளிர்ந்து-வாய் உன்னைப் பாடவேண்டும்; உடம்பு கூட வேண்டும் ; நெஞ்சு குளிர வேண்டும். கூடிக் குளிர்ந்து - தாங்கள் குள்ளக் குளிரக் குடைந்து நீராடுவதாகச் சொன்னது இந்த நீர் வண்ணனாகிற வாசத்தடத்திலே மூழ்குவதையே என்று உணர்த்துகின்றனர்.

கோவிந்தா ! யாம்பெறு சம்மானம் எவை எனில் ? அணிவோம், உடுப்போம், குளிர்ந்து இருப்போம் ' என்னும் இவை என்று வருவித்துமுடிக்க.

(முழங்கை வழிவார - என்று சொன்ன பிறகு 'உண்கை' என்ற வினையைச் சொல்லாது விட்டது - கண்ணனுடைய திருக்கண் நோக்காலே, அவனைக் கண்ட மகிழ்ச்சியாலே முழுமன நிறை வடைந்த இவர்களுக்கு உண்ணும்படி ஒன்றும் வேண்டாமையாலேயாம்.)

<u>உள்ளுறை:</u>

சூடகம் - கைகளால் வணங்குதல் ; தோள்வளை - சங்குசக்கரங்களைப் பொறித்தலாகிய திருவிலச்சினை ; தோடு- திருமந்திரம் ; செவிப்பூ - துவயம் ; பாடகம் - சரம சுலோகம். இம்மூன்று இரகசியங்களாலும் ஞான, பக்தி, வைராக்கியங்களைச் சொல்லுகிறது. ஆடை - இறைவனுக்கு நாம் அடிமை என்னும் ஞானம். பாற்சோறு-கைங்கரியம் ; மூட நெய் பெய்து - மறையும் படி பாரதந்திரியத்தை வெளியிட்டு. கூடியிருந்து குளிர்ந்து - தலைவனான பெருமானுடன் அடியவரான நாம் சேர்ந்திருத்தல். இது வரை பிரிந்திருந்த துன்பம் எல்லாம் தீரப்பெறுதல்.

குளிர்ந்து - என்ற வினை எச்சத்திற்குக் 'குளிரவேணும்' என்று பொருள் உரைப்பது அரிய வழி எனின் 'கூடியிருந்து குளிர்ந்து ........பல்கலனும் யாம் அணிவோம், ஆடையுடுப்போம்' -என இயைத்து வினை எச்சப் பொருளையே கொள்க.

இப்பாசுரத்தில் 'சூடகமே........பாடகமே' -என 5 ஆபரணங்கள் விரும்பப்பட்டன. இவை பஞ்சசம்ஸ் காரங்களைக் குறிக்கும் என்பர்) இவை திருநாட்டிலே முக்தர்களுக்கு கிடைக்கும் சன்மானங்கள். உபநிடதத்தில் முக்தர்கள் பெறும் சன்மானங்களைச் சொல்லும் இடத்து 500 அப்சரசப் பெண்கள் முக்தர்களை எதிர்கொள்ள வருவதாகவும் அவர்களில் 100 பேர் மலர்

மாலைகளையும், 100 பேர் மையையும் 100 பேர் மணப் பொடியையும் 100 பேர் திவ்விய பீதாம்பரங்களையும் 100 பேர் திவ்விய ஆபரணங்களையும் கைகளில் ஏந்திக் கொண்டு வருவதாகவும் முக்த ஆத்மாவை பிரம்ம அலங்காரததாலே அலங்கரிப்பதாகவும் சொல்லி வைத்தது. அப்பேறு தான் இங்குப் பெற விரும்பப்படுவது.

கூடியிருந்து குளிர்ந்து - நம்மாழ்வார் அடியார்கள் குழாங்களை உடன் கூடுவதென்று கொலோ என்று முன்பு விரும்பிய படியே முடிவில் 'வந்தவர் எதிர் கொள்ள மாமணி மண்டபத்து அந்தமில பேரின்பத்து அடியரோடு இருந்தமை' என்று பெற்றுத் தலைக்கட்டினமைஅருளிச்செய்தார். இதனால் அடியார்கள் குழாங்களுடன் கூடியிருந்து குளிர்வது தான் பரம புருஷார்த்தம் என்பது தெரிவிக்கப்பட்டதாகிறது.

"கண்ணனையே காண்க இருகண் காயாம்பூ
வண்ணனையே வாழ்த்துக என் வாய்".

திருவரங்கக் கலம்பகம்:20

## இருபத்து எட்டாம் பாசுரம்

கறவைகள் பின்சென்று கானம் சேர்ந்துண்போம்
அறிவொன்றும் இல்லாத ஆய்க்குலத்து உன்தன்னைப்
பிறவி பெறுந்தனை புண்ணியம் யாமுடையோம்
குறைவொன்றும் இல்லாத கோவிந்தா ! உன்தன்றோடு
உறவேல் நமக்கு இங்கு ஒழிக்க ஒழியாது
அறியாத பிள்ளைகளோம் அன்பினால் உன்தன்னைச்
சிறுபேர் அழைத்தனவும் சீறி அருளாதே
இறைவா ! நீ தாராய் பறையேலோ ரெம்பாவாய்.

(பொருள்) நாங்கள் பசுக்களின் பின்னேயே (அவைகளை) ஓட்டிக் கொண்டு போய், காட்டை அடைந்து உண்டு உடம்பை வளர்ப்போம். (மேலும் நாங்கள்) சிறிதும் புத்தியில்லாத இடைக்குலத்திலே (பிறந்து) உன்னை (எங்களுடைய) யாகப் பிறக்கும் அளவு புண்ணியம்

உடையவர்களாய் இருக்கின்றோம். ஒருவகையாலும் ஒரு குறைவும் இல்லாமல் இருக்கிற கோவிந்தனே ! உன்னோடு எமக்குள்ள உறவோ என்றால் இப்போது நீக்குவதானால் நீங்காது. சிறு பெண்பிள்ளை களாய் இருக்கிற நாங்கள் (உன்னிடத்துள்ள) பக்தியினால் உன்னைச் சிறு பெயரை இட்டு அழைத்ததைப் பற்றியும் (அடைந்தவரது குற்றத்தைக் குணமாகக் கொள்ளுகின்ற) நீ அருள்கொண்டு கோபிக்காது இரு ; தலைவனே ! (எங்களுடைய நோன்பிற்கு வேண்டிய) பறையைத் தருவாயாக.

(சிறப்புப் பொருள்) 'மார்கழி நீராடுவான்' -என்று நோன்பைக் குறிப்பிட்டு, அந்நோன்புக்கு உபகரணங்களான சங்கு முதலியவற்றையும், நோன்பு முடிந்த பின்னர் அலங்கரித்துத் கொள்வதற்கு உபகரணமான ஆடை ஆபரணங்களையும் மகிழ்வுடன் கூடிக் குளிர்ந்து பாற்சோறு உண்கையும் கீழ் இரண்டுபட்டாலும் விரும்பிய ஆய்ச்சிகளை நோக்கிக் கண்ணபிரான் ; பெண்களே ! உங்களுடைய கருத்து இன்னதென்று எனக்குத் தோன்றவில்லை ; நீங்கள் இப்போது விரும்பியவற்றையும், இன்னும் சிலவற்றை விரும்பினால் அவற்றையும் நான் தரவேண்டில், உங்களுடைய நிலைமையை அறிந்து தர வேண்டியுள்ளது. பேறு பெற வேண்டும் எனில் அதற்கு அடிப்படையாக நீங்களும் சிறிது முயற்சி மேற்கொண்ட உபாயம் ஏதேனும் உண்டோ? என்று கேட்டருள, அது கேட்ட ஆய்ச்சிகள், 'பெருமானே! எங்கள் நிலைமையை நீதான் நேரே கண்ணால் காணவில்லையா? அறிவிலிகளான நாங்கள் எடுத்துக் கூற வேண்டும்படி நீ உணராதது ஒன்று உண்டோ? எங்கள் நிலைமையை நன்கு உணர்ந்த நீ, 'நீங்கள் மேற்கொண்ட உபாயம் ஏதேனும் உண்டோ? என வினவியது மிக அற்புதமாக இருந்தது ! 'என்று தங்கள் நிலைமை இருக்கும்படியை அறிவித்து, இவ்இடைப்பெண்கள் கேவலம் தயாவிஷயம் என்று திருவுள்ளம் பற்றி நீ எங்கள் காரியம் செய்தருள வேண்டும் ' என்று விண்ணப்பம் செய்யும் பாசுரம் இது.

கீழ், 'போற்றியாம் வந்தோம்', 'செங்கண் சிறுச் சிறிதே எம்மேல் விழியாவோ ?' 'உன்னை அருத்தித்து வந்தோம்' என்று இவை முதலான பாசுரங்களால் ஆய்ச்சிகள் தங்களுக்குள்ள அடையத் தக்க பேற்றின் மீதுள்ள விருப்பத்தை வெளியிட்டனர் ; அந்தப் பேற்றைப் பெறுவதற்கு உடலாகத் தங்களுடைய சாதனம்

வேறு இல்லாமையையும் (ஆகிஞ்சந்யத்தையும்) அவனுடைய வழியையும் (உபாயத்துவம்) வெளியிடுகின்றனர், இப்பாட்டில்,

"நீங்கள் விரும்பும் பறையைப் பெற நீங்கள் ஏதாவது முயற்சி செய்தது உண்டோ? எதையும் முயற்சி செய்யாமல் வேண்டியதைப் பெற முடியாது என்னும் பொருள் உங்களுக்குத் தெரிந்திருக்குமே " என்று இவர்களைப் பெருமான் கேட்க, 'ஒரு முயற்சியை மேற்கொள்ளக் கூடிய சத்தி உள்ளவர்களா நாங்கள்? எங்களுடைய ஆசாரத்தையும் அறிவையும் பார்த்தாலே உரிய வழியை மேற்கொள்ளும் தகுதியற்றவர்கள் நாங்கள் என்பதை அறியலாமே? மேலும் எங்களுடைய குறைகளையும் சரி செய்து நிரப்பவல்ல நிறைவாளனன்றோ நீ ; உன்னுடைய பூர்த்தியி!ல் குறை இருந்தாலன்றோ நாங்கள் உரிய வழியை மேற்கொள்ளாமல் இழக்கலாவது. உன்னை எங்கள் குலத்தில் பிறந்தவனாகப் பெற்றிருக்கும் இது ஒன்றே எங்களிடமுள்ள கைம்முதல். இதைக் கொண்டு நாங்கள் விரும்பும் பறையை எங்களுக்கு அளித்தருளவேண்டும்' என்கிறார்கள்.

"நோற்ற நோன்பிலேன் நுண்ணறிவிலேன்"-என்று நம்மாழ்வாரும்,

"குலங்களாய ஈரிரண்டில் ஒன்றிலும் பிறந்திலேன்
நலங்களாய நற்கலைகள் நாலிலும் நவின்றிலேன்
புலன்கள் ஐந்தும் வென்றிலேன் பொறியிலேன் புனிதநின்
இலங்கு பாதமன்றி மற்றோர் பற்றிலேன் எம் ஈசனே"

என்று திருமழிசைப் பிரானும்,

"நலந்தான் ஒன்றுமிலேன் நல்லதோர் அறம் செய்துமிலேன்" என்று திருமங்கையாழ்வாரும் அருளியுள்ள பொருள்களை இதில் குறிப்பிடுகிறார்கள். இப்பாட்டில் உபாயம் (வழி) அவனே என்னும் பொருளும், அடுத்த பாட்டில் உபேயம் (பலன்) அவனே என்னும் பொருளும் உணர்த்தப்படுகின்றன.

துவய, சரம சுலோகங்களின் முற்பாதிப் பொருளை விளக்குவது இப்பாட்டு, பிற்பாதிகளை விளக்குவது அடுத்த பாட்டு, ( இது பற்றிப்பின்னர்க் காண்போம்)

'அறிவொன்றும் இல்லாத ஆய்க்குலத்து' என்றதால் தாங்கள் ஞானம் அற்றவர்கள் என்பதை இவர்கள் அறிவிக்கின்றனர். அவனையே உபாயமாகப் பற்றுவோர் மற்ற உபாயங்களை முற்றிலும் விட்டுவிட வேண்டும் என்னும் பொருள் எல்லா நூல்களிலும் குறிப்பிடப்பட்டுள்ளது. 'ஸர்வதர் மாந் பரித்யஜ்ய' என்று கீதாசாரியனும் அருளினான்' மிகவும் உயர்ந்த இப்பொருளை விளக்குவதால் ஸ்ரீராமாயண, மகாபாரத வராக புராணங்களிலுள்ள சரமசுலோகங்கள் போல இப்பாசுரம் விளங்குவது, அவை வருமாறு:

உன் திருவடியை அடைந்தேன் ; என்னைக் காக்க வேண்டும் -என்று யார் சொன்னாலும் அவர்களுக்கு அபயம் அளித்துக் காப்பது என்னுடைய விரதம்"

**-வால்மீகி ராமாயணம், யுத்தகாண்டம் 18ஆம் சர்க்கம்**
சுலோகம்.33-35

"எல்லாச் சாதனங்களையும் அடியோடுவிட்டு என்னை ஒருவனையே உபாயமாக அடை; நான் அந்தந்த அரிய உபாயங்களின் இடத்தில் நின்று அவ்வவற்றின் பலனைக் கொடுப்பேன்; நீ துக்கமடைய வேண்யடிதில்லை" (மாசுச) என்பது மகாபாரதச் சரமசுலோகம்.

"உடல் மனம் முதலியவை நல்ல நிலையில் இருக்கும்போது என்னன ஒருவன் சரணடைந்தால், பின்பு அவன் மூச்சடங்கி முடியும் அளவில் அவனை நான் நினைத்து இருந்து நற்கதியை அடைவிப்பேன்" -ஞானப்பிரான் பிராட்டி மூலம் அருளிய வராக சரமசுலோகம்.

சாத்யோபாயங்களை (மக்களால் சாதித்துக் கொள்ளும் உபாயம். வேதம் படித்துப் பொருள் உணர்ந்து வாழ்ந்து, பாவங்களிலிருந்து விலகி, அந்தரங்க சுத்தி பெற்று, இந்திரியங்களை வென்று, பற்றுவிலக்கி, ஆத்ம யோகசித்தி பெற்று, முறையே தியானம், யோகம், ஞான வழி புண்ணிய பலத்தால் பகவானை அடைதல்) விட்டு, சித்தோபாயங்களை (பகவானையே பற்றி, அவன்மீது வைத்த காதலாலேயே அவனை வென்று அவன்மூலமே அவனை அடைதல் இது ஸ்ரீ ஆண்டாள் வழி) அதாவது எம்பெருமானை உபாயமாகப் பற்றிய அதிகாரிக்கு, அதிகாரபூர்த்தி உண்டாவதற்கு பின்வரும் ஆறும் இன்றியமையாதவனவாம்.

அவையாவன:

1. கறவைகள் பின் சென்று.... ஆய்க்குலத்து 'என்பதால்- அறிவில்லாத பசுக்களோடு பழகுதலாகிய தங்களுடைய தாழ்வையும்,

2. 'சென்று சேர்ந்துண்போம்' -என்பதால் தமக்கு நற்கருமம் ஒன்றும் இல்லாமையையும்

3. 'உன்தன்னை.....ஒழக்க ஒழியாது' -என்பதால் பகவானோடு தமக்கு உண்டான சம்பந்தத்தையும்

4. 'குறைவொன்று மில்லாத கோவிந்தா' -என்பதால் அப்பெருமானுடைய குணபூர்த்தியையும்

5. 'அறியாத......சீறியருளாதே' -என்பதால், முன்னே செய்த குற்றங்களுக்கு மன்னிக்க வேண்டுதலையும் கூறி,

6. 'இறைவா ! நீ தாராய் பறை' -என்பதால் அடையத்தக்க பேற்றினை (பிராப்பியவிருப்பம்) சாட்சாத் உபாயமான சருவேசரவனிடத்தில் தெரிவிக்கிறர்கள் என்க.

'பெண்களே ! ஒரு ஜீவன் ஆத்ம சுகம்பெற, முதலில் நல்ல ஆசாரிய சம்பந்தம் பெறவேண்டும் என்றான். அதற்குக் கோபியர், 'கண்ணா !' எங்கள் ஆசாரியன் யார் தெரியுமா? கறவைகளாகிய பசுக்கள் என்றனர். பசுக்களை அறிவில்லாதவை என்பார்கள். எங்களுக்குக் காடே குருகுல வாசம் ; இப்படிப்பட்ட எங்களிடம் ஞானம் உண்டா? என்று கேட்கிறாயே நன்றாமோ? கண்ணா. வழிகாட்டிச் செல்லும் கன்றுகள் முன்னே செல்ல, அவைகளின் பின்னே இத்தனை காலமும் சென்று வருகின்றோம் அல்லாது, வசிட்டர், பராசரர் போன்ற முனிவர்கள் பின்னே சென்ற ஞானம் எங்களுக்கு இல்லை. ஊரிலே எங்கள் கால்கள் பொருந்தாமல் காட்டிலே பொருந்த பசுக்களை மேய்த்து வாழ்ந்து வருகிறோம்.

அதுவும் பசுக்களின் பின்னே போய் கோயில், திருமலை, பெருமாள் கோயில் முதலிய திருப்பதிகளில் தங்கினோமல்லோம்.

'கானம் சேர்ந்து' -முனிவர்களும், ஞானிகளும், சாதுக்களும் வசிக்கும் தண்ட காரணியம், நைமிசாணியம், பதரிகாசிரமம் போன்ற காடுகளிலும் சென்று சேர்ந்தோமில்லை என்றனர். அது கேட்ட பெருமான், 'நீங்களாகத் தேடிச் செல்லாவிட்டாலும் நீங்கள்

செல்லும் காடுகளில் அவர்கள் வசிப்பதால் புண்ணித் திருத்தலவாசம் உங்களுக்கு உண்டு என்று கொள்ளலாம் ; நீங்கள் பசுக்களைப் பாதுகாப்பதால் அதை உயர்ந்த தருமம் என்று கொள்ளலாம். காட்டில் தங்குவதையே வானப்பிரஸ்த ஆசிரமதருமாகக் கொள்ளலாம்' என்றான்.

'உண்போம்' - பெருமானே ! நீங்கள் குறிப்பிட்ட எந்த நிலையிலும் நாங்கள் கானம் சேரவில்லை ; வயிறு வளர்ப்பதற்காகச் செய்த செயல் அது 'என்றனர்' -சேர்ந்து உண்போம் -என்ற சொல் நயத்தால், காட்டில் சென்று புழுதியும் வியர்வையும் போகக் குளித்து உண்பதும் இல்லை என்பது பெறப்படும். இன்னும் 'உண்போம் என்ற சொற்போக்கால்,அருகில் இருந்தார் கையிலே ஒருபிடி இட்டும் அறியோம் என்றவாறாம். பிறருக்கு பிடிஇட்டு உண்டால் விருந்தினரை வழிபட்ட ஒரு தருமம் ஏற்பட வழி உண்டாகும் அன்றோ?

இதுகேட்ட பெருமான், 'பெண்களே ! கறவைகள் பின் செல்வதனால் வரும் குற்றம் என்ன? நான் காலிப் பின்னே போவதில்லையோ ? காடுவாழ் சாதியும் ஆகப் பெற்றதில்லையோ? 'ஆடி அமுதுசெய்' -என்று தாய் வேண்டிய போதும், குளிக்காமல் மந்திரவிதிப்படி பூசைகளையும் செய்யாமல் திரிந்தேன் அன்றோ? எனக்கு ஏதேனும் குற்றம் உண்டாகின்றதோ? என்ன, அது கேட்ட ஆய்ச்சிகள், ஆ ! ஆ ! நல்ல எடுத்துக் காட்டு எடுத்துக் கூறினை ! இப்படிப்பட்ட பேச்சை மீண்டும் பேசாதே ! என்றனர். அதற்குப் பெருமான், (சிலர் செய்யத் தகாதவை செய்யினும் அவர்களுடைய பெரும் பெருமையினால் குற்றமற்றவர் ஆகின்றனர்) என்ற சாத்திரத்தை நோக்கி அன்றோ நீங்கள் என்னிடத்தில் குற்றம் காணாது ஒழிவது. சரி ! உங்களிடம் ஞானமாகிய பெருமைக்குரிய இயல்பு இல்லையோ? 'என்ன, அறிவு ஒன்றும் இல்லாத ஆய்க்குலம் அன்றோ எங்களுடையது' என்கின்றனர்.

"ஒன்றும் அறிவொன்றில்லாத உருவறைக் கோபாலர்" - என்றார் பெரியாழ்வாரும், "வாலுக்கு உழக்கு நெல் கொள்வார்" அதாவது ஒரு பசு மேய்ப்பதற்குக் கூலி ஓர் உழக்குநெல் என்று இடையர் கூலி பேசிக் கொண்டு பல பசுக்களை மேய்த்து வந்து, கூலி பெறுங் காலத்தில், ; இத்தனை பசுக்களை மேய்த்தோம் என்று கணக்கிட்டுச் சொல்வதற்கு வல்லமை இல்லாமையால் தாங்கள்

மேய்த்த பசுக்களை வரிசையாக நிறுத்தி ஒவ்வொரு பசுவின் வாலையும் தொட்டுக்காட்டி, 'இதற்கு ஓர் உழக்கு, இதற்கு ஓர் உழக்கு' என்று சொல்லிக் கூலி பெறுவதாம். (ஆறாயிரப்படி உரை) விதுரைப் போல முற்பிறவித் தொடர்பான ஞானமாவது உண்டோ -என்று கேட்க, அதுவும் இல்லை என்று அவர்கள் சொல்லி,'கண்ணா !-பகவத் ஞானத்திற்கு வேண்டிய ஆத்ம ஞானமும் இல்லை ; அதற்குச் சாத்தியமான பக்தியும் இல்லை - அறிவு ஒன்றும் இல்லை - ஞான சூன்யங்கள் நாங்கள் என்றனர்.

'சரி ! கர்ம, ஞான, பக்திகளும் இல்லை என்கிறீர்கள். நீங்கள் கேட்டவற்றை நான் கொடுக்க புண்ணியமாவது செய்திருக்க வேண்டுமே ! அப்படி என்ன புண்ணியம் செய்திருக்கிறீர்கள் ? என்று கண்ணன் கேட்க, கண்ணா ! ஆயர்குலக் கொழுந்தே ! உன்னை அடையும் பேறு பெற்றுள்ள எங்களுக்கு வேறு புண்ணியம் என்ன வேண்டும்? எங்கள் ஆயர்குலத்தில் யசோதைக்கு மகனாக நீ பிறந்ததே நாங்கள் செய்த பாக்கியம்.

பிறவி பெறுந்தனை-என்ற இடத்து, பிறவி என்ற சொல்-வார்த்தைப்பாடு. அதற்குத் தனியே ஒரு பொருள் இல்லை என்க. பெறுந்தனை புண்ணியம்-பெறுவதற்குத் தக்க பாக்கியம்.

'இமையோர் குல முதல்வனான நீ ஆய்க்குல முதல்வனாக வந்து பிறந்த புண்ணியம் உடையோம் ; தர்மத்தை நிலைநிறுத்திப் பலன் தரவல்லவனான நீ கையாளாக வந்து இருக்கிற புண்ணியம் செய்த நாம்' என்றனர்.

'போற்றப் பறை தரும் புண்ணியனே, பிறவி பெறும் தனைப் புண்ணியமாக ஆனான். நாங்கள் ஆய்க்குலத்தில் பிறந்து படைத்த செல்வம் இது.

**"........திருவிண்ணகர் சேர்ந்த பிரான்**
**புகர்கொள் கீர்த்தியல்லால் இல்லையாவர்க்கும் புண்ணியமே"**

-திருவாய் மொழி. 6 :3:3)

என்கிறப டியே எல்லாருக்கும் புண்ணியமாய் இருப்பது ஒன்றை அன்றோ நாங்கள் பற்றி இருக்கிறோம்.

'குறை ஒன்றும் இல்லாத கோவிந்தா' -என்றது உனக்கு ஒரு குறை உண்டானால் அன்றோ எங்களுக்கு ஒரு குறை உண்டாவது?

நீயாகவே உன்னைத் தாழவிட்டு எங்கள் குலத்திலே பிறந்தது உனக்குக் குறை ஒன்றும் இல்லை ; கையிலே கோலும் கண்ணிக் கயிறும் ஏந்தி , காற்றினால் கிளப்பப்பட்ட தூசிபடிந்த திருக்குழலும் கன்றுகளைப் புல் இருக்கும் பக்கம் மேய்த்துத் திரிகிறபோது திருவடிகளிலே கிடந்த, கழல்கள் சதங்கைகள் ஆரவாரிக்க குளிர்ந்த முகத்தோடு குலத் தொழிலைச் செய்ய, கன்றுகளை ஓட்டிக் காட்டிற்குச் சென்று மேய்த்து வருவதில் குறை ஒன்றும் இல்லாத கோவிந்தன் நீ என்றார்கள். உன்னிடம் உள்ளது அள்ள அள்ளக் குறையாது ; நீ மேடு ; நாங்கள் பள்ளம் ; நீபர்வதம் ; நாங்கள் பாதலம். பரமபதத்திலே நித்திய சூரிகளுடைய ஓலக்கத்திலே அவாப்த சமஸ்த காமனாய் இருக்கும் இருப்பைத் தவிர்ந்து, இடைச் சேரியில் பசுமேய்க்கப் பிறந்தது குறைவாளரான எங்களை நிறைவாளராக்க அன்றோ? எல்லாச் சாதனங்களையும் அடியோடு விட்டு என்னை ஒருவனையே உபாயமாக அடை என்றவனன்றோ நீ என்கின்றனர். கோவிந்தன் - எளிமை, அடியார்க்கு அடிமை, சுவாமித்துவம் ஆகிய திருக்கலியாண குணங்களை உடையவன்.

இது கேட்ட பெருமான், ! நான் குறைவொன்றும் இல்லாதவனாகவும், நீங்கள் அறிவொன்றும் இல்லாதவராகவும் இருப்பது கொண்டு உங்கள் காரியத்தை நான் செய்ய வேண்டும் என்று ஏதேனும் நிர்பந்தம் உண்டோ? என்னுடைய குறைவு ஒன்றும் இல்லாமை உங்களைக் கைவிடுவதற்கும் காரணமாக் கூடுமே? என்று கண்ணன் திருவுள்ளமாக, ',என்ன?' ஆ ! ஆ ! உதாசீனரிடத்துச் சொல்லவேண்டிய சொற்களையோ உறவினரிடம் சொல்வது என்? ஏன் உனக்கும் நமக்கும் உள்ள உறவை மறந்தாயோ? என்றனர். அது கேட்ட பெருமான் இவ்வுறவைக் கொண்டோ நீங்கள் இவ்வாறு சொல்வது? இவ்வுறவு எத்தனை நாளைக்கு நிற்கும் என்கிறீர்கள்?, ஒரு நீர்க்குடம் உடைத்தால் கழியவல்ல உறவல்லவோ இது 'என்ன' 'இவ்வுறவு ஒருவராலும் ஒழிக்க ஒழியாது' என்கின்றனர்.

"நான் உன்னை அன்றி இலேன் கண்டாய் நாரயணனே ! நீ என்னை அன்றி இலை" என்னும் நான் முகன் திருவந்தாதி இங்கு நோக்கத் தகும். விஞ்ஞான ஆய்வு இருஉண்மைகளைக் கண்டறிந்து உணர்த்துகிறது. 1. எல்லைக்குட்பட்டது எல்லையற்ற தோடு எப்போதும் தொடர்பு கொண்டுள்ளது. 2. நாம் அனைவரும் ஆன்மீக நிலையிலும் பருவுடல் நிலையிலும் ஒருவரோடு ஒருவர் தொடர்பு உடையவர்கள்.

உன்தன்னோடு உறவு - நீ மைத்துனன் நம்பி, நாங்கள் மாமிமார் மக்கள் என்னும் உறவு. பரிபூரணனான உன்னோடு உன்முன்னிலையை விரும்புகின்ற எங்கள் உறவு. பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்கும் உள்ள நவவிதசம்பந்தம் இங்குஅறியத்தக்கது.

| | பரமாத்மா | | ஜீவாத்மா |
|---|---|---|---|
| 1. | தந்தை | - | தனயன் என்னும் உறவு |
| 2. | காப்பவன் | - | காக்கப்படத் தக்கவன் உறவு |
| 3. | அடிமை கொள்பவன் தலைவன் | - | அடிமை உறவு |
| 4. | தலைவன் | - | தலைவி உறவு |
| 5. | அறியப்படுபவன் | - | அறிபவன் உறவு |
| 6. | சொத்துக்குரியவன் | - | சொத்துஉறவு |
| 7. | ஆன்மா | - | உடல் உறவு |
| 8. | தாங்குகிறவன் | - | தாங்கப்படும் பொருள் உறவு |
| 9. | போகத்தை அனுபவிப்பவன் | - | போக்கியப்பொருள் |

ஒழிக்க ஒழியாது - உன்னாலும் எங்களாலும் ஒழிக்க ஒண்ணாது. உன்னுடைய உறவினாலும் எங்களுடைய உறவினராலும் ஒழிக்க ஒண்ணாது. ஊரே கூடி நின்றாலும் ஒழிக்க ஒண்ணாது.

தீவ மேவ மாதாச பிதாத்வ மேவ
தீவ மேவ பந்துஸ்ச குரு ஸ்த்வமேவ
தீவ மேவ வித்யா த்ரவிணம் த்வமேவ
தீவ மேவ ஸரவம் மமதேவதேவ - சரணாகதிகத்யம் 483-1

(பொருள்) தேவ தேவனே! எனக்கு நீயே தாயும் தந்தையும் நீ உறவும் ஆசாரியனும், நீயே கல்வியும் செல்வமும். நீயே எல்லாமும்

இது கேட்ட எம்பெருமான், பெண்களே! நீங்கள் உங்களை ஆய்ச்சியராகவும், என்னைக் கோவிந்தனாகவும் இப்போதன்றோ சொல்லி உறவு கொண்டாடுகிறீர்கள். இதற்கு முன்பெல்லாம் நீங்கள் என்னை நாராயணன் என்றன்றே சொன்னீர்கள் (மார்கழித்திங்கள் (1) - நாராயணனே. கீசுகீசென்று (7) நாராயணன் மூர்த்தி, நோற்று (10) நாற்றத்துழாய்முடி நாராயணன்) சமயத்துக்குத் தக்கபடி பேசுகிற உங்களை நம்பலாமோ? என்ன, பிரானே! சுலபனாய், எம்மோடு ஒரே சாதியில் பிறந்தவனாய் உள்ள உன்னை நாங்கள் அன்பிலே நாராயணன் என்று சொல்லி அபசாரப்பட்டது உண்மையே,

கோபாலன் என்றும், கோவிந்தன், என்றும் இப்படிப்பட்ட பெரும் பெயர்கள் இருக்க நாராயணன் என்ற சிறு பெயராலே உன்னை அழைத்த குற்றத்தைப் பொறுத்தருள வேண்டும் என்று காலில் விழுகின்றனர்.

இங்கு சிறுபேர் என்றது நாராயண நாமத்தை என்பர். இந்திரன் வந்து கண்ணபிரானுக்குக் கோவிந்தாபிஷகம் செய்த பின்பு, அவனை நாராயணன் என்றது குற்றமன்றோ? ஒருவன் முடிசூடப்பெற்று அபிடேகப் பெயர் பெற்ற பின்னர், அவனை முன்னைப் பெயரிட்டு அழைக்கைக்கு மேற்பட்ட குற்றமுண்டோ? (ஆறாயிரப்படி)

திருப்பாவையில் கூடாரை வெல்லும் சீர்க் கோவிந்தா (27) குறை ஒன்றும் இல்லாத கோவிந்தா (28) கோவிந்தா (29) என்று அடுத்து 3 பாசுரங்களில் கோவிந்தநாமம் குறிப்பிடப்படுகிறது.
நாச்சியார் திருமொழியில் கோவிந்தநாமம் ஒன்பது இடங்களில் இடம் பெறுகின்றது (1:3) (2:9)(6.2) (8:3) (10:7) (12,4) (12:9 (13:9)

நாராயணன் என்றும் திருநாமம் 5 இடங்களில் குறிப்பிடப் பெறுகிறது. (2:1) (5:10) (6:1) (6:8) (8:6)

கோதை பிறந்த ஊர் கோவிந்தன் வாழும் ஊர், பெரிய நாமம் சிறுத்தது. கிருஷ்ணாவதாரத்திலே! கண்ணன் அடியார்க்கு எளியன், உத்தமதானபுரம் அன்னபூரணி விழாவில் சிறுவர்,

இராமா கிருஷ்ணா - கோவிந்தா
கள்ளக் கிருஷ்ணா - கோவிந்தா
வெண்ணெய் திருடி - கோவிந்தா

வேணுகோபாலா - கோவிந்தா - என்று அவனது எளிவந்த தன்மையைப் பாடி மகிழ்வது இங்குக் கருத்தக்கது. அடியவர்க்கு எளியவன் என்பதைத் தெரிவிக்க வேண்டும். மாறாகப் பரத்துவநிலையைத் தெரிவித்தல் இழுக்காகும்.

அறியாதபிள்ளைாகளோம்-அன்பினால்

உன்தன்னைச் சிறுபேர் அழைத்தனவும் - சீறி அருளாதே - என்று நாராயண நாமம் குறிப்பிட்டதற்கு அபசாரமாக 3 வாக்கியங்களில் மன்னிப்பு வேண்டுகின்றனர்.

அறிவின்மை, பிள்ளைமை, அன்புடைமை-ஆகிய இம்மூன்றன் அடிப்படையில் வரும் குற்றங்கள் பொறுக்கத்தக்கனவாம்.

விசுவரூப தரிசனம் கண்ட அருச்சுனன், "உமது இப்பெருமையை அறியாது கவனமின்றி அன்பால் தோழன் என்று

கருதி, ஏகிருஷ்ணா, ஏ, யாதவா ஏ, கூட்டாளி என்று பணிவின்றி எது சொல்லப்பட்டதோ, அச்சுதா? விளையாடிய பொழுதும், படுத்திருந்த பொழுதும், அமர்ந்துகிடந்த பொழுதும், உணவு அருந்துகையிலும் தனித்தோ பிறர் பார்வையிலோ இருந்த பொழுதும், எங்ஙனம் அவமதிக்கப்பட்டீரோ, அதையெல்லாம் அளப்பிலோய் மன்னித்தருள்க" என்றான். விசுவரூப தர்சன யோகம் - அத். 11. 41-42.

அத்துடன், எங்களுக்குள் பேய்ப்பெண்ணே, ஊமையே, செவிடே, நாணாதாய் என அழைத்துக் கொண்டதையும் பொறுத்தருள்க என்றனர்.

பித்தர் சொன்னவும் பேதையர் சொன்னவும்

பத்தர் சொன்னவும் பன்னப் பெறுபவோ - என்றார்கம்பரும் அழைத்தனவும் - நாராயண நாமத்துடன் நில்லாமல், பாற்கடலில் பையத்துயின்ற பரமன், ஊழிமுதல்வன், பாழியந்தோளுடைப் பற்பநாபன், தோவாதிதேவனை, என்று பரத்துவத்தைச் சொல்லும் சிறுபேர்கள் பலவற்றையும்சொன்னதை நினைக்கிறார்கள்.

இறைவா! சர்வ சுதந்தரனான நீ எங்களுக்கு அருள் செய்தால் ஏன் செய்தாய்? என்பாரும், அதனைத் தடுப்பாரும் உண்டோ? நீயே உபாயம் என்று, ஒரு கை முதலும் இல்லாமல் உன்னை அடிபணிந்திருக்கும் எங்களுக்கும் பரிபூரணனான எல்லாவலிமையும் படைத்த உமக்கும் உள்ள உறவு முறையைப் பார்த்து எங்களுக்கு நீ அருள் செய்ய வேண்டும் என்றனர் கோபியர்.

இறைவா! என்றது வானோர் இறையை நினைத்து அன்று ஆய்க்குலமாய் வந்து தோன்றின நம் இறை என்றபடி.

சரி! நப்பின்னையை இட்டு என்னை எழுப்பச் சொன்னீர்களே! இப்போது அது பற்றியே எதுவும் காணோமே என்று கண்ணன் கேட்க, கண்ணா! கண்ணாடியும் விசிறியும் தந்து உன் மணாளானை எழுப்பி அனுப்பு என்று முன்பு வேண்டியது உண்மையே! ஆனால் அது உன் விருப்பத்திற்கு மாறாக அவளுக்குச் செய்ய முடியாத செயலாக இருந்து விட்டதால் அவள்பதில் கூறாமல் இருப்பதிலிருந்து ஓ! கண்ணன் ஒருவனுக்கே பலன் கொடுக்கும் பெருமை உண்டு, பிராட்டிக்குத் தகவுரை கூறும் (புருஷகாரம்) தன்மையே உண்டு என்று இப்போது உணர்ந்து விட்டோம், இந்தத் தவறையும் மன்னிப்பாயாக! எளியன் நீ! உன்னோடு எங்களுக்குள்ள உறவைச் சொன்னோம், உன் கருணையன்றி வேறு வழி தெரியாது

தவித்துநிற்கும் எங்களை நீ காப்பாற்ற வேண்டும் என்று ஆய்ச்சியர் வேண்டினர். நீதாராய்பறை - பறை என்பதன் உண்மையான பொருள் அடுத்த பாசுரத்தில் குறிப்பிடப்படுகிறது.

முதல்பாட்டில் நாராயணனே பறை தருவான் என்று சொல்லி இப்பாட்டில் இறைவா நீ தாராய் பறை என்று சொல்வதால் மோட்சப்பலனுக்குப் பகவானின் கருணையே உபாயம் (வழி) மற்ற நம் கர்ம, ஞான, பக்தி, பிரபத்தி, எதுவும் வழியில்லை, அவையெல்லாம் நமக்கு வழிகாட்டிகளேயாகும் என்பதை ஸ்ரீ ஆண்டாள் இப்பாசுரத்தில் எடுத்துரைக்கின்றாள்.

துவய மந்திரத்தின் முற்பாதிப் பொருள், ஸ்ரீமானான நாராயணனுடைய திருவடிகளை உபாயமாகப் பற்றுகிறேன், என்பது இப்பாட்டில் உணர்த்தப்பட்டது, (பெரிய பிராட்டியும் ஈசுவரனுமான சேர்த்தியில் என்றும் கைங்கரியம் புரிவேனாக - என்னும் பிற்பாதிப் பொருள் அடுத்தபாசுரத்தில் உணர்த்தப்படுகிறது) மேலும் எல்லாச்சாதனங்களையும் அடியோடு விட்டு என்னை ஒருவனையே உபாயமாக அடை என்னும் சரமசுலோக முற்பாதிப் பொருளும் உணர்த்தப்பட்டது.

மோட்சத்தில் விருப்பம் உடைய முமுட்சுவுக்கு 3 விரோதிகள் (காமங்கள்) தடையாக உள்ளன. அவையாவன.

1. சொரூப விரோதியை ஒழிப்பது - சீவான்ம சொரூபம், யானேநீ என் உடைமையும் நீயே, என்று இருப்பது. இதன் விரோதி அகப்புறப் பற்றுகள். இதுகழிவது அடுத்தபாசுரத்தில்.
2. உபாயவிரோதியை ஒழிப்பது - என்துன்பத்தைப் போக்க, போக்குவீடு வேறு இல்லை என்றிருப்பது. துன்பங்களைப் போக்கினாலும் போக்கா விட்டாலும் துணையாக வேறு ஒருவரையும் உடையே னல்லேன் என்று வேறு சாதனத் தொடர் பின்றி இருத்தல்.
3. களைவாய் துன்பம் களையா தொழிவாய் களைகண் மற்றிலேன் மன்னிக்க வேண்டியதால் இப்பாசுரத்தில் இவ்விரோதி நீக்கப்பட்டது.
4. பிராப்பிய விரோதிகழிவு மற்றை நம் காமங்கள் மாற்று என்று இருப்பதால் இது அடுத்த பாசுரத்தில் கழிகிறது. (பலனை அனுபவிக்கும் போது ஆனந்தம் உண்டாகியே தீரும், அதைத்தன்னுடையதாக நினைத்தால் அதுவே பெரியவிரோதி?

## இருபத்து ஒன்பதாம் பாசுரம்

**சிற்றஞ் சிறுகாலை வந்துன்னைச் சேவித்துஉன்
பொற்றாமரை அடியே போற்றும் பொருள் கேளாய்
பெற்றம் மேய்த்து உண்ணும் குலத்தில் பிறந்த நீ
குற்றேவல் எங்களைக் கொள்ளாமல் போகாது
இற்றைப் பறை கொள்வான் அன்று காண் கோவிந்தா
எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்தன்னோடு
உற்றோமே ஆவோம் உனக்கே நாம் ஆட் செய்வோம்
மற்றை நம் காமங்கள் மாற்றேலோ ரெம்பாவாய்.**

(பொருள்) மிக்க விடியற்காலத்திலேயே (நீ இருக்கும் இடத்தில்) வந்து, உன்னை வணங்கி உனது அழகிய தாமரை மலர்போன்ற திருவடிகளையே (நாங்கள்) மங்களாசாசனம் செய்வதன் பயனைக் கருத்துடன் கேட்பாயாக. நீ மாடுகளை மேய்த்து (அவை உண்டது கண்டபின்) உண்கின்ற குலத்திலே பிறந்து விட்டு, எங்களிடத்தில் பணிவிடைகளைக் கொள்ளாமல் (விட்டுவிடுவது) (உனக்குத்) தகாது, இப்போது (நாங்கள் வந்தது) பறையைக்கொள்ளும் பொருட்டாக அன்று, கோவிந்தனே! நாங்கள் எப்போது (நீ எடுக்கும்) எந்த அவதாரத்திலும் (இப்போது இருப்பதுபோலவே) உன்னோடு பொருந்தியவர்களாகவே இருக்க வேண்டும், (இவைகளை விட வேறுபட்ட எங்கள் விருப்பங்களைப் போக்கி அருள்வாயாக.)

(சிறப்புப் பொருள்) இப்பாசுரத்தில், தாங்கள் நோன்பு நோற்பதென்பதும் அதற்கு வேண்டியவற்றைக் கண்ணபிரான் தருவான் என்பதும் ஒரு காரணமே, தவிர எங்களுடைய எண்ணம் உன்திருவடிகளில் நித்தியகைங்கரியம் செய்வது தான், இனி ஒரு நொடிப் பொழுதும் உன்னைவிட்டு நாங்கள் பிரிந்தோமாக ஒண்ணாது, வேறு ஒருவகையான விருப்பமும் எமக்குப் பிறவாவண்ணம் நீயே அருள் புரிய வேண்டும்! என்று காலைக் கட்டுகிறார்கள். கீழே எல்லாம் பறை, பறை என்று சொல்லி வந்த ஆய்ச்சியர், அப்பறையின் பொருளை உறுதிபடக்கூறி விண்ணப்பம் செய்யும் பாசுரம் இது. தாங்கள் பறை என்று சொல்லுவது கண்ணன் திருவடிகளில் செய்யும் கைங்கரியமே என்று நிர்ணயிக்கிறார்கள். அக்கைங்கரியமும் அவன் உகப்புக்காகவே செய்யப்படுகிறதே ஒழியத்தங்களுடைய ஆனந்தத்துக்காக அன்று என்னும் அரும் பொருளையும் அறிவிக்கிறார்கள்.

தனக்கேயாக எனைக் கொளும் ஈதே என்று நம் மாழ்வாரால் அறிவிக்கப்பட்டபொருளை, உனக்கே நாம் ஆட்செய்வோம், என்னும் அடியிலே அறிவிக்கிறார்கள். நம்மாழ்வார் எம்மா வீட்டுத் திறமும் என்று தொடங்கும் திருவாய்மொழியில் இவ்வாறு பகவத்கைங்கரியத்தின் நிலையை அறிவித்து விட்டு, அதன் எல்லைநிலமான பாகவத கைங்கரியத்தை நெடுமாற்கடிமை என்னும் திருவாய் மொழியிலே அனுசந்தித்தார். இவர்கள் ஒருவரை ஒருவர் எழுப்பும் பாடல்களிலே பாகவத கைங்கரித்தின் பெருமையை அறிவித்து, அது நிலை நிற்பதற்காக இப்பாட்டிலே அதற்கும் அடியான பகவத்கைங்கரியத்தின் நிலையைநிர்ணயிக்கிறார்கள்.

சிற்றஞ்சிறுகாலை - சூரிய உதய காலத்தைக் கூறியது, சின்னஞ்சிறு பையன் செக்கச் சிவந்த தலை என்னும் சொல்லாட்சிகளைாப் போன்றது இது.

காலை - செங்கல் பொடிக்கூறை வெண்பல் தவத்தவர் என்று குறிப்பிடும் தாமதகுணமுள்ளவர்கள் எழுந்து கர்மானுஷ்டானம் செய்யும் நேரம்.

சிறுகாலை-வாசநறுங்குழல் ஆய்ச்சியர் மத்தினால் தயிர் கடையும் நேரம். காலை நேரத்திற்குச் சற்றுமுந்திய பொழுது.

சிற்றஞ்சிறுகாலை-மேற்சொன்ன இரண்டுக்கும் முந்திய நேரம். அதாவது நடுக்கும் அருணோதய காலம். சிற்றஞ்சிறுகாலை - பரமாத்வோடு ஜீவாத்மா கலந்து அனுபவிக்கும் காலம்.

(கண்ணா! இவ்வளவு காலையிலேயே வந்தது மட்டும் அல்ல, எப்படிவந்தோம் என்று கேள்? எங்கள் படுக்கையைவிட்டுவந்து, வாசற் கட்டினையும், காவலையும் கடந்து, உன் தோரணவாசல் வந்து, கோயில் காப்பான், வாசல் காப்பான் இருக்கும் இடம் வந்து, நந்தகோபர் திருமாளிகையின் உள்ளே உன் பள்ளிக் கட்டிலின் கீழ் உன்னை அருத்தித்து நிற்கிறோம் என்று வருத்தம் தோயக்கூறுவதைக் கண்ணன் கேட்டான்.

பொற்றாமரை அடியே போற்றும் கண்ணா! பெண்களான எங்களுக்குப் பூவிலும் பொன்னிலும் ஆசை அதிகம். ஆனால் பொன்போல் இனிய தாமரை மலர்போல் ஒரு சேர நின்ற உன் திருவடிகளுக்கு மங்களம் உண்டாக வேண்டும் என்று பல்லாண்டு பாடுகிறோம். பாடுவதே பயன் என்று வேறு பயனை விரும்பாமல் உன்னைப் பாடவந்தோம் என்றனர்.

பொருள்கேளாய்-நாங்கள் சொல்லும் பொருள் கேளாய் என்றனர். நாங்களே வந்ததும், அத்துடன் உன்னைச் சேவித்து மங்களா சாசனம் செய்ததும் எங்களுடைய அன்பு மிகுதியைக் காட்டும் என்றவாறு.

உன் பொன் தாமரை என திருவடிக்கு மூன்று சிறப்பிட்டுக் கூறியது எம்பெருமானது திருவடிகள் விலைமதிப்பற்றவை, இனிமையானவை என்று அறிவித்தற்காக.

பெற்றம் மேய்த்துண்ணும் குலத்தில் பிறந்து நீ குற்றேவல் எங்களைக் கொள்ளாமல் போகாது - நீ மேன்மையைவிட்டு (பரத்துவம்) எளிமையை (சௌப்பியத்தை) உலகத்தார்க்கு வெளியிட வேணும் என்றே திருவவதரித்து இருத்தலால் எங்கள் பிரார்த்தனையைத் தலைக்கட்டாமல் (முடிக்காமல்) போனால் நீ திருவவதரித்த பயனை இழந்தவன் ஆவாய் என்றபடி.

பெற்றம் மேய்த்துண்ணும் குலம் - நித்திய சூரிகளின் நடுவே ஏழுலகும் தனிக்கோல் செல்ல வீற்றிருக்கும் இருப்பைத் தவிர்ந்து இவ்இடைக்குலத்திலே நீ வந்து பிறந்ததற்கு ஒருபயன் வேண்டாவோ? எங்களிடம் நீ கைங்கரியம், கொள்ளாது ஒழியின் உன்னுடைய இப்பிறவி பயனற்றதாம் அன்றோ என்றனர்.

குற்றேவல் உடையவாளும், அடுக்கு உருவும் ஆயுதமும் அணிவித்தல், கலசப்பானை பிடித்தல், படிகம், வைத்தல், உமிழும் பொன்வட்டில் எடுத்தல், திருவடிகளை விளக்குதல், உலர்ந்த ஆடையை மடித்துத் திருமேனி ஒற்றுதல், சாமரம் இரட்டுதல், வெற்றிலை, பாக்கு கொடுத்தல், அடிவருடுதல் ஆகிய பணிகளை எங்களுக்குத் கொடுத்து உனக்குக் குற்றேவல் செய்யும்படியாகக் கைங்கரியத்தைக் காட்டி வைக்க வேண்டும் என்ற எங்கள் வேண்டுகோளின் 'பொருள் கேட்பாயாக' என்றனர்.

எங்களை உருபுமயக்கம். ஐந்தாம் வேற்றுமைப் பொருள் கொள்க. (எங்களிடம்) குற்றேவல் . . . போகாது - என்ற இடத்தில், கொம்மைமுலைகள் இடர்தீரக் கோவிந்தற்கோர் குற்றேவல், இம்மைப் பிறவி செய்யாதே இனிப்போய்ச் செய்யும் தவந்தான் என் - என்னும் நாச்சியார் திருமொழி ஒப்பு நோக்கத் தக்கது.

இப்படி, எங்களிடத்தில் குற்றேவல் கொள்ள வேணும் என்று வேண்டிய ஆய்ச்சிகளை நோக்கிக் கண்ணபிரான், பெண்களே! அது அப்படியே ஆகட்டும், அந்தரங்கமாக ஏவிக்கொள்கிறேன். நீங்கள் மார்கழி நீராட்டத்திற்கு உபகரணமாகக் கேட்டவற்றைத் தருகிறேன்

கொண்டு போங்கள் என்று ஒரு பறையை எடுத்துவரப்புக்கான். அது கண்ட ஆய்ச்சியர், அப்பா! கருத்துரைக்கின்றோம் கோளாய், என்று உரைக்கத் தொடங்குகின்றனர் இற்றைப்பறை முதலிய சொற்களால்.

இன்று + பறை = இற்றைப்பறை, இப்போது நீ எடுத்துக் கொடுக்கும் பறைஎன்றபடி. கொள்வான் அன்று கொள்வதற்காக அன்று.

கொள்வான் அன்று காண் - எங்களை நீ கொள்ளும் அத்தனை ஒழிய நாங்கள் உன் பக்கலிலே உன்னை ஒழியவும் கொள்வதுண்டு என்று இருந்தாயோ? கோவிந்தா - பசுக்களின் பின்னேதிரிவார்க்குப் பெண்களின் வார்த்தையின் கருத்துத் தெரியாதன்றே! பசுக்களின் பின்னே திரிவார்க்கு அவற்றுக்குள்ள ஞானமே அன்றோ உள்ளது. நாலு நாள் எங்களை விட்டுக் கெட்டகேடுதான் என்னே! (ஆறாயிரப்படி உரை)

எற்றைக்கும்- என்றென்றைக்கும் என்றபடி, ஏழேழ்பிறவிக்கும் எம்பெருமானுடைய பிறவி தோறும் ஒக்கப்பிறக்கும் பிராட்டியைப் போலே தாங்களும் ஒக்கப்பிறந்து ஆட்செய்ய நினைக்கின்றனர். நீ பிறவாதிருக்கும் நலம் அந்தம் இல்லதோர் நாட்டிலேயும் உன்னைப் பிரியாது, உன்னோடு நீ இட்ட வழக்காக இருந்து உனக்குப் பணிபுரியும் கைங்கரியம் எங்களுக்கு வேண்டும்.

எப்போதும் உன்னோடு எங்களுக்குள்ள சம்பந்தத்தை மறவாமல், உனக்கு அடிமை செய்யும்படியும், உலகப்பற்றினால் மனம் சலித்து நாட்டார் விரும்புகிற கூடகம் முதலியவற்றில் எங்கள் மனம் செல்லாதபடியும் அருள்புரிய வேண்டும் என்கின்றனர்.

ப்ராப்ய விரோதி கழிகையாவது - மற்றை நம்காமங்கள் மாற்று என்று இருக்கை என்னும் முமுட்சுப்படி இங்கு அறியத்தக்கது.

அதாவது -பிராப்பியமாவது பலன் ; பலனை அனுபவிக்கும்போது நேருகிற விரோதம் என்ன வென்று தெரிந்து கொள்ள வேண்டும். பலனை அனுபவிக்கும் போது ஆனந்தம் அவசியம் ஏற்பட்டே தீரும். அதைத் தன்னுடைய தாக நினைத்தால் அதுவே பெரிய விரோதி. நிலா, தென்றல், சந்தனம், மலர்கள், முதலியன தமக்கு ஓர் உபயோகம் இன்றியே பிறருக்கே உபயோகப்பட்டுப் பிறரையே மகிழ்விக்கின்றன. தாம் சிறிதும் ஆனந்தம் கொள்வதில்லை. அது போலவே பகவானுக்கு நாம் உபயோகப்படும் அளவில் அதனால் ஆனந்தப்படுகிறவன் பகவான் தானே ஆக வேண்டும். சேதன இலாபம் ஈசுவரனுக்கே பேறு ஆகையால் பேறு பெற்றவன் தானே ஆனந்தப்பட நியாயம் உண்டு.

ஆனால் நிலா, தென்றல், சந்தனம், மலர்கள் முதலியன அறிவற்றவை ஆகையாலே அவற்றுக்கு ஆனந்தம் உண்டாக வழியில்லை. நாம் அறிவுள்ளவராகையாலே அறிவு பூர்வமாக ஏற்படக் கூடிய ஆனந்தம் எவ்வாறு நீக்க முடியும்? என்று கேள்வி பிறக்கும். நம்முடைய கைங்கரியத்தினால் எம்பெருமான் மகிழ, அது கண்டு நாம் மகிழக் குறையில்லை. நாம் செய்யும் கைங்கரியம் நம்முடைய மகிழ்வுக்குக் காரணம் ஆகக் கூடாது என்பதே இங்கு அறியத்தக்கது. ஆளவந்தார் தமது ஸ்தோத்திர ரத்தினத்தில், பகவானே! உனக்கு நான் கைங்கரியம் செய்து எப்போது நான் மகிழப் போகிறேன் என்று கூறாமல், உன்னை எப்போது மகிழ்விக்கப் போகிறேன் என்று சொல்லி இருப்பதானது மற்றை நம்காமங்கள் மாற்று என்கிற இப்பாசுரப் பொருளையே அருளிச் செய்தபடி.

உனக்கே நாம் ஆட் செய்வோம் -என்றது சாதனம். (பிராப்பியம்) நம் காமங்கள் மற்று - என்றது பிரார்த்தனை ;

முமுட்சு நிலையில் உள்ள ஒருவர் அறிய வேண்டியன மூன்று ; அவையாவன : தத்துவம், இதம், புருஷார்த்தம் என்பன.

1. தத்துவம் - ஆதாரம், பரம்பொருள். இது சித்து, அசித்து, ஈசுரவன் என்று மூவகைப்படும். சித்தாவது -உயிர்களின் (சீவான்மாக்களின்) தொகுதி ; அசித்தாவது - மக்கள், விலங்கு முதலியவற்றின் உடம்பு. உலகிலுள்ள ஏனைய பொருள்கள், இவற்றிற்குக் காரணமான மூலப்பகுதி, ஈசுவரன்-இறைவன்.

2. இதம் - வீடுபேற்றிற்குச் சாதனமாக மேற்கொள்ளப்படும் உபாயம் ; வழி . இவை பக்திநெறி, பிரபத்தி நெறி என்பன.

3. புருஷார்த்தம் - புருஷன் (அ) ஆன்மா அடைய வேண்டிய பொருள். பரமபதம் சேர்தலும், பரிபூரண பகவதனுபவம் பெறுதலும்.

கோவிந்த நாமம் 27,28, 29 பாசுரங்களில் தொடர்கிறது.

| | |
|---|---|
| **கூடாரை வெல்லும் சீர் கோவிந்தா** | **– தத்துவம்** |
| **உன்தன்னைப்பாடி** | **– இதம்** |
| **...கூடி இருந்து குளிர்தல்** | **– புருஷார்த்தம்** |
| **கறவைகள்.....குறைவொன்றும் இல்லாத கோவிந்தன்** | **– தத்துவம்** |
| **அறியாத .....அழைத்தனம்** | **– இதம்'** |
| **இறைவா நீ தாராய் பறை** | **– புருஷார்த்தம்** |
| **சிற்றஞ்சிறு காலே...கோவிந்தா** | **– தத்துவம்** |
| **உன்னை......கேளாய்** | **– இதம்** |
| **உமக்கே நாம் ஆட்செய்வோம்** | **– புருஷார்த்தம்** |

ஆக இம்மூன்று கருத்துகளும் வரிசையாக 3 பாசுரங்களில் கூறப்பட்டள்ளன.

துவயம் - முதல் வாக்கியப் பொருள் - ஸ்ரீமானான நாராயணனுடைய திருவடிகளை உபாயமாகப் பற்றுகிறேன்.

இது முன்பாசுரத்தில் விளக்கப்பட்டது.

இரண்டாம் வாக்கியப் பொருள்-உன்னை எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுவிப்பேன் கவலைப்படாதே என்பது இப்பாசுரத்தில் விளக்கப்பட்டது.

(எற்றைக்கும் .....ஆட்செய்வோம்)

சரமசுலோகம் : எல்லாச் சாதனங்களையும் அடியோடுவிட்டு என்னை ஒருவனையே உபாயமாக அடை

என்னும் முதல் வாக்கியப் பொருள் முன் பாசுரத்தில் விளக்கப்பட்டது.

இரண்டாம் வாக்கியப் பொருள் : பெரிய பிராட்டியாரும் ஈசுவரனுமான சேர்த்தியில் என்றும் கைங்கரியத்தைப் புரிவேனாக. இது இப்பாசுரத்தில் விளக்கப்பட்டது.

இப்பாட்டு திருவெட்டெழுத்துக்கு விவரணமாய் இருக்கிறது. நீ......கோவிந்தா.....உனக்கு -என்று அகாரத்தின் பொருள் கூறப்பட்டது. அகாரம் பகவானை உணர்த்தும் உனக்கே -என்னும் ஏகாரத்தால் உகாரத்தின் உட்பொருள் -மற்றவருக்கல்லாமல் ஈசுவரனுக்கே உரித்தாய் இருத்தல் நாம் என்று மகாரப் பொருளான ஞானவானாகிய ஜீவனையும் உணர்த்தப்பட்டது. உன்றன்னோடு உற்றோமே ஆவோம் என்று நாராயண பதப்பொருள் -அதாவது அடியவன் ஈசுவரனுக்கு அடிமைப்பட்டவன் என்பது உணர்த்தப்ட்டது. எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் ஆட்செய்வோம் என்று ஆய என்னும் சதுர்த்தியின் பொருள் அதாவது ஈசுவரனுக்கு எல்லாவித அடிமைகளையும் சேதநன்செய்ய வேண்டும் என்பதாம். அதாவது பாரதந்திரிம் (பரனுக்கு பகவானுக்கு) வசப்பட்டு இருத்தல் ; உரியவனாக இருத்தல் ; (தனக்குத் தான் உரியன் அல்லன் )இவ்வாறு எல்லாப் பொருள்களையும் தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கும் அஷ்டாட்சரத்துக்கு விவரணமாய் இருப்பதால் இப்பாசுரத்தை நம் ஆசாரியர்கள் மிகவும் ஆதரிப்பார்கள்.

விடிவோரை எழுந்திருந்து (விடியற்காலம்) முப்பது பாட்டையும் அனுசந்தித்தல், மாட்டிற்றிலனாகில் சிற்றஞ்சிறுகாலே

என்கிற பாட்டை அனு சந்தித்தல் அதுவும் மாட்டிற்றிலனாகில் நாம் இருந்த இருப்பை நினைப்பது என்ற பட்டர் அனுசந்தித்தை அனு சந்திப்பது. (நாம் இருந்த இருப்பை-என்றது இப்பிரபந்தத்தை அனு சந்தித்து ஈடுபட்டிருந்த இருப்பை என்றபடி)

"பரந்த சிந்தை ஒன்றி நின்று நின்ன பாத பங்கயம்
நிரந்தரம் நினைப்பதாக நீ நினைக்க வேண்டுமே;"
-திருச்சந்தவிருத்தம் -101

## முப்பதாம் பாசுரம்

❖ வங்கக் கடல் கடைந்த மாதவனைக் கேசவனைத்
திங்கள் திருமுகத்துச் சேயிழையார் சென்றிறைஞ்சி
அங்கப் பறை கொண்ட வாற்றை அணி புதுவைப்
பைங்கமலத் தண்தெரியல் பட்டர்பிரான் கோதை சொன்ன
சங்கத் தமிழ்மாலை முப்பதும் தப்பாமே
இங்கிப் பரிசுரைப்பர் ஈரிரண்டு மால்வரைத் தோள்
செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமாலால்
எங்கும் திருவருள் பெற்று இன்புறுவர் எம்பாவாய்.

(பொருள்) சந்திரன் போன்ற (குளிர்ந்த) அழகிய முகத்தை உடையவரும், அழகிய ஆபரணங்களைப் பூண்டவருமான இடைச் சிறுமியர், கப்பல்களை உடைய திருப்பாற்கடலை, (தேவர்களுக்கு அமுதம் கொடுப்பதற்காகக்) கடைந்தருளிய திருமகள் கேள்வனான கண்ணபிரானை, போய் நெருங்கி மங்களாசாசனம் செய்து அங்கே (கண்ணபிரானின் சந்நிதியில்) (தங்கள்) புருஷார்த்தத்தைப் பெற்ற, அந்தச் செய்தியை அழகிய ஸ்ரீவில்லிபுத்தூரில் திருவவதரித்த பசுமை பொருந்திய, தாமரை மலர்களால் ஆகிய குளிர்ந்த மாலையை அணிந்துள்ள பெரியாழ்வாருடைய (திருமகளாரான) ஸ்ரீ ஆண்டாள் அருளிச்செய்த திரள்திரளாக அனுபவிக்க வேண்டிய தமிழ்ப்பாமாலையாகிய இந்த முப்பது பாசுரங்களையும் (ஒரு பாசுரமும்) குறையாமல் இக்காலத்திலே இவ்வாறாக அனுசந்திப்பவர்கள் நான்கு பெரிய மலைகள் போன்ற திருத்தோள்களையும் சிவந்த திருக்கண்களையும் கொண்ட அழகிய

திருமுகத்தையும் (பரமபதம், இவ்வுலகம் ஆகிய) இரு செல்வங்களையுடைய திருமாலால் (இம்மை மறுமை என்ற) எல்லா இடங்களிலும் (அப்பரமனுடைய) பெருங்கருணையை அடைந்து (எம்பெருமானுடைய சேர்க்கையால் உண்டான) , பரமானந்தத்தைப் பெறுவர்.

(சிறப்புப் பொருள்) இப்பாசுரத்தால், இப்பிரபந்தத்தைக் கற்றவருக்கு, நோன்பை மேற்கொண்டு பயனைப் பெற்றவரைப் போலவும், அதனை அனுசரித்துப் பயனைப் பெற்றவரைப் போலவும், பிராட்டியாலும் எம்பெருமானாலும் எல்லாக் காலமும் திருவருள் செய்யப் பெற்று மகிழ்ந்திருத்தலாகிய பயன் கிடைக்கும் என்பதாம். கன்று இழந்த தலைநாகு (பசு) தோல் கன்றுக்கும் இரங்குவது போல இப்பாசுரம் கொண்டு புக நமக்கும் பலிக்கும் என்று பட்டர் அருளிச் செய்வராம்.

<u>பட்டர் அருளிச் செய்ததற்கு அடிப்படை:</u>

'சேயிழையார் சென்று இறைஞ்சி அங்கப்பறை கொண்ட ஆற்றை' என்றதால் அனுஷ்டித்தவர் மேற்கொண்டவர் கோவியர் என்பது குறிக்கப்பட்டது. 'கோதை சென்னை' என்றதால், அதேபோல பாவனையாக மேற்கொண்டவர் (அனுகரித்தவர்) கோதையார் என்பது குறிக்கப்பட்டது. 'இப்பரிசு உரைப்பார்' என்றதால், இப்பிரபந்தம் கற்பார் குறிக்கப்பட்டது. இதன்மேல் வினா யாதெனில், அனுஷ்டித்தார்க்கும், அனுகரித்தார்க்கும் உள்ள பலன் இப்பிரபந்தத்தைச் சொன்ன அளவிலே சொன்னவர்க்குக் கிடைக்குமோ?என்பது. அதற்கு விடை தான் பட்டரது திருவாக்கு. (தலைநாகு-பிராட்டிக்கும் எம்பெருமானுக்கும் ; கன்று - அனுஷ்டித்தார்க்கும் அனுகரித்தார்க்கம் ; தோல் கன்று நம்மைப் போன்றவர்க்கும் எனக் கொண்டு ஒப்புமை காண்க.)

இப்பாசுரம்-பயனைத் தெரிவித்தலால் பலச்ருதி எனப்படும். இன்னார் செய்தது இப்பிரபந்தம் என்று தெரிவித்தலால் திருநாமப்பாட்டு எனவும்படும். இது, தன்னைப் பிறர்போல வைத்துக் கூறும் ஒருவகைக் கவிசமயம் ஆதலால் தற்புகழ்ச்சி ஆகாது என்க.

முதற்பாட்டில், காலத்தையும் அதிகாரிகளையும், காரியத்தை முடித்துவைக்கும் கண்ணபிரானையும் கொண்டாடிக் கொண்டு நோன்பில் முயன்று, இரண்டாம் பாட்டில் நோன்புக்கு அங்கமாகச்

செய்ய வேண்டியவற்றையும் நீக்கவேண்டியவற்றையும் ஆராய்ந்துகூறி, மூன்றாம் பாட்டில், நாம் நமக்கு இனிதாக நோன்பு நோற்க அனுமதி செய்த நாட்டார்க்கு மழையாகிய பலன் கிடைக்கும் என்று சொல்லி, நான்காம்பாட்டில் மழைக்கு அதிபனாகிய வருணனை அழைத்து நாடெங்கும் 'வாழ' மழை பெய்ய நியமித்து, ஐந்தாம் பாட்டில், தாங்கள் தொடங்குகிற நோன்புக்குப் பொருந்தாத பாவங்கள் எம்பெருமானை நாம் வாயினால் பாடி மனத்தினால் சிந்தித்தால் தானே கழியும் என்று அறுதியிட்டு, தாங்கள் மேற்கொண்டுள்ள காரியத்தில் பாகவத சமுதாயம் அனைத்தையும் சேர்க்க விரும்பி-6வது பாட்டுத் தொடங்கி 15 ஆம் பாட்டு வரையுள்ள 10 பாசுரங்களாலே தங்களோடு ஒத்த பருவத்திலான பெண்கள் அனைவரையும் உணர்த்தி, பின்பு எல்லாருமாகத் திரண்டு நந்தகோபர் திருமாளிகை அடைந்து, 16ஆம் பாட்டில் திருவாசல் காக்கும் முதலியை எழுப்பி, 17இல் ஸ்ரீ நந்தகோபர், யசோதைப் பிராட்டி, கண்ணபிரான், பலராமன் இவர்களைச் சொல்லும் முறைகள் தவறாமல் சொல்லி எழுப்பி, 18இல் நப்பின்னைப் பிராட்டியை பலவாறாகப் புகழ்ந்து எழுப்பி, 19,20 பாட்டுகளில் கண்ணபிரானையும் நப்பின்னைப் பிராட்டியையும் சேர உணர்த்தி, 21, 22 இல் தங்கள் குணங்களுக்குத் தோற்று வந்தபடியையும், அபிமானம் குலைந்து வந்த முறையையும், அவன் திருவருளே அடிப்படையாக வந்தபடியையும் அப்பெருமான் சந்நிதியில் விண்ணப்பம் செய்து, 23இல் எங்களுக்காகப் புறப்பட்டுச் சீரிய சிங்மாசனத்திலே ஆஸ்தானம் கொள்ள வேண்டும் என்று வேண்டி, 24இல் அவ்வாறு எழுந்தருளியமைக்கு மங்களா சாசனம் செய்து, 25இல் நோன்பு நோற்று முடித்தபின் பெறவேண்டும் சன்மானங்களை விரும்பி, 28இல் தங்கள் நினைவில் உள்ளவையும் பலிக்கும்படி தங்கள் சிறுமையையும் அவன் பெருமையையும் அவனோடுள்ள உறவையும் சொல்லிக்கொண்டு பிழைகளைப் பொறுத்தருளவேண்டி, 29இல் தங்களுடைய உத்தேசத்தை வெளிப்படையாகக் கூறி, இக்கருத்தை நீ நிறைவேற்ற வேண்டும் என வலியுறுத்தி வேண்ட, அவனும் அப்படியே செய்கிறோம் என்று ஏற்றுக் கொள்ளப்பட்ட எண்ணம் ஈடேறப் பெற்ற படியை பிற்காலத்திலே அக்கருத்து நிலைமையோடு ஆண்டாள் அருளிச் செய்த இப்பிரபந்தத்தை ஓதுவார் எம்பெருமானுடைய திருவருளுக்கு இலக்காகி மகிழப் பெறுவர் என்று நியமிக்க வாறாகச் செல்லும் பாசுரம் இது.

வங்கக் கடல் கடைந்த : தகவுரை கூறும் பிராட்டியின் தொடர்பாலேயே பலன் கிடைக்கிறது. ஆகவே அவரைப்பெற அவன் செய்த செயலைப் பேசுகிறார்கள். வங்கமாவது கப்பல்கள்; கப்பல்கள் நிறைந்திருக்கவும் அவற்றுக்கு ஒரு தீங்கும் வராதபடி கடல் கடைந்த சாமர்த்தியத்தைக் குறிப்பிடுகின்றனர். 'வங்கம் விட்டுலவும் கடல் பள்ளி யானை' என்றார் பெரியாழ்வாரும். அன்றியும் கடல் கடைந்தபோது எங்கும் சுழன்று வந்த மலையும், அலைகளும் கப்பல்களைப் போலக் காட்சியளித்த படியைச் சொல்லுவதாகவும் கொள்ளலாம். பயன் அடையும் தேவர்க்கு உடம்பு நோவக் கடல் கடைந்து காரியம் செய்தவன், பயன கருதாதவரான எங்கள் காரியம் செய்ததில் வியப்பு என்ன என்பது கருத்து. தேவகாரிய மென்று ஒரு காரணத்தை இட்டுப் பெரிய பிராட்டியாகிற பெண்ணமுதைப் பெறுவதற்குக் கடல் கடைந்த தன்மை-ஊரார் விரும்பிய நோன்பை ஒரு காரணமாக்கிப் பெண்களைப் பெற்ற கண்ணன் தன்மையை ஒத்திருப்பதால் திருப்பாற்கடல் நாதனைக் கவிபாடுகின்றனர். 'பாற்கடலில் பையத் துயின்ற' என்றும், 'வங்கக் கடல் கடைந்த' என்றும் முதலிலும் முடிவிலும் அவனையே பாடுகின்றனர்.

மாதவனை-திருமகள் கேள்வனை- 'அமுதம் கொண்ட பெருமான் திருமார்வன்'

கேசவனை - பிராட்டியும் விரும்பும் படியான அழகிய மயிர்முடியை உடையவனை கடல் கடைந்த கேசவனை - கடல் கடையும் போது அணைந்திருக்கையாலே மயிர் முடியின் அழகு விஞ்சி இருக்கிறபடியைச் சொல்லுகிறார்கள். கேசவன்=க-பிரமன் ; ஈசன்-சிவன் ; ஆகிய இருவருக்கும் கண்ணானவனை பரமன்அடிபாடி-என்று தொடங்கி, 'கேசவனை' என்று முடித்தலால் பாதாதி கேசாந்தமாகக் கண்ணனை அனுபவித்தார்கள் ஆயிற்று.

வங்கக் கடல் கடைந்த மாதவனைக் கேசவனை - 'பெரிய பிராட்டியாரோடு கூடிய எம்பெருமான் திருவடிகளை உபாயமாகப் பற்றுகிறேன்' என்னும் 'ஸ்ரீமந் நாராயண சரணௌ' என்னும் துவய மந்திரச் சொற்களின் பொருள் அறிவிக்கப்படுகிறது. 'மாதவனை' - என்று ஸ்ரீமச்சப்தப் பொருள். அதாவது ஸ்ரீயோடு என்றும் சேர்ந்திருக்கிற என்பது பொருள். வங்கக் கடல் கடைந்த -என்பதால் கடல் கடைந்த செயலிலே தோற்றும் எளிமை, கருணை சீலம் சுவாமித்துவம் முதலிய குணங்களுட்ன கூடியவன் என்னும்

நாராயண சப்தப் பொருள் சொல்லப்பட்டது. கேசவனை -என்று சரண சப்தப் பொருளான உபாயம் உணர்த்தப்படுகிறது.

இனி 'பிரபத்யே' (பற்றுகிறேன்) என்னும் சொல்லில் உணர்த்தப்பட்ட அதிகாரிகளின் பெருமையைச் சொல்லுகிறது.

திங்கள் திருமுகத்துச் சேயிழையார் - கண்ணபிரானோடு சேர்ந்திருப்பதாலே குளிர்ந்து, மலர்ந்து, செவ்வி பெற்று, முழுமதியைப் போலே பொலியும் முகம் உடையவரானார்கள். 'சூடகமே', 'பாடகமே' என்று தாங்கள் விரும்பியபடியே அவனும், பிராட்டியும் பூட்டிய ஆபரணங்களாலும் அழகு பெற்றார்கள்.

திங்கள் திருமுகம்-பகவத் சம்பந்தம் முகத்திலே நிழலிடுகிறபடி, சந்திரன் இவர்களுடைய முகத்துக்கு ஒப்பாக மாட்டாமையாலே 'திருமுகம்' என்கின்றனர்.

சேயிழையார் - இயற்கையாக உள்ள அழகுக்குமேலே செவ்விய ஆபரணங்களால் உண்டான அழகையும் உடைவர்கள். ஆபரங்களுக்குச் செவ்வியாவது - அவனாலும் பிராட்டியாலும் அணிவிக்கபட்டதாய் இருப்பது. சென்று-அவனிருந்த இடத்தே சென்று. இறைஞ்சி -தூமலர் தூவித்தொழுது வாயினால் பாடி மனத்தினால் சிந்தித்து அடிபோற்றித் திறல் போற்றிப் புகழ் போற்றிக் கழல் போற்றிக் குணம் போற்றி வேல் போற்றிச் செய்தவற்றை எல்லாம் நினைக்கிறது. 'சரணம் பிரபத்யே' மனம், மொழி, மெய் என்ற முக்கரணங்களாலும் பற்றும் பற்றுதலைச் சொல்லுகிறது. ஆக துவயமந்திரத்தின் முதல் பகுதியின் பொருள் சொல்லப்பட்டது.

அங்கப் பறை கொண்ட ஆற்றை - அவ்விடத்திலே பரம புருஷார்த்தமான அப்பறையைப் பெற்ற செய்தியை, அதாவது தங்களுடைய வெறுமையையும் அவர் நிறைவையும், உறவையும் முன்னிட்டு அபராதங்களுக்கு மன்னிப்பு வேண்டி, புருஷார்த்தத்தைப் பெற்ற வழியை.

அணிபுதுவை: இவ்வுலகிற்கு அணிகலனாகவுள்ள ஸ்ரீவில்லிபுத்தூர். அகாரப் பொருளான வடபெருங்கோயில் உடையானும், உகாரப் பொருளான ஆண்டாளும், மகாரப் பொருளான பெரியாழ்வாரும் ஒன்று சேர்ந்திருப்பதனாலே பிரணவம் போலப் பெருமை பெற்றிருக்கும் ஊர்.

'பொன்னும் முத்தும் மாணிக்கமும் இட்டுச் செய்த அணிகலன் போலே நாச்சியாரும், பெரியாழ்வாரும் வடபெருஞ்கோ்யில் உடையானுமான அலங்காரமுள்ள தேசம் அன்றே," -என்பது ஆறாயிரப்படி.

பைங்கமலத் தண் தெரியல் - பசுமையான கமல மலர்களால் ஆனமாலை. பிராமணர்க்குத் தாமரை மாலை உரியது என்பதால் பிராமண உத்தமரான பெரியார்வார் தாமரை மாலைகளுடன் விளங்குகிறபடி.

தண் தெரியல்-குளிர்ந்த மாலை ; அடியாரைக்குளிரச் செய்யும் மாலை. பட்டர்பிரான் - பிராமணர்களுக்குப் பரதத்துவ நிர்ணயம் செய்தவகையில் உபகாரராய் இருப்பார் ; வேதப் பயன் கொள்ள வல்லவராய், வேதாந்த விழுப்பொருளின் மேலிருந்த விளக்கை விரித்தவராய் விளங்குபவர் அன்றோ இவர்.

பட்டர்பிரான் கோதை: 'ஆற்றப்படைத்தான் மகனே' என்று சொல்லுவது அவனுக்கு ஏற்றமாய் இருப்பது போலே, இது பூதேவியான இவருக்கு ஏற்றத்தைத் தருகிறது.

'ஒருமகள் தன்னை உடையேன் உலகம் நிறைந்த புகழால்

திருமகள் போல வளர்த்தேன்' -என்று பெரியாழ்வாராலும் கொண்டாடப்படுபவளாய் இருத்தல்.

கோதை: பாமாலை தந்தவள் என்று பொருள்.

சொன்ன-ஆயர் சிறுமிகளின் அனுபவத்தை அடி ஒற்றி உரைத்த, கோதை சொன்ன - நம்மாழ்வார் பெண்ணுடை உடுத்துப் (தலைவி நிலையில் பராங்குசநாயகியாகி) பத்துப்பாட்டையும் பாடினவுடனே, 11ஆம் பாட்டில் 'அணி குருகூர்ச் சடகோபன் சொன்ன' -என்று ஆண்மை மேலிடும்படியான குற்றம் அற்று இருக்கிறபடி.

சொன்ன-மேகம் பருகிய கடல் நீர் போலே இவள் வாயில் பட்டவுடனே வேதக் கடலும் உவர்ப்பு அற்ற தாயிற்று.

சங்கத் தமிழ்மாலை: ஒருவராக அனுபவிக்க இழிந்தாலும் இக்கடலில் அமிழ்ந்து போக வேண்டியதே ; திரள் திரளாக இழிந்தாலும் கரை காண்பது அரிதே.

இனி, சங்கத் தமிழ்மாலை-தலை, இடை, கடை என்னும்

மூன்று சங்கங்களிலும் வளர்த்த தமிழால் தொகுக்கப்பட்ட பாமாலை என்றும் பொருள் கொள்ளலாம். சங்க கால இலக்கிய மரபுகளைப் பின்பற்றி இவள் இப்பிரபந்தத்தைப் பாடினாள் என்பதை ஆராய்ச்சி முன்னுரையில் குறிக்கப்பட்டதை இங்கு நினைவில் கொள்க.

இப்பெருமாட்டி பெருமானுக்கு இருமாலைகளைச் சூட்டினாள். ஒன்று பூமாலை (சூடிக்கொடுத்தது) இதில் கந்தம் (மணம்) பொலியும். மற்றது பாமாலை (பாடிக் கொடுத்தது) இதில் சந்தம் பொலியும். இது என்றும் வாடாதது.

தமிழ்: 'என்றுமுள தென் தமிழ்' என்றார் கம்பரும் ; அமிழ்தினும் இனியது ; ஆழ்வார்களின் ஈரச் சொற்களாலே தண்மை பெற்ற மொழி. காட்டாக, புதுவைப்பட்டன் உரைத்த தமிழ் இன்னிசை மாலை - பெரியாழ்வார் திருமொழி 6:11

சீர்மலி செந்தமிழ் - பெரியாழ்வார் திருமொழி 2:4:10
தூயதமிழ் - பெரியாழ்வார் திருமொழி 3:8:10
செந்தமிழ் 3:9:11, தமிழ் மாலை 4:8:10, விட்டுசித்தன் வியன்தமிழ் 5:1:10

இன்தமிழ்-நாச்சியார் திருமொழி 1:10. தூய தமிழ் 6:11 கோதை தமிழ் 8:10, செந்தமிழ்-9:10 ;

நடைவிளங்குதமிழ் பெருமாள் திருமொழி 1:11, இன்தமிழ் 2:10, நற்றமிழ் 5:10, சீரார்ந்த தமிழ் 9:11

ஒலிசெய்தமிழ்மாலை - பெரிய திருமொழி 1:5:10; இருந்தமிழ் 1:7:10 வண்டமிழ்ச்செஞ்சொல்-பெரிய திருமொழி 1:8:10; தண்டமிழ் 2:2:10 சீர்மன்னு செந்தமிழ் 2:9:10; ஒண்தமிழ் 3:3:10; சங்கமுதூத் தமிழ்மாலை 3:4:10 சங்கமலி தமிழ்மாலை 3:9:10; கோவைத் தமிழ் 5:2:10; பாமருதமிழ் 6:1:10; ஒலிசெய்தமிழ் 6:7:10; சொல்லில் பொலிந்த தமிழ் 7:5:10; தேனார்இன் சொல்தமிழ் 8:8:10; இன்தமிழ் 8:9:10;

பன்னிய தமிழ்மாலை திருவாய்மொழி 2:7:13 ஒண்தமிழ் 4:7:11; 7:8:1 தமிழ்மாலை 6:2:1; செந்தமிழ் 6:5:11; சொல் நேர்பட்ட தமிழ்மாலை 8:9:1ந பண்ணார் தமிழ் 9:8:11.

இருந்தமிழ் நன்மாலை பெருந்தமிழன் : இரண் திரு.அந்தாதி-74 தென்னன் தமிழை - பெரியதிருமடல் 68.

செந்தமிழ்-திருவரங்கத்தமுனார் இயற்றிய இராமாநுச நூற்றந்தாதி 8,11,19 சொல்லார் தமிழ் ஒரு மூன்று-44; திருவாய்

மொழியின் மணம் தரும் இன்னிசை-60 பண்தருமாறன் பசுந்தமிழ்-64. தண்தெரியல் பட்டர்பிரான் கோதை சொன்னமாலை-மாலையணிந்தவர்

மகளான(மாலை) கோதை மாலுக்குக் கட்டினமாலை அன்றோ இது! மாலை-ஒரு செவ்விப்பூவை அவன் கொடுக்க, ஒப்பற்ற தொரு மாலையையே அவனுக்களித்த வண்மை இருந்தபடி என் !

முப்பதும்-திருமந்திரமும், திருப்பல்லாண்டும் போலே சுருங்கி இராமலும், வேதமும் திருவாய் மொழியும் போலே விரிந்திராமலும் சொரூப, உபாய பலங்களை அவற்றிலும் அறியும்படித் தெளிவுபடுத்துவதாயும் விளங்குகையால்வந்த ஏற்றத்தை உடைத்தாயிருக்கை.

முப்பதும் தப்பாமே-விலை மதிப்பற்ற இரத்தினங்கள் பதிக்கப்பட்டு ஒரு மாலையிலே ஓர் இரத்தினம் குறைந்தாலும் சிறப்பின்றி இருப்பது போல, இம்முப்பது பாட்டுகளில் ஒரு பாட்டு குறைந்தாலும் பேரிழப்பாய் இருக்கும்.

இங்கு-பிற்பட்ட காலத்திலே ; இந்நிலத்திலே ;

இப்பரிசு உரைப்பர்-இப்பிரபந்தத்தைக் கற்பதால் மட்டும், இதை மேற்கொண்டவரைப் போலவும், பாவனையாகக் கருதியவரைப் போலவும் (பலன்பெறுவர்)

ஈரிரண்டு மால் வரைத்தோள்-பெரிய மலைபோல பருத்த நான்கு தோள்களை உடையவன்; 'இக்காலத்திலும் இதைப்பாடுவார் உண்டாவதே !' என்று திருக்கைகள் பூரித்து விடுகின்றன.

ஈரிரண்டு-அன்பில்லார்க்கு இரண்டு தோளும், அன்புடையார்க்கு நான்கு தோளுமாய்த் தோன்றும்.

செங்கண்: எதிர் சூழல்புக்குப் படாதனபட்டும் கிடைக்கப் பெறாதவர்களை இப்பிரபந்தப் பெருமையாலே கிடைக்கப் பெற்றோம் என்று கண்கள் கருணையால் சிவக்கிறபடி.

கண்ணான் ; 'செங்கண் சிறுச்சிறிதே', 'செங்கண் திருமுகம்' என்று முகத்திலும் கண்ணிலும் வைத்தகண் வாங்க முடியவில்லை. இவர்களுக்கு,

செங்கண்: செல்வத்திருமால்-பிராட்டியின் தொடர்பாலும், உபய விபூதிச் செல்வத்தாலும் கண்கள் சிவந்திருக்கிறபடி. திருத்தக்க

செல்வத்தையுடைய எம்பெருமாள் ; திருவுக்கும் திருவாகிய செல்வனாகிற திருமால்.

மாதவன்........என்று தொடங்கி, திருமால் என்று முடிப்பதால், துவயத்தின் இரண்டடிகளில் பொருளையும் உணர்த்துகின்றனர். அதாவது முதல் இரு அடிகளில், துவயத்தின் முதல் அடியில் உணர்த்தப்படும்,

'ஸ்ரீமானான நாராயணனுடைய திருவடிகளை உபாயமாகப் பற்றுகிறேன்' என்னும் பொருளையும்,

கடைசி இரு அடிகளாலே,

'பெரிய பிராட்டியாரும் ஈசுவரனுமான சேர்த்தியில் என்றும் கைங்கரியம் செய்வேனாக' என்னும் பொருளையும் உணர்த்துகின்றனர்.

எங்கும் - 'இங்கும் அங்கும் திருமால் அன்றியில்லை' என்றன்றோ ஆழ்வாரும் அருளினார்.

திருவருள் பெற்று-நின் திருவருளும், பங்கயத்தாள் திருவருளும் கொண்டு-என்கிறபடியே இருவராலும் அருளப் பெற்று.

இன்புறுவர்-பரமானந்தம் அடைவர். எங்கும் இன்புறுவர்-இவ்வுலகிலும் அவ்வுலகிலும் பிரம்மானந்தத்தை அடைவர். (திருமாலில் இன்புறுவர்)

'அடியேனுக்கு இன்பாவாய் பொன்பாவை கேள்வா' - என்கிறபடியே பிராட்டியும் பெருமாளும் ஒருவரை ஒருவர் அனுபவித்துப் பெறும் ஆனந்தத்தைவிட சிறப்பாக இருப்பதன்றோ அவ்விருவரின் சேர்த்தியைப் பிறர் அனுபவிப்பதால் ஏற்படும் ஆனந்தம்.

எம்பாவாய் இன்புறுவர்-எங்கள் பிரபந்தத்தாலே ஆனந்தம் அடைவர்.

பகவானை அடைந்து கைங்கரியம் செய்வதிலுள்ள பரபரப்பினால் 'ஒரு காரணத்தை மேற்கொண்டு, பாகவதரை எல்லாம் திரட்டி, எம்பெருமானது திருக்கோயிலை அடைந்து திருப்பள்ளி உணர்த்தி, தமது பிரார்த்தனைப்படியே அப்பரமன் சிங்காசனத்தில் வந்து வீற்றிருக்க, அப்பெருமானுக்கு மங்களாசாசனம் செய்து, பிழை பொறுக்க வேண்டி, அப்பரமனது கைங்கரியத்தைப்

பெற்றதை உணர்த்துகின்ற இத்திவ்வியப்பிரபந்தம் ஸ்ரீவைணவராய் உள்ள அனைவர்க்கும் மிகவும் அடிப்படை யானதாகும்.

இத்திருப்பாவை முப்பது பாட்டும்-வெண்டளையால் வந்த எட்டடி நாற்சீர் ஒருவிகற்பக் கொச்சகக்கலிப்பா.

பிராட்டி-ஆண்டாள் ஆனது போல, உபநிடதம் தமிழாயிற்று-மூவாயிரப்படி. மாதவனை-சேயிழையார் சென்றிறைஞ்சி-பறை கொண்டவாற்றை-கோதை சொன்ன-தமிழ்மாலை-உரைப்பார்-எம்பாவாய்-இன்புறுவர்.பெரியபிராட்டியார் இன்புற்றாற்போல இன்புறுவர். கோபியர் பாவாய் இன்புற்றோம் நாங்கள் ; எங்கள் சொல்லை உரைப்பார் எங்கள் பாவாய் இன்புறுவர் ; சமகாலத்தில் உள்ளாரை ' எம்பாவாய்-நீராடப் போதுவீர் போதுமினோ (1) என்று கூட்டிக் கொண்டார்கள். பின்வந்தவர்க்கும் 'எம்பாவாய் பிரபந்தமுகத்தாலே எம்பாவாய் இன்புறுவர்' என்று முடிக்கிறார்கள் (ஆறாயிரப்படி).

திருவாய் மொழிக்கு முதல் திருவாய் மொழி (பதிகம்) சுருக்கமாக, அதிலும் முதல் பதிகத்திற்கு முதல் பாட்டு சுருக்கமாக ஆனதுபோல, முப்பது பாட்டுக்கும் முதற்பாட்டு சுருக்கமாக இருக்கும் என்பர் வானமாமலை ஜீயர் அவர்கள், எவ்வாறெனில்?

1. மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால் - முதல் 5 பாட்டுக்குச் சுருக்கமாயிற்று.
2. நீராடப்போதுவீர் போதுமினோ நேரிழையீர் சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள் பத்துப் பெண்களையும் எழுப்புவதன் சுருக்கமாகும். (6-15)
3. கூர்வேல் கொடுந்தொழிலன் - கோயில் காப்பானே (16) என்பதன் சுருக்கம்.
4. நந்தகோபன்-நாயகனாய் நின்ற நந்தகோபன் (16) ஓடாத தோள்வலியன் நந்தகோபன் (18) என்னும் இடங்களின் சுருக்கம்.
5. குமரன்-மாற்றாதே பால்சொரியும் வள்ளல் பெரும் பசுக்கள் ஆற்றப்படைத்தான் மகனே (21) என்பதன் சுருக்கம்.
6. கார்மேனி-முகில்வண்ணன்(11) பூவைப்பூண்ணா (23) மாலே மணிவண்ணா(26) என்பவற்றின் சுருக்கம்.

7. செங்கண்-செங்கண் சிறுச் சிறிதே எம்மேல் விழியாவோ (22) பங்கயக் கண்ணன் (14) செங்கண் திருமுகம் (30) என்பவற்றின் சுருக்கம்.

8. கதிர் மதியம் போல் முகத்தான்-திங்களும் ஆதித்தியனும் எழுந்தாற்போல், (22) உலகினில் தோற்றமாய் நின்ற சுடரே (21) என்பவற்றின் சுருக்கம்.

9. நாராயணன் நாராயணன் மூர்த்தி கேசவன் (7) நாற்றத் துழாய் முடி நாராயணன் (10) ஓங்கி உலகளந்த உத்தமன் (3) மாமாயன் மாதவன் வைகுந்தன் (9) முகில்வண்ணன் (11) கடல் கடைந்த மாதவன் (30) என்றும் சொல்லுகிற இடங்களின் சுருக்கம்.

10. நமேக்கே பறை தருவான்-பாடிப்பறை கொண்டு (27) போற்றப் பறை தரும் (10) இற்றைப் பறை கொள்வான் (29) அறை பறை (16) சாலப் பெரும்பறை(26) பறை தருதியாகில் (25) இறைவா நீ தாராய் பறை (28) அங்கு அப்பறை கொண்ட ஆற்றை (30) என்றும் சொல்லுகிற இடங்களின் சுருக்கம்.

1. பாரோர் புகழ - நாடு புகழும் (27) எங்கும் திருவருள் பெற்று இன்புறுவர் (30) என்பவற்றின் சுருக்கம்.

12. ஏலோரெம்பாவாய் - 30 பாட்டிலே வரும் ஏலோரெம்பாவாய்க்குச் சுருக்கம்.

திருப்பாவையில் அர்த்த பஞ்சகம்

1. 'நாராயணன்' (1) ஆகவே மேன்மையையும் 'கோவிந்தன் (27,28,29) ஆகையால் நீர்மையையும் உடையவனே பரம்பொருள்.

2. 'எற்றைக்கும் ஏழேழ்பிறவிக்கும் உன்றன்னோடு உற்றோமே ஆவோம் ' (29) என்கையாலே பகவானின் தலைமையும், அவனுக்குவசப்பட்டிருத்தலும்,

எழுப்பும் 6 முதல் 15 பாட்டுகளின்படி பாகவதர் பெருமையும் உயிரின் இயல்பும்

3. 'கறவைகள்' பாசுரத்தின்படி நாமோ பிறரோ நமக்குத் தஞ்சமல்ல, நாராயணனே உபாயமாவான் என்னும் உபாய நிலையும்.

4. 'சிற்றஞ்சிறுகாலே' (28) பாசுரப்படி 'உனக்கே நாம் ஆட்செய்வோம்' என்கிறபடியே அவன் உகந்த கைங்கரியமும்,

எழுப்பும் 10 பாசுரங்களின்படி பாகவத கைங்கரியமுமே வாழ்வினை,

5. போய பிழையும் புகுதருவான் நின்றனவும் (5) எனப்பட்ட புண்ணிய பாவங்கள் தொடக்கமாக 15 ஆம் பாட்டில் உணர்த்தப்பட்ட பாகவத அபசாரம் ஈறாக உள்ளவை அனைத்தும் ஊழ்வினை ஆகிய அர்த்தபஞ்சகமும் இந்நூலில் அழகாக விவரிக்கப்பட்டுள்ளன.

ஸ்ரீ:

## வாழித் திருநாமம்

திருவாடிப் பூரத்திற் செகத் துதித்தாள் வாழியே
திருப்பாவை முப்பதும் செப்பினாள் வாழியே
பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்பிள்ளை வாழியே
பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானாள் வாழியே
ஒருநூற்று நாற்பத்து மூன்றுரைத்தாள் வாழியே
உயர் அரங்கற்கே கண்ணி உகந்தளித்தாள் வாழியே
மருவாருந் திருமல்லி வளநாடி வாழியே
வண்புதுவை நகர்க் கோதை மலர்ப்பதங்கள் வாழியே.

—ஸ்ரீஅப்பிள்ளை அருளிச்செய்தது.

கமலமுடை வில்லிபுத்தூர் கவினவந்தாள் வாழியே !
காரார் நல் திருத்துழாய்க் கானத்தாள் வாழியே !
விமலமாம் திருவாடிப் பூரத்தாள் வாழியே !
விட்டுசித்தன் வளர்த்தெடுத்த விளங்கிழையாள் வாழியே!
அமுதமிகு திருப்பாவை முப்பதீந்தாள் வாழியே !
அணிநூற்று நாற்பத்து மூன்றுரைத்தாள் வாழியே !
அமரர்பதி அரங்கர்க்கே அலங்கலிட்டாள் வாழியே !
ஆண்டாள் தன் அடியிணைகள் அனவரதம் வாழியே !

(இது திருக்குடந்தை முதலிய திவ்விய தேசங்களிலும், ஸ்ரீரங்கம் பெரியாஸ்ரமம் ஸ்ரீமத் ஆண்டவன் சந்நிதியிலும் சேவிக்கப்படுகிறது)

கோதை பிறந்த ஊர் கோவிந்தன் வாழும் ஊர்
சோதி மணிமாடம் தோற்றும் ஊர் – நீதியால்
நல்ல பக்தர் வாழும் ஊர் நான் மறைகள் ஓதும் ஊர்
வில்லிபுத்தூர் வேதக் கோன் ஊர்.
பாதகங்கள் தீர்க்கும் பரமன் அடிகாட்டும்
வேதம் அனைத்துக்கும் வித்தாகும்–கோதை தமிழ்
ஐயைந்தும் ஐந்தும் அறியாத மானிடரை
வையம் சுமப்பது வம்பு.

ஆழ்வார், ஆண்டாள், எம்பெருமானர், தேசிகர், ஜீயர் திருவடிகளே சரணம்.

--------

**திருப்பாவையில் குறிப்பிடப்படும் திருமாலின் திருஅவதாரங்கள்:**

எம்பெருமானின் நிலை 5. அவை பரத்துவம், வியூகம், விபவம், அந்தரியாமித்துவம், அர்ச்சை என்பன. பரத்துவம்-விண்ணாட்டுநிலை, வியூகம்-திருப்பாற் கடலில் வாசுதேவ, சங்கர்ஷண, பிரத்யும்ன, அநிருத்தன்-என்னும் 4 வகை வடிவுடன் எழுந்தருளியிருப்பது. எம்பெருமான் இவ்வுலகில் முத்தொழிலை நடத்தவும், அடியார்களுக்கு அருள்செய்யவும் இவ்வாறு வடிவம் கொண்டிலங்குகின்றனன். இந்நான்கு வியூகங்களும் ஒவ்வொன்றும் மும்மூன்றாகப் பன்னிரண்டு கிளைவியூகங்களாகப் பிரியும்.

1. வாசுதேவனிடத்து-கேசவன், நாராயணன், மாதவன் என்றகிளைகளும்,
2. சங்கர்ஷணனிடத்து-கோவிந்தன், விஷ்ணு, மதுசூதனன் என்ற கிளைகளும்,
3. பிரத்யும்னனிடத்து-திரிவிக்கிரமன், வாமனன், ஸ்ரீதரன் என்ற கிளைகளும்,
4. அநிருத்தனிடத்து-இருடீகேசன், பத்மநாபன், தாமோதரன்-என்ற கிளைகளும் தோன்றி அவ்வத் திருப்பெயர்களைப் பெறும்.

இவற்றின் அறிகுறியாக ஸ்ரீவைணவர்கள் உடலில் 12 இடங்களில் திருமண் காப்பிட்டுக் கொள்வர்.

'வையத்துவாழ்வீர்காள்......பாற்கடலில் பையத் துயின்ற பரமன் (பாசுரம்2) என்னும் அடிகளுக்குரிய விளக்கம் இது.

<u>இந்நூலில் குறிப்பிடப்படும் கதைகள்:</u>

கூர்மாவதாரம்:(கடல் கடைந்த வரலாறு) முன் ஒரு காலத்தில் விஷ்ணு உலகிற்குச் சென்று திருமகளைப் புகழ்ந்து பாடி, அவளால் ஒரு பூமாலை வழங்கி அருளப் பெற்ற ஒருவித்தியாதர மகள், மகிழ்ச்சியோடு அம்மாலையைத் தன் கை வீணையில் தரித்துக் கொண்டு, பிரமலோக வழியாய் மீண்டு வந்தாள். அப்பொழுது துருவாச முனி எதிர்ப்பட்டு அவளை வணங்கித் துதிக்க, அவள் அம்மாலையை அம்முனிவருக்கு அளித்தார். அதன் பெருமை உணர்ந்து சிரமேற்கொண்ட அம்முனிவர் தேவலோகத்திற்கு வந்தார். அப்பொழுது இந்திரன் ஐராவதம் என்னும் 4 தந்தங்களையுடைய பட்டத்து யானைமேல் பவனிவர அவனுக்கு அம்மாலையை கைநீட்டி அம்முனிவர் கொடுத்தார். அவன் அதனை அங்குசத்தால்ங வாங்கி அந்தயானையின் பிடரியின் மேல் வைத்த போது அவ்யானை அதனைத்துதிக்கையால் பிடித்து இழுத்துக் கீழே எறிந்து காலால் மிதித்தது. அது கண்ட முனிவர் கடுங்கோபம் கொண்டு இந்திரனைப்பார்த்து, அவன் செல்வம் எல்லாம் அழியுமாறு சபித்தார். அசுரர் அமரரை வென்றனர். இந்நிலையில் இந்திரன் தேவர்களோடு திருமாலைச் சரண் அடைந்து வேண்ட, அவர் கட்டளை இட்டபடி, மந்தரமலையை மத்தாக நாட்டி, வாசுகி என்னும் பாம்பைக் கடை கயிறாகக் கொண்டு, பாற்கடலைக் கடைந்தனர். அப்பொழுது அம்மலை கடலினுள் அமிழ, தேவர்வேண்ட, திருமால் பெரிய ஆமைவடிவெடுத்து அம்மலையின் கீழே சென்று அதைத் தனது முதுகின் மீது கொண்டு தாங்கினார்.பின் அமுதம் தோன்றியது. - பாசுரம் 30

உலகளந்தது: மகாபலி என்னும் அசுர மன்னன் தன் வல்லமையால் இந்திரன் முதலிய யாவரையும் வென்று மூவுலகங்களையும் தன் வசப்படுத்தி அரசாண்டு செருக்குக் கொண்டிருந்தான். அப்பொழுது அரசிழந்த தேவர்கள் திருமாலைச் சரணடைந்து வேண்ட, அப்பெருமான், குறுகிய வடிவினனான வாமன அவதாரம் கொண்டு அந்த மாவலியிடம் சென்று தன் காலடியில் மூவடி மண் வேண்டி அது கொடுப்பதற்கு அவன் <u>இசைந்தவுடனே, திரிவிக்கிரமனாக வானத்தை அளாவி வளர்ந்து,</u>

ஓரடியால் பூலோகத்தையும், மற்றோரடியால் மேல் உலகையும் அளந்து, மூன்றாம் அடிக்காக அவன் முடியில் கால் வைத்து அவனைப் பாதலத்தில் அழுத்தி அடக்கினன். - பாசுரம் 3,17,24.

<u>இராமாவதார நிகழ்ச்சி:</u>

சுமாலியின் மகள் கைகசிக்கும் விச்சிரவசு முனிவர்க்கும் இராவணன், கும்பகர்ணன், விபீடணன், சூர்ப்பணகை எனும் நால்வர் பிறந்தனர். இவர்களுள் கும்பகர்ணன் பெருந்தவம் செய்தான். பிரமன் காட்சி தந்து வரமளிக்க வந்தபோது தேவர்கள் 'இவன் அழியாமல் வாழ எண்ணிவரம் கேட்க நினைக்கின்றான். அவ்வாறு தர வேண்டா' என்று பிரமனை வேண்ட, அவர் கலைமகளை, 'கும்பகர்ணன் வாயிலிருந்து நமக்கு விருப்பமான சொற்களை வெளிசரச் செய்க' என்றார். அவ்வளவில் அவன் 'நித்தியத்துவம்' வேண்டும் என்று சொல்ல எண்ணியபோது கலைமகள் அருளால் 'நித்திரைத்துவம்' வேண்டும் எனக் கேட்டான். பிரமனும் தந்தார். அன்று முதல் அவன் 6 மாதம் உறங்குவதும் 6 மாதம் விழித்திருப்பதுமாக வாழ்ந்தான் - பாசுரம் 10.

இலங்கைக் கோமானை அழித்தது: தசரத ராமனாய் அவதரித்த பெருமான் காடேகி இருக்கும் போது தங்கை சொற்கேட்ட இராவணன் பிராட்டியைச் சிறைவைத்திட்டான். பின் இராமபிரான் வானரர் துணையுடன் அணைகட்டி இலங்கை சென்று இராவணன் முதலியோரைப் போரில் வென்று கொன்றருளினன். - பாசுரம் 12.13.14.

<u>ஒருத்திமகனாய் பிறந்து....ஒருத்தி மகனாய் வளர்ந்து:</u>

கம்சனின் சிறியதந்தை தேவகன் என்பவர்; அவர் மகள் தேவகி. தேவகி-வசுதேவர் திருமணம் முடிந்தது. பின் கம்சன் இருவரையும் தேரில் ஏற்றிச் செல்லும்போது, அசரீரி 'இவர்களுக்குப் பிறக்கும் எட்டாம் மகளால் உனக்கு மரணம் ' என்றது. உடனே கம்சன் அவளை வெட்ட முனைய, வசுதேவர் 'இவளுக்குப் பிறக்கும் பிள்ளைகளை உன்னிடம் ஒப்படைக்கிறோம், அவர்களை நீ கொன்றுவிடு' என்று கூற, அவர்களைச் சிறையிட்டான். முதலில் பிறந்த 6 பிள்ளைகளையும் அவன் கொன்றான்.

<u>பலராம அவதாரம்: (பாசுரம் 17)</u>

எம்பெருமானால் நியமிக்கப்பட்ட யோக நித்திரை எனப்படும் மாயை, தேவகி வயிற்றில் 6 மாதமாக ஆதிசேஷ அம்சமாக

இருந்த கர்ப்பத்தைக் கொண்டு போய், வசுதேவருடைய மற்றொரு பத்தினியான ரோகிணி வயிற்றிலிருந்த வாயு ரூபமான 6 மாதக் கருப்பத்தைக் கலைத்துவிட்டு, சேர்த்தது. இவ்வாறு பலராமர் பிறந்தார்.

<u>ஸ்ரீ கிருஷ்ணாவதாரம் : (பாசுரம் 25)</u>

பிறகு திருமால் தேவகியிடம் 8 ஆம் கருப்பத்தில் கண்ணனாய் அவதரிக்க, அப்பொழுதே வசுதேவ, தேவகியரின் காலில் இருந்த விலங்குகள் இற்று விழுந்தன. அக்குழவியைக் கம்சன் கொல்லக் கூடும் என்ற அச்சத்தால், அத்தெய்வக் குழவியின் அனுமதி பெற்று வசுதேவர் அன்று இரவே திருவாய்ப்பாடியிலுள்ள நந்தகோபரது திருமாளிகையில் சேர்த்துவிட்டு, அங்க அவர் மனைவியான யசோதைக்கு மாயையின் அம்சமாய்ப் பிறந்ததொரு பெண் குழவியை எடுத்துக் கொண்டு வந்து சிறையில் சேர்த்தார். (கண்ணன் அங்கேயே வளர்ந்தான்)

பின் கம்சன் அப்பெண்குழவியைக் கொல்ல முனைந்தபோது அது காளியாகி மாறி, கண்ணன் ஆய்ப்பாடியில் வளருவதைக் கூறிமறைந்தது. அது கேட்ட கம்சன், சகடம் கொக்கு, முதலிய பல பொருள்களில் அசுரரை ஆவேசிக்கச் செய்து கண்ணனை அழிக்க ஏவினான்.

1. பூதனை அழிந்தது: இவள் நல்ல பெண்ணுருவோடு இரவிலே திருவாய்ப்பாடிக்கு வந்து, அங்குத் தூங்கிக் கொண்டிருந்த கண்ணனாகிய குழவியை எடுத்துத் தனது நஞ்சு தடவிய முலையைக் கொடுத்துக் கொல்ல முயல, பகவானான குழவி அவ்வரக்கியின் தனங்களைக் கைகளால் இறுகப்பிடித்துப் பால் உண்கிற பாவனையிலே அவள் உயிரையும் உறிஞ்சி இறக்கும்படி செய்தனன் என்பதாம் - பாசுரம் 6

2. சகடம் உதைத்த வரலாறு: நந்தகோபர் - திருமாளிகையில் ஒருவண்டியின் கீழ்ப்புறத்திலே தொட்டிலில் பள்ளிகொண்டிருந்த பெருமான், ஒரு கால் அச்சகடத்தில் கம்சனால் ஏவப்பட்ட அசுரன் ஒருவன் வந்து ஆவேசித்து தன் மேல் விழுந்து தன்னைச் சொல்ல முயன்றதை அறிந்து, பாலுக்கு அழுகிற பாவனையிலே தன் சிறிய திருவடிகளை மேலே தூக்கி உதைத்தருள, அதனால் அச்சகடு திருப்பப்பட்டுக் கீழே விழுந்து அசுரன் உட்பட அழிந்தது என்பதாம் - பாசுரம் 6, 24.

3. புள்ளின் வாய் கீண்ட வரலாறு: கம்சனால் ஏவப்பட்ட ஓர் அசுரன் (பகாசுரன்) கொக்கின் உருவம் கொண்டு சென்று யமுனைக்கரையில் கண்ணபிரானை விழுங்கிவிட அவனது நெஞ்சில் கண்ணன் நெருப்புப்போல, எரிக்கவே, அவன் பெறுக்க இயலாமல் கண்ணனை வெளியே உமிழ்ந்து மூக்கால் குத்த நினைக்கையில், கண்ணன் அவன் வாயலகு களைத்தன் இரு கைகளினாலும் பற்றி விரிவாகக் கிழித்திட்டனன் என்பதாம். பாடல் 13.

4. கேசியின் வாயைக் கீண்டெறிந்த வரலாறு: கேசி என்னும் அசுரன் குதிரையின் உருவத்தோடு ஆயர்கள் அஞ்சி நடுங்கும்படி கனைத்துத் துரத்திக் கொண்டு கண்ணபிரான் மேல் பாய்ந்து வர, அப்பெருமான் திருக்கையை நன்றாகப் பெருக்கி நீட்டி அதன் வாயில் கொடுத்துத் தாக்கிப் பற்களை உதிர்த்து உதட்டைப் பிளந்து அதன் உடலையும் இரு பிளவாக பிளந்து தள்ளினன் என்பதாம். பாடல் 7,8

5. கன்று குணிலா எறிந்த வரலாறு: கம்சனால் ஏவப்பட்ட கபித்தாசுரன் விளாமர வடிவமாகிக் கண்ணன் தன்கீழ்வரும்போது மேல் விழுந்து கொல்ல எண்ணி வந்து நின்றான். அவ்வாறே கன்றின் வடிவமாக வத்சாசுரன் வந்தான். பெருமான் கன்றின் பின் இரு கால்களையும் பிடித்து எடுத்துச் சுழற்றி விளாமரத்தின் மேல் எறிய இருவரும் இறந்து தம் அசுர வடிவத்துடனே விழுந்தனர் என்பதாம். பாடல் 24.

6. குன்று குடையாக எடுத்த வரலாறு: திருவாய்ப்பாடியில் ஆயர்கள் அனைவரும் கூடி மழை பெய்ய இந்திரனுக்குப் பொங்கலிடுவது வழக்கம். ஒரு கால் அவ்வாறு சமைத்த சோற்றை அவ்இந்திரனுக்கு இடாதபடி விலக்கிக் கோவர்த்தன மலைக்கு இடச் சொல்லித் தானே ஒரு தெய்வ வடிவம் கொண்டு அமுது செய்தருள, அதனால் இந்திரன் கோபித்து ஏழுமேகங்களையும் ஏவிக் கண்ணன் மேய்க்கும் கன்றுகள், பசுக்களுக்கும், ஆயர்களுக்கும் தீங்குதரும்படிக் கல் மழையை 7 நாள் இடைவிடாது பெய்வித்தான். அப்பொழுது பெருமான் கோவர்த்தனம் என்னும் மலையை எடுத்துக் குடையாகப் பிடித்து மழையைத் தடுத்து, எல்லா உயிர்களையும் இடையூறு சிறிதும் இன்றிப் பாதுகாத்தருளினான். - பாடல் 24.

7. வல்லானைக் கொன்ற வரலாறு: வில்விழா என்னும் ஒருகாரணத்தை ஏற்படுத்திக் கம்சன் இருவரையும் வரவழைத்தான். இருவரும் கம்சன் அரண்மனையை நோக்கிப் போகும்போது, அதன் வாசல்வழியில் தம்மைக் கொல்வதற்காக அவனால் ஏவி நிறுத்தப்பட்ட

குவலயாபீடம் என்னும் மதயானை சீறிவர, அவர்கள் இருவரும் அதனை எதிர்த்து அதன் தந்தங்கள் இரண்டையும் சேற்றிலிருந்து கொடியை எடுப்பது போல எளிதில் பறித்து அவற்றையே கொண்டு அடித்து அவ்யானையை உயிர் தொலைத்து உள்ளே சென்றனர். (பாடல் 15)

8. மல்லரை மாட்டிய வரலாறு: அவ்வளவில் அவர்களை எதிர்த்துப் பேரிட்டுக் சொல்லும்படி கம்சனால் ஏவப்பட்ட சாணூரன், முஷ்டிகன் முதலிய பெருமல்லர்கள் சிலர் வந்து எதிர்த்துப்பெரும் போர் செய்ய, அவர்களை எல்லாம் பலராமனும் கண்ணனும் மற்போரினாலேயே கொன்று வென்றிட்டனர் என்பதாம். பாடல் 8 (பின்னர்க் கம்சனைக் கண்ணபிரான் கொன்றார். (பாடல் 25)

2. அன்றி கண்ணன் பாண்டவ தூதனாய்த் துரியோதனனிடம் சென்ற பொழுது துரியன் இரகசியமாகத் தனது சபா மண்டபத்தில் மிகப் பெரிய நிலவறை ஒன்றைத் தோண்டச் செய்து அதில் அனேக மல்லர்களை ஆயுதபாணிகளாய் உள்ளே இருக்கச் செய்து, அப்படுகுழியைப் பிறர் அறியமுடியாத படி மூங்கில் பிளப்புகளால் மேலே மூடி அதன் மேல் சிறந்த இரத்தின ஆசனம் ஒன்றை அமைத்து அதன் மேல் கண்ணனை வீற்றிருக்கச் சொல்ல, அங்ஙனமே பெருமான் அதன் மேல் ஏறிய அளவில் மூங்கில் பிளப்புகள் முறிபட்டு ஆசனம் உள்ளிறங்கிப் பிலவறையில் செல்லும் அளவில், அப்பெருமான் பெரிய விசுவரூபம் எடுத்துப் பலகைகளையும் கால்களையும் கொண்டு எதிர்க்கவே, அப்பிலவறையில் இருந்த மல்லர்கள் அனைவரும் அழிந்தனர் என்ற கதையையும் கொள்ளலாம். -பாடல் 8

---

**"கண்ணி நுண் சிறுத்தாம்பினால் கட்டுண்ணப்**
**பண்ணிய பெருமாயன் என் அப்பனில்**
**நண்ணித் தென் குருகூர் நம்பி என்றக்கால்**
**அண்ணிக்கும் அமுதூறும் என் நாவினுக்கே"**

**-கண்ணி நுண் சிறுத்தாம்பு-1**

## திருப்பாவைச் செய்யுள் முதல் குறிப்பு அகராதி

## துணை நூற்பட்டியல்

1. (பிரதிவாதி பயங்கரம்) அண்ணங்கராசாரியர் சுவாமி ; - திருப்பாவை-திவ்வியார்த்த தீபிகை, கிரந்தமாலா ஆபிஸ், காஞ்சிபுரம், 1965

2. (பிரதிவாதி பயங்கரம்) அண்ணங்கராசாரியர் சுவாமி ; - திருப்பாவை நறுமணம், கிரந்தமாலா ஆபிஸ், காஞ்சிபுரம், 1963

3 அனந்தபத்மநாபன் - திருப்பாவை வினா விடை செவ்வாய்ப்பேட்டை, சேலம் 1983

4. ஆசார்யா, பி.ஸ்ரீ.ஸ்ரீ., - கோதை (அ) காதல் வெள்ளம், கலைமகள் காரியாலயம், சென்னை4, 1973

5. இராக வையங்கார், மு., - ஆராய்ச்சித் தொகுதி, தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 1984.

6. இராக வையங்கார், மு., - ஆழ்வார்கள் காலநிலை, மணிவாசகர் நூலகம், சிதம்பரம், 1981.

7. உலகநாதன், வி.மு., - ஆண்டாள் பாவையும் அழகுத்தமிழும் பகுதி-I வாசுகிப் பதிப்பகம், சென்னை12, 1988.

8. கலைக்களஞ்சியம் - பகுதி7-தமிழ்வளர்ச்சிக்கழக வெளியீடு- சென்னை-5.

9. உ.வே. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் ஸ்வாமி, - திருப்பாவை வ்யாக்யானங்கள், (பதிப்) புத்தூர் அக்கிரகாரம், திருச்சி-1991.

10. உ.வே. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் ஸ்வாமி, - ஆண்டாள் சந்திரகலாமாலை, (பதிப்) புத்தூர் அக்கிரகாரம், திருச்சி-1980.

11. உ.வே. அலங்காரம் தேவராஜய்யங்கார் (உரை) - ஆண்டாள் சந்திரகலாமாலை, புத்தூர் அக்கிரகாரம், திருச்சி-1980.

12. கிருஷ்ணவேணியம்மையார்,எஸ்., - செம்பொருள், தி.தி. தேவஸ்தானவெளியீடு 1952.

13. வை.மு.கோபால கிருஷ்ணமாசாரியர் - திருப்பாவை உரை- குவை பப்ளிகேஷன்ஸ், திருவல்லிக்கேணி, சென்னை-5. 1976

14. (சுவாமி) சித்பவானந்தர், (உரை) - ஸ்ரீமத் பகவத் கீதை, ஸ்ரீராமகிருஷ்ண தபோவனம், திருப்பராய்த்துறை, 1985

14. சுப்புரெட்டியார், ந., - முத்திநெறி, பாரிநிலையம், சென்னை.1 1982

16. பத்மாஸனி அம்மாள் - சூடிக்கொடுத்தவள், திருவரங்கம் பதிப்பகம், இராசிபுரம், 1994

17. பாலசுப்பிரமணியன், சி. - ஆண்டாள், (சொற்பொழிவுகள்) அண்ணாமலைப் பல்கலைக்கழகப் பதிப்பு, அண்ணாமலை நகர், 1984.

(மற்றும் கோமதி வி.ஆர்.பாவைப்பாட்டு என்னும் தலைப்பில் ஆலய தரிசனம் மாத இதழில் எழுதிவரும் கட்டுரைகள், அடியேன் கடந்த 40 ஆண்டுகளாக எழுதிச் சேர்த்து வைத்த குறிப்புகள் முதலியனவும் அடங்கும்)

ஸ்ரீ

## ஆசிரியரின் பிற நூல்கள்

1. உலகப் பெருங்கவிஞர் கம்பர்- தமிழக அரசின் முதற் பரிசுபெற்ற நூல் 1986
2. இக்கால இலக்கியம் - ஒரு நோக்கு
3. இலக்கிய ஒப்பாய்வியல் - ஒரு நோக்கு
4. எம்பிரான் சதகம் - உரை
5. தொண்டை நாடும் வைணவமும் - டாக்டர் பட்ட ஆய்வு நூல்
6. நாலாயிர திவ்வியப் பிரபந்தம் - தெளிவுரை (9 பகுதிகள் - 4700 பக்கம்) வெளியீடு வர்த்தமானன் பதிப்பகம் - தி.நகர், சென்னை17
7. அஷ்டப்பிரபந்தம், ஞானசாரம், பிரமேயசாரம்-மேல்படி- பதிப்பகம் வெளியீடு- (அச்சில்)
8. ஸ்ரீவைணவம்.

இந்நூலாக்கத்திற்கு மனம் உவந்து நிதிஉதவி செய்த அன்பர்களின் விவரம் வருமாறு: இவர்கள் அனைவருக்கும் எம்பெருமானின் திருவருள் கிடைக்க வேண்டுகிறேன்.

| | அன்பர்கள் | ரூபாய் |
|---|---|---|
| 1. | திரு.டாக்டர். எஸ்.குமார் M.B.B.S., D.C.H.<br>இணை இயக்குனர், மருத்துவத்துறை,<br>திருமதி. ரேவதி, காஞ்சிபுரம் மாவட்டம். | 501 |
| 2. | திரு.ஜி.சுகுமாரன் M.Com.,M.Ed.,<br>தலைமையாசிரியர், அ.ஆ.மே.பள்ளி<br>திருமதி.ராணி, வந்தவாசி. | 501 |
| 3. | திரு.கே.அரசு D.M.E.,<br>கொளத்தூர், சென்னை-99. | 501 |
| 4. | திருமதி.விஜயலட்சுமி<br>கொளத்தூர், சென்னை-99. | 501 |
| 5. | ஸ்ரீநாதமுனி ஸ்வாமிகள்<br>வந்தவாசி வைணவ சபை சார்பாக. | 501 |

